தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண் – 146.

சாமிநாத தேசிகர் இயற்றிய

# இலக்கணக் கொத்து

மூலமும் உரையும்

பதிப்பாசிரியர்:

பண்டித வித்துவான்,

**தி. வே. கோபாலையர்** எம். ஏ., பி. ஓ. எல்.,




இயக்குநர்:

சரசுவதி மகால் நூலகம்,

தஞ்சாவூர்,

கி. பி. 1990]

விலை ரூ. 65–00

# BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title of the Book | Ilakkanakotthu |
| Editor | T. V. Gopalier |
| Publisher | Director, Sarasvati Mahal Library, Thanjavur. |
| Publication No. | 146 |
| Language | Tamil |
| Edition | II Edition |
| Date of Publication | October 1990 |
| Paper used | 14 2 kg. Double Demy-Seshasayee |
| Size of the Book | 21 × 14 cm |
| Printing type used | 10 pt. |
| No. of Copies | 1200 |
| Number of pages | 442 |
| Price | Rs. 65 / (Rupees Sixtyfive only) |
| Printer | Sri Saravana Acchagam Sirkali. |
| Binding | Section Stitching Half Calico Binding |
| Subject | Grammar |

# பொருளடக்கம்

# Publisher's Preface

It is with great pleasure, we place before the public our edition of Ilakkana Kothu, a concise treatise on many of the minute points of grammar which ordinarily evade the understanding of the students. This work contains criticisms and observations on linguistics in general and it will be interesting to know many of the modern trends in linguistic studies, consciously or unconsciously, find their germe in these observations exhibiting the underlying unity of human mind in deeper levels. The author of this work is a venerable ascetic of great learning andausterity belonging to Thiruvaduthurai monastery bent on making the people to aspire for higher values leading virtuous life spreading real happiness. For him grammar is not a set of laws in accordance with which men and women frame their speech, but rather a codification of rules drawn up from observation of the language habitually used in speech and writing of the educated people and thinkers of higher order - not in conformity with the whims and fancies of the ignorant and vulgar.

The author Swaminatha Desigar known also as Isana Desigar is one of the three great

Luminaries of Grammatical Studies of the later part of the 17th and early part of the 18th century, the other two being Vaithianatha Navalar the author of Illakana Vilakkam and Subramania Dikshitar, the author of Prayoga Vivekam. All these three works are not easy of understanding without proper aids; so we undertook to publish all these three with proper aids and have completed Ilakkana Vilakkam except for the last three chapters. Now Ilakkana Kothu is before the public and Prayoga Vivekam is in print.

We are thankful to the able Editor Panditha Vidwan Thiru T. V. Gopala Iyer, M. A., B. O. L., and our energetic Assistant Librarian, Thiru M. Seeralan, B. A., who took unique interest in getting these volumes much before the scheduled time. We are in duty bound to mention the good services of Messrs Sri Saravana Printer's, Sirkali, for their speedy and handsome printing.

We wish to record our gratitude to the Government of Tamil Nadu for their annual publication grant which has made publications like this possible.

*Thanjavur,*
26—9—1990

N. KANDASWAMY,
*HONORARY SECRETARY T.M.S S M.Library*

## பதிப்பாசிரியர் முன்னுரை

பதினேழாம் நூற்றாண்டில் தமிழகத்தில் வாழ்ந்த இலக்கணப் பெரும் புலவர் மூவருள் சாமிநாத தேசிகரும் ஒருவர். இவர் தமிழின் சொல்லிலக்கணம் பற்றிப் பல இலக்கண நூல்களிலும் உரைகளிலும் இலை மறை காய் போலப் பொதிந்துகிடந்த அருஞ்செய்திகள் பலவற்றைத் தொகுத்து இலக்கணக்கொத்து என்ற அரிய சிறு நூல் எழுதி அதற்குத் தாமே உரையும் வரைந்துள்ளார்.

இலக்கணக்கொத்து என்ற இந்நூல் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்களால் நன்முறையில் பதிப்பிக்கப்பெற்றது. சுருக்கமான உரையையுடைய இந்நூல் இக்காலத்தவர் கற்றற்கு எளிமைத்தாய் இல்லை.

''அச்சுப்படியோடு தஞ்சை சரசுவதிமகால் கையெழுத்துப் படியையும் ஒப்பு நோக்கிப் போதிய விளக்கவுரையுடன் இந்நூலைப் பதிப்பித்தல் வேண்டும்; தொடக்கத்தில் நூற் செய்தி, உரைநலன்கள் முதலியவை நன்கு விளக்கி வரையப்படல்வேண்டும்; நூற்பாக்களும், உரைத் தொடர்களும் கற்பார் நலம் கருதிச் சந்தி பிரிக்கப்படல் வேண்டும்; பல அடிகளான் அமைந்த நூற்பாத் தொடர்களைப் பிரித்துத் தனித்தனியே அமைத்து அவற்றை ஒட்டி அவற்றின் உரை பதிப்பிக்கப்படல் வேண்டும்;

தேவையான இடங்களிலெல்லாம் தொல்காப்பியம் முதலிய நூற் செய்திகளோடு வீரசோழியம், பிரயோகவிவேகம் முதலிய நூற் செய்திகளும் குறிப்பிடப்படல் வேண்டும். பிற்சேர்க்கையாக எடுத்துக்காட்டுப் பாடல்கள், நூற்பாக்கள் சொல், சொற்றொடர்கள், இந்நூலின் இலக்கணச் செய்தி முதலியவற்றின் அகரவரிசை இடம் பெறல் வேண்டும்'' என்று குறிப்பிட்டுத் தஞ்சை சரசுவதிமகால் கௌரவ காரியதரிசி முதுபெரும் புலவர் திருவாளர் **நீ. கந்தசாமிப்பிள்ளை** அவர்கள் எனக்கு ஆணையிட்டாராக, அவ்வாணையைப் பின்பற்றி அவர் குறிப்பிட்ட வகையில் இந்நூலினைப் பதிப்பித்துள்ளேன்

இந்நூலைப் பதிப்பித்தற்கண் எனக்குப் பல்லாற்றானும் உதவிய என் இளவல் வித்துவான். **கங்காதரன்**, M. A, உள்ளிட்ட என் உடன் பிறந்தார்களுக்கும், இந்நூலை விரைவில் செம்மையாக அச்சிட்டளித்த **சீர்காழி ஸ்ரீ சரவண அச்சகத்தாருக்கும்** என் ஆசியையும் நன்றியையும் முறையே தெரிவித்துப் பற்பல இடையூறுகளுக்கிடையே இந்நூலை யான் பதிப்பிக்கும் வாய்ப்பினைத் தோன்றாத் துணையாய் எனக்கு அருளிய ஐயாறன் அடியிணை இறைஞ்சி, என் அயர்வான் ஏற்பட்டிருக்கக்கூடிய பிழைகளைப் பொருத்தருளுமாறு தமிழ்கூறு நல்லுலகத்தை வேண்டி என் தமிழ்ப் பணியினைத் தொடர்கின்றேன்.

**தி. வே. கோபாலையர்,**
46, மேல மடவளாகம்
திருவையாறு.

# இலக்கணக் கொத்து



## ஆசிரியர் வரலாறு

பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கணப் பெரும் புலவர் மூவருள் மூன்றாமவராக நம்மால் போற்றப்படும் சாமிநாத தேசிகர் திருநெல்வேலியில் சைவ வேளாளர் மரபில் தோன்றியவராவர்.

மாணாக்கர்க்கு ஆசிரியர் கசையடி கொடுப்பினும், அதனை விருப்பாயேற்றுக் கல்வியில் பேரார்வத்துடன் ஆசாற்பணிந்து கல்வி கற்றலை மாணாக்கர் விரும்பிய அக்காலத்தில், போதகாசிரியர் கள்ளமின்றி அரிய செய்திகளை மாணாக்கருக்குக் கற்பித்தலில் நாட்டமின்றி வாணாள் கழித்துவந்தனர். அக்காலத்தில் பொருட் செல்வமும் கல்விச் செல்வமும் ஒருங்கே அமையப்பெற்ற மயிலேறும் பெருமாள் என்ற சைவவேளாளர் திருநெல்வேலியில் வாழ்ந்துவந்தார். அவரே இவ்வாசிரியருக்குத் தமிழ் இலக்கண இலக்கியங்களை ஐயந்திரிபு அறக் கற்பித்தவராவர். அக்காலத்தில் வடமொழி தமிழ்மொழி எனும் இரு மொழிக்கும் இலக்கணம் ஒன்றே என்ற கொள்கை நன்கு நிலவியிருந்ததாதலின், 'வடமொழியறிவின்றித் தமிழறிவு நிரம்பாது' என்ற கருத்தான், இவ்வாசிரியர் அம் மாவட்டத்துச் செப்பறைப்பதியில் வாழ்ந்த கனகசபாபதி சிவாசாரியார் என்ற வடமொழிப் பேரறிஞரிடம் வடமொழியையும் நன்கு கற்றார்.

'கல்விப்பயன் பிறவிப்பிணி தீர்த்தலே' என்ற எண்ணம் முன்னைப் பிறப்பில் செய்த தவத்தான் கைவரப்பெற்ற இவ்வாசிரியர், திருவாவடுதுறையாதீனத்தை அடைந்து, சைவ சித்தாந்த நூல்கள் பலவும் உளங்கொண்டு கற்றுச் சைவ தீட்சை முதலியன பெற்றுத் துறவியாகி, பல்லாண்டுகள் தம் குருமகா சந்நிதானமாக வீற்றிருந்த அம்பலவாண தேசிகருக்கு அணுக்கத் தொண்டுபுரிந்து தமக்கும் பிறருக்கும் பயன்தருவனவாகிய கோயில்விழாக்களைக் குறைவின்றி நடத்திப் பூசைகளைச் சிறப்பித்து, பின் அவர் அருளாணையின்வழி ஒழுகி ஈசானதேசிகர் என்ற தீட்சாநாமத்துடன் திருநெல்வேலி ஈசான மடத்துத் தலைவராய்ப் பல்லாண்டுகள் தொண்டாற்றிவந்தார். இவர் தமக்கும் பிறருக்கும் பயன்சாரா அட்டமா சித்திகளை அருமையாய்த் தேடுவதில் காலம் கழித்தாரல்லர்.

அக்காலத்தில் வைத்தியநாத தேசிகரின் இலக்கண விளக்கமும் சுப்பிரமணிய தீட்சிதரின் பிரயோகவிவேகமும் ஆசிரியர்தம் உரையொடு வெளிவாரா நின்ற செய்தியைக் கண்ணுற்று, 'தமிழில் உள்ள அரிய இலக்கண விதிகளை உலக நடை எடுத்துக்காட்டுக்களைப் பெரும்பான்மையாகக் கொண்டு வெளியிடின், பேரறிவோர் பிறர் நலனுக்குச் செய்த தொண்டாக என்றும் உலகிற்குப் பயன்படுமே, என்ற அருளுள்ளத்தால், வடமொழியில் சொல்லிலக்கணமே சிறப்பாக இலக்கணம் என்ற பெயரில் போற்றப்படுவதனை உட்கொண்டு, தாமும் தமிழின் சொல்லிலக்கணச் செய்திகளுள் அரியன பலவற்றைத் தொகுத்துப் பாயிரம் நீங்கலான வேற்றுமையியல் - வினையியல் - ஒழிபியல்- என்ற மூன்று இயல்களைக்கொண்ட இலக்கணக் கொத்து என்ற நூலை உரையுடன் யாத்தார். இலக்கண இலக்கியங்களை முறையே கற்று வல்லவர்களுக்கு ஏற்படும் ஐயங்களை அகற்றக் கூடிய நிலையில் 131 நூற்பாக்களைக் கொண்டு இந்நூல் அமைந்துள்ளது. இவ்வாசிரியர் தசகாரியம் முதலிய ஞான நூல்களையும் செந்தில்கலம்பகம் முதலிய பிரபந்தங்களையும் யாத்தாராயினும், இவருக்கு இறவாப் புகழ் தந்து விளங்குவது இவ்விலக்கணக் கொத்து நூலேயாகும்.

இவர் தாம் ஈசான மடத்துத் தலைவராய் வீற்றிருந்த காலத்துச் சங்கரநமசிவாயப் புலவர் முதலியவர்களுக்கு இயற்றமிழை ஐயந்திரிபு அறக் கற்பித்துப் பின் ஞான நூல்களையும் உபதேசித்த போதகாசிரியராகவும் ஞானாசிரியராகவும் விளங்கி, முதுமையில் இறைவன் திருவடியை எய்தினார்.

இவர் காலத்து இலக்கணவிளக்க நூலுக்குச் சூறாவளி வரைந்த சிவஞான முனிவர், நன்னூல் விருத்தியின் வேற்றுமை வினை பற்றிய பகுதிகளில் இவருடைய இலக்கணக் கொத்துச் செய்திகள் பலவற்றையும் எடுத்து மொழிந்தமை ஒன்றே, இவர் புலமை அனைவரும் பாராட்டுதற்குரித்தாயிருப்பதற்குச் சான்று பகரும். இவர்தம் புகழ் வாழ்க!

---

# நூலமைப்பு

பதினேழாம் நூற்றாண்டில் வரையப்பட்ட இலக்கணக் கொத்து என்னும் சொல்லதிகாரம் பற்றிய சிறு நூல் அந் நூற்றாண்டுவரை தமிழில் வந்துள்ளசொல்லமைப்பு சொற்றொடர் அமைப்பு என்பன பற்றிய பல அரிய செய்திகளை 131 நூற்பாக்கள் வாயிலாகவும், அவற்றின் உரைவாயிலாகவும் வெளிப்படுகிறது

இந்நூல், பாயிரமாக அமைந்துள்ள பன்னிரண்டு நூற்பாக்களோடு வேற்றுமையியல் - வினையியல் - ஒழிபியல் - என்ற முப்பகுப்புக்களை உடையது.

தொடக்கத்தில் தாம் பிறவிப்பிணி நீங்கி வீடுபேறு அடைவதற்குத் தமக்கு அருள் புரியுமாறு முறையே விநாயகப் பெருமானையும் சிவபெருமானையும் முருகப்பெருமானையும் ஆசிரியர் வணங்குகிறார்.

அடுத்துத் தமக்கு ஞானகுருவாய் அருள்செய்த திருவாவடுதுறை அம்பலவாண தேசிகரையும், தமக்கு வடமொழி ஆசிரியராய் அமைந்த கனகசபாபதி சிவாசாரியாரையும், தமிழாசிரியராய் அமைந்த மயிலேறும்பெருமாள் மகிபதியையும் வணங்கி, அவர்தம் அருள்பெற்று இலக்கணக் கொத்து என்னும் பெயரிய இந்நூலை இயற்றத் தொடங்குகிறார்.

வடமொழியும் பதினெண்திசை மொழிகளும் ஆகிய பத்தொன்பது பாடைகளின் இலக்கணங்களிடையே மாறுபாடு உண்டு. ஒவ்வொரு மொழியிலும் தோன்றும் பல நூல்களிடையும் மாறுபாடு ஏற்படும். ஐந்திலக்கணம் கூறும் ஒவ்வொரு நூலினும் எழுத்து - சொல் - பொருள் - யாப்பு - அணி என்ற ஐந்தனுள் ஒன்றற்குஒன்று மாறுபடுதலும் உண்டு. ஓரதிகாரத்தின் கண்ணும்

ஓரியலில் அறிய விதி பிறிதோரியலில் ஒழிக்கப்படுதலும் உண்டு. ஓரியலுக்குள்ளும் ஒரு நூற்பாவிதியினைப் பிறிதொரு நூற்பா விலக்குதலும் கூடும். ஒரு நூற்பாவினுள்ளும் முன்னர்க் கூறிய விதி பின்னர் விலக்கப்படுதலும் உண்டு.

இவ்வாறாக நூல் இயற்றிய ஆசிரியர் தம் கருத்தினை உள்ளங்கொள்ளாது, உரையாசிரியர்கள் தத்தம் கருத்துப்பற்றி உரைவரைதலும் உண்டு. பாடஞ்சொல்லும் ஆசிரியர், உரைவாசகங்கட்கு உரை வரைந்தவர் கருத்தை உட்கொள்ளாது, தத்தம் கருத்தில் பட்ட பொருள்களைக் கூறுவர். ஒரே விதிக்குப் பல பெயர் இடப்படுதலும் உண்டு. ஒரே பெயருக்குப் பல விதிகள் அமைதலும் உண்டு. நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியர் மூவரும் முக்குணவயத்தான் முறை மறந்து கூறுவர். இவற்றை எல்லாம் எவர் பகுத்து அறிய முற்பட்டாலும், அவத்தை வசப்பட்டு முறைமாறிப் பொருள் செய்யும் நிலையும் ஏற்படும். மதி நுட்பமோடு மிக்க கலை கற்பினும், ஊழ்வினை வயப்பட்டு, விதி விலக்கு இவற்றை உள்ளவாறு உணராது போதலும் உண்டு. ஆதலின், விதிவிலக்குகளை அளவிட்டு அறுதியாகக் கூறுதல் இயலாது. சொல்லின் கூட்டமும் பொருளின் கூட்டமும் எல்லையிட முடியாது பரந்துகிடப்பன. 'விதி – விலக்கு – சொற்கூட்டம் – பொருட்கூட்டம் – என்ற நான்கனுள், சிறப்பான சிலவற்றுள்ளும் மறந்தவை போக எஞ்சியவற்றைக் கற்சிறார்களுக்குத் தொகுத்துக் குறிப்பிடும் இத்தொகுப்பு, ஒரு பெருநூலாகாது' என்ற செய்தியை உட்கொள்ளும் சான்றோர்கள் இதன்கண் குறைகண்டு இகழார். முறையறியாக் கீழோர்கள் எதனையும் இகழ்ந்து கூறுதல் இயல்பாகும். இவ்வாறாக, இந்நூல் இயற்றப்பட்டதன் காரணம் விரித்துக் கூறப்பட்டுள்ளது.

அடுத்து, இந்நூலை அறிவதற்குரிய கருவிகள் பத்தனையும் கூறத்தொடங்குகிறார். "வடமொழி இலக்கணங்கள் சிலவாகவும், தொல்காப்பியம் பழைய செய்யுட்கள் ஆகிய இவற்றில் காணப்படும் இலக்கணங்கள் பலவாகவும் இந்நூலுள் கூறப்பட்டுள்ளன. புதிய செய்தி எதுவும் கூறப்படவில்லை. தொல்காப்பியம் திருக்குறள் முதலிய இலக்கண இலக்கியங்களில் வடமொழிமரபுகள் சிலவாயும், தமிழ்மரபுகள் பலவாயும்

வந்துள்ளன. தமிழ்மொழியில் வல்லவராய், வடமொழிவிதிகளுள் சிலவற்றை அறிந்தவர்கட்கே இந்நூல் பயன்படும் வடமொழி வேறு தமிழிலக்கணம் ஒன்றனையே இந்நூல் குறிப்பிடவில்லை. ஏனெனின், பண்டையோர்கள் இலக்கணம்—இலக்கியம்—ஏது—நிமித்தம்—சாத்திரம்—சூத்திரம்—தந்திரவுத்தி—பகுதி—விகுதி பதம் - பதார்த்தம் - ஆதி - அந்தம் - அகாரம் - மகாரம் - உதாரணம் - மாத்திரை - உவமை - உருவகம் - விகற்பம் - சந்தி - விதி - அலங்காரம் - காலம் - இலேசம் - காரகம் - ஞாபகம் - விசேடணம் - விசேடியம் - விகாரம் - அதிகாரம் - குணம் - குணி முதலிய சொற்களையும், பிறிதின் இயைபின்மை நீக்குதல் - பிறிதின் இயைபு நீக்குதல் முதலிய மொழிபெயர்ப்புக்களையும் குறிப்பிட்டுள்ளனர் தமிழ்நூல்கள் பலவாக இருப்பினும், ஒன்றுகூடத் தனித்தமிழில் அமையவில்லை. தமிழுக்கென்றே உரிய சிறப்பெழுத்துக்கள் ற - ன - ழ - எ - ஒ என்ற ஐந்தே. இவ் வைந்தெழுத்துக்களைக்கொண்டே தனித்து ஒருமொழி இயங்கும் என்றுகூற அறிஞர் நாணுவர். வடமொழி தமிழ்மொழி என்னும் இருமொழியினும் இலக்கணம் ஒன்றே என்று கொள்க. எளிய விதிகளை யாவரும் அறிதல்கூடும். அரிய விதிகளைக்கூறின், விளங்கிக்கொள்பவர் இரார். எளிய விதிகளைக் கூறுதலால் பயனில்லை என்பதனை உட்கொண்டு, பயன்படும் விதிகள் சிலவே ஈண்டுக் கூறப்பட்டுள்ளன. முன்னுக்குப்பின் மாறுபாடு தோன்றின், அவற்றுள் ஒன்று பிறன்கோள் கூறலாக அமையும் என்பது கொள்க. முன்கூறியனவே, பின் ஒரு காரணம்பற்றி மீண்டும் கூறப்படின் அவற்றை அநுவாதம் என்று கொள்க. தமிழ்மரபல்லா விதிகள் சில கூறப்பட்டுள்ளன; அவை வடமொழி மரபு பற்றிய விதி எனக்கொள்க. ஐந்திலக்கணங்களுள், சொல்லிலக்கணம் ஒன்றனையே வேற்றுமை - வினை - ஒழிபு - என்ற முப்பகுப்புக்களாக்கி விளக்கியுள்ளேன். பலகாலும் பழகினும் தெரியாத செய்திகள் தொல்காப்பியம், திருக்குறள், திருக்கோவையார் என்ற மூன்று நூல்களினும் காணப்படும். அவற்றுள்ளும் இலையேல் வடமொழி நூல்கள் வாயிலாக உணரப்படும்'' என்று விளக்கியுள்ளார்.

''சில நூற்பாக்களின் கருத்துக்கள் உணர்வதற்கு அருமையானவாய் இருப்பின், முன்னும் பின்னும் உள்ள நூற்பாக்களை நோக்கி அவற்றின் கருத்துக்களை உள்ளவாறு

அறிக. சில செய்திகளை நேரே நூற்பாக்களால் உணர்தல் இயலாதாயின், உபலக்கணத்தால் உணர்க. முன்கூறிய விதிக்குப் பின் கூறிய விதி மாறுபட்டிருப்பின், ஒன்றனை வேறொரு நூல் குறிப்பிடும் கருத்தாகக் கொள்க. சில நாள்களே கற்றால், சில செய்திகளைக்கூட உள்ளவாறு அறிதல் இயலாது; பல நாள்கள் கற்பின், பற்பல செய்திகள் போதரும். விரைவாக நூல்களைப் பார்த்தால், ஒன்றும் புலனாகாது; விரையாது கற்றால், ஒன்றும் புலனாகாமல் போகாது. இனி வாசிக்கவேண்டியவற்றில் உள்ளத்தைச் செலுத்தாது, முன்பு வாசித்து உணர்ந்தவற்றில் உள்ளத்தைச் செலுத்துக. உரைகளைப் பலகாலும் நோக்குதலை விடுத்து நூற்பாக்களையே பலகாலும் நோக்குக. மந்தன் மழை போலப் பொருள்கொடுப்பினும் அவனை விடுத்து, அறிவாளனுக்குப் பொருளுதவி செய்தாவது அவனோடு பழகுக. வேற்றுச் செய்திகளில் உள்ளம் ஈடுபட்டிருப்பின், ஆசிரியன் ஆகி இருப்பவன்கூட, நூலில் ஈடுபடுதலைத் தவிர்க. மாணாக்கன், கற்பிக்கும் ஆசிரியன் சொற்றவாறு ஒழுகிக் கல்வி கற்க''.

''இவ்வளவு சிறப்பினவாகிய கருவிகள் பலப்பல உள. அவை பல நூல்களிலும் கூறப்பட்டுள்ளன''.

''நல்லவர்களுக்கு இதுபோன்ற சிறப்புடைய நூல்கள் கிடைப்பின் - தம்மினும் கடையார் இலர் என்று கருதி, இறுமாப்பின்றிக் கற்றவரை இகழாது, நற்குணம் நற்குலம் நற்கலை நற்றவம் இவை உடையவரைப் பணிந்து, பழிபாவங்களுக்கு அஞ்சிப் புண்ணியம் புகழ்களைக் காத்து, பிறப்பு இறப்பு ஆகிய துயரங்களிலிருந்து பிழைத்து, இரைதருவாருக்குப் பயன்தரும் பசுக்களைப்போலப் பயன்படுவர். ஆதலின், இத்தகைய நூல்களை அவர்களுக்கே பாடம் சொல்லுதல் வேண்டும்''.

''அல்லோர்க்கு இதுபோன்ற நூல்கள் கிடைப்பின் - எம்மினும் உயர்ந்தார் இலர் என்று இறுமாப்புற்று இகழ்ந்து, நற்குலம் நற்குணம் நற்கலை நற்றவம் இவை உடையாரைப் பணியாது ஒழுகி, பழிபாவங்களைத் தேடி, புண்ணியம் புகழ்களைப் போக்கிப் பிறப்பு இறப்புக்களில் தவறு செய்து, பாம்பிற்கு இரையளிப்பவருக்கு அது தீப்பயன் அளிப்பது போலத் தீங்கே தருவர் ஆதலின், அவருக்குப் பாடம் சொல்லுதல் நன்றன்று''.

"முற்காலத்தில் போதகாசிரியர்கள் 'அருமையான விதிகள் வழக்கு ஒழியாது வழங்குதல் வேண்டும்' என்பதற்காகவே பலருக்கும் பாடம் சொல்லுவர். இக்காலத்தார் தமக்கு யாதாயினும் ஒரு பயன் நோக்கிச் சில உரைப்பினும், மனம் பொருந்தி உரையார்; பிறருக்கு உரையாததோடு கல்விப் பயனைத் தாமும் அனுபவியார்; வாயுறைவாழ்த்து, செவியறிவுறூஉமுதலியவற்றுள் நூல்கள் அறிவுறுத்தினும், அவ்வறிவுரை வழி நடவார். உலகியல் இவ்வாறு கீழ்மையுற்றுவருதலின், அரிய விதிகளைத் திரட்டி இவ்விலக்கணக்கொத்து அமைக்கப்பட்டுள்ளது. இது ஒரு நூலன்று; பல நூல்களின் பல அருங்கருத்துக்களையும் உட்கொண்டதாகும். ஆதலின் பல நூல்களையும் ஆய்ந்து அவற்றின்கண்தோன்றும் ஐயம் அறுத்தலைக் கருதுவார்க்கே இந்நூல் பயன்படும். சில நூல்களை மாத்திரம் கற்றோருக்கு இது பயன்படாது" என்று ஆசிரியர் வலியுறுத்தியுள்ளார். இந்நூல் உரை நன்கு விளங்குதல் வேண்டும் என்ற கருத்தால் செய்யுள் எடுத்துக்காட்டுக்கள் சிலவாகவும், உலக வழக்கு எடுத்துக்காட்டுக்கள் பலவாகவும் தரப்பட்டுள்ளன.

இலக்கணவிளக்கம் பிரயோகவிவேகம் என்பன போல, இந்நூலும் நூலாசிரியரே வரைந்த உரையைக் கொண்டு மிளிர்வதாகும். இச் செய்திகள் பாயிரத்தால் உணரப்படுகின்றன.

---

# வேற்றுமையியல்

வினைமுதல், விளி, செயப்படுபொருள், கருவி, கொள்வோன், நீக்கம், குறை, இடம், என்ற எட்டும் வேற்றுமையாம் என்று வட நூல்கள் கூறும். தமிழ் நூல்களில் வேற்றுமை ஏழு என்றும், ஆறு என்றும், எட்டு என்றும் கூறப்பட்டுள்ளன.

விளி வேற்றுமையும் ஆறும்வேற்றுமையும் நீங்கலான ஏனைய ஆறு வேற்றுமைகளும் வினையால் தம் பொருள் முடிவு அமையுமாயின், காரகம் என்ற பெயரைப் பெறும். ஆறும் வேற்றுமையும் ஒரோவழி அருகி வினைகொண்டு முடியும் காலத்துக் காரகமாகும். 'நாராயணன் ஓராயிரம் பூக்களைக் கரத்தால் கொய்து அரற்குக் கொடுத்துச் சக்கரச் சிறுமையின் நீங்கிப் பாற்கடல்கண்ணே பள்ளிகொண்டான்' என்ற தொடரில், விளி குறை என்ற இரண்டும் நீங்கலான வேற்றுமைகள் ஆறும் காரகமாக அமைந்துள்ளன. இவ்வேற்றுமைகள் ஆறனுள் ஒவ்வொன்றும் காரகமாகும்.

உருபு, வேறுஉருபு, சொல்லுருபு என்று வேற்றுமை உருபுகள் மூன்றாகப் பெயரிடப்பட்டுள்ளன. அவை உரிமையாகவும், ஒப்பாகவும், பொருள் மாறுபட்டும் வரும். இவ்வுருபுகளுள் ஏழாம் வேற்றுமை உருபுகள் உருபு-வேறுஉருபு-சொல்லுருபு என்பன ஆகியும், உருபினை ஏலாத பெயரே ஆகியும், உருபு ஏற்ற பெயரே ஆகியும், உருபு மறைந்த பெயரே ஆகியும், தொடர்ந்து இரண்டு உருபுகள் வரின் அவற்றுள் ஒன்று உருபாகவும் மற்றொன்று பெயராகவும் ஆகியும், உருபு ஏற்கும் பெயருக்குப் பின்னர் வரும் முறைமைமாறி முன்னர் வந்தும் பயன்படும். 'அவன் தலை ஐந்து, அவன் கடைவெல்லம்' என்றாற்போல வேற்றுமை உருபுகள் அல்லாதனவும் வேற்றுமை உருபுகளைப் போல வடிவால் தோற்றமளித்தலும் உண்டு. வேறுபடுதலால் வேற்றுமை, வேறுபடுத்தலால் வேற்றுமை, வேற்றுமையைக் கொண்டுமுடிதலால்வேற்றுமைஎன்ற பொருள்களை உட்கொண்டு,

உருபு ஏற்ற சொல்லையும், உருபையும், உருபு நோக்கிய சொல்லையும் வேற்றுமை என்றபெயராலேயே குறியிட்டுரைப்பார். வேற்றுமையுள் உருபினை ஏற்ற சொல் பலபொருள்படுதலும் உண்டு. உருபு நோக்கிய சொல் பலபொருள்படுதலும் உண்டு. ஐ - கு - என்று இரண்டாம் வேற்றுமைக்கும் நான்காம் வேற்றுமைக்கும், ஒவ்வொன்றற்கு ஒவ்வோருருபே உண்டு. ஏனைய வேற்றுமைகளுக்குப் பல உருபுகள் வரும். ஓர் உருபே பலபொருள் தருதலும் உண்டு. ஒரே பொருட்கண்ணே பல வேற்றுமைகள் வருதலும் உண்டு. எட்டு உருபுகளும்-பகாப்பதம், பகுபதம்,இருமொழித்தொடர்,பன்மொழித்தொடர்,வினைமுற்றுப் பெயர், குறிப்புமுற்றுப்பெயர், தொழிற்பெயர் இவற்றை ஒட்டிப் பயன்படும்.

எழுவாய்வேற்றுமை உருபுபற்றி ஆசிரியர்களிடையே எழுவகைக் கருத்துக்கள் நிலவுகின்றன. எழுவாய் வேற்றுமைக்கு உருபே இன்று, பெயரே எழுவாய் உருபு, பயனிலை பெயரைக் கொண்டு பொருள் முடியும் தன்மையே எழுவாயுருபு, பெயர் எழுவாயாய் ஆதலே எழுவாய் உருபு, நின் - தன் - என்-முதலிய வேர்ச்சொற்கள் நீ - தான் - யான் - என வடிவு வேறுபட்டு எழுவாயாய் வருதலே எழுவாய் உருபு, இறை என்ற சொல் இறைவன் என்பதுபோலப் பெயர்ப்பின் விகுதி பெறுதல் போல்வனவே எழுவாய் உருபு, பெயருக்குப்பின் ஆயவன், ஆனவன், ஆவான், ஆகின்றவன் முதலிய ஐம்பாற் சொற்களும் வருவதே எழுவாய் உருபு என்ற கருத்துக்கள் இலக்கண ஆசிரியர்களிடையே நிலவுகின்றன.

கருத்தா - இது தேற்றத்தோடு செயப்படுபொருள் குன்றிய வினை கொண்டு முடியும் செயப்படுபொருள் (கேண்மை தானே வளரும்), தேற்றமின்றிச் செயப்படுபொருள் குன்றுதவினை கொண்டு முடியும் செயப்படுபொருள் (திண்ணை மெழுகிற்று) காரணம், தன்வசம், தெரியாநிலை (மாடம்செய்யப்பட்டது - வினை முதல் என்று தெரியப்படாமல் வினைமுதலாயே நிற்பது), தடுமாற்றம், தொழிற்பெயர் என்ற ஏழனையும் நிலைக்களனாகக் கொண்டு தோன்றும்; கருவிக்கருத்தா, இடக்கருத்தா, கோளிக் கருத்தா என்ற கருத்தாக்களைக்கோடல் நேரிய இலக்கணமன்று.

இரண்டு எழுவாய்களைக் கொண்டே நிகழும் ஒரு வினைகளும் உண்டு. எழுவாய் கொண்டு முடியும் வினை ஏவுதல் வினை, இயற்றுதல் வினை. ஏவுதல் இயற்றுதல் என்ற இரண்டும் அல்லாத வினை என மூவகைப்படும்.

விளி வேற்றுமை, படர்க்கையாரை முன்னிலைப்படுத்தி அழைத்தல் என்ற பொருளிலேயே வருவது.

செயப்படுபொருள் - இதுகருத்துண்டாதல், கருத்தின்றுதல், உண்மையும் இன்மையும் ஆதல், இருவகைப்பட்டு ஈருருபு இணைதல் (ஆசிரியனை ஐயுற்ற பொருளை வினவினன், பசுவினைப் பாலினைக் கறந்தான்), கருத்தா ஆதல், அகநிலையாதல், தெரிநிலை யாதல் (மாடம் செய்யப்பட்டது - தெரிநிலையாதல் வினைமுதல் உருபு ஏற்றும் செயப்படுபொருளே எனத்தெரியநிற்றல்) என்ற எழுவகைப்படும். இயற்றப்படுதல், வேறுபடுக்கப்படுதல், எய்தப்படுதல் முதலியனவும் இவ்வெழுவகையுள் அடங்கும்.

கருவி - இஃது அகக்கருவி, புறக்கருவி, ஒற்றுமைக்கருவி என மூவகைப்பட்டு மூன்றும் வேற்றுமைப் பொருளில் வரும். இம் மூன்றும் வேற்றுமைப்பொருளில் முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம், காரகக்காரணம், ஞாபகக்காரணம் வினை (ஒரு செயலைச் செய்யத் தொடங்குமுன் மனத்தில் அச்செயல்பற்றி எழும் சங்கற்பம்) வேறுபாடு, கருத்தா, காலம் ஆகியவை வரும்.

கொள்வோன் - இப்பொருளில்வரும் நான்காம் வேற்றுமை- கேளாது ஏற்றல், கேட்டே ஏற்றல், ஏலாது ஏற்றல், ஈவோன் ஏற்றல், உயர்ந்தோன் ஏற்றல், இழிந்தோன் ஏற்றல், ஒப்போன் ஏற்றல், உணர்வு இன்றி ஏற்றல், விருப்பாய் ஏற்றல், வெறுப்பாய் ஏற்றல், வழக்கு, உரிமை, அச்சம், பாவனை ஆகிய செய்திகளைக் குறிக்கும்.

நீக்கம் - இப்பொருளில்வரும் ஐந்தாம் வேற்றுமை- இயங்குதிணை, நிலைத்திணை, பண்பு ஆகிய செய்திகளை இயம்பும்.

குறை-குறை என்று பெயரிடப்பட்டுள்ள ஆறும் வேற்றுமை ஒற்றுமைக்குறை வேற்றுமைக்குறை என இருவகைத்து. ஒற்றுமைக்குறை ஒன்றாய்த் தோன்றல், உரிமையாய்த் தோன்றல், வேறாய்த்தோன்றல் என்ற முப்பகுப்புக்களை உடையது. அவற்றுள் ஒன்றாய்த்தோன்றும் தற்கிழமை - ஒன்றன் கூட்டம், பலவின் ஈட்டம், திரிபின் ஆக்கம், சினை, பண்பு, தொழில் என்ற அறு பகுப்புக்களை உடையது, உரிமையாய்த் தோன்றும் பிறிதின் கிழமை - பொருள், இடம், காலம், இருவகைநூல் (சம்பந்தனது தமிழ், சம்பந்தனது பிள்ளைத்தமிழ் என்றாற்போல ஒருவர் இயற்றியனவும் ஒருவரைப்பற்றி இயற்றியனவும் ஆம்) என ஐவகைப்படும். வேறாய்த் தோன்றும் பிறிதின்கிழமை முன் ஒருவர்க்கு உடைமையாகவும், பின் வேறு ஒருவர்க்கு உடைமை யாகவும் வரும் சாத்தனது பசு என்றாற்போன்ற நிலைமையில் உடைமைகளை நிலைக்களனாகக்கொண்டு தோன்றும்.

இடம் - இடம் என்னும் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் பற்றியும், இடம் அல்லாப்பொருள் பற்றியும் வரும். இடத்து நிகழ்பொருள் உருவினை உடையனவாகவும் உருவினை இல்லன வாகவும் வரும். அவற்றுள் இடப்பொருள் காலம், திக்கு, ஆகாயம், வெயில், இருள், நிலம், அரு, உரு முதலிய பலவாம். இவ்விடம்பற்றி வரும்பொருள்கள்-உரிமை, ஒற்றுமைத் தொடர்பு கலப்புத் தொடர்பு,எங்கும் பரவியிருத்தல் என்ற நாற்பகுப்பினுள் அடங்கும். இடம் அல்லா இடம்பற்றியன கூட்டிப்பிரித்தல், பிரித்துக்கூட்டல், இருவரின் முடியும் ஒரு வினைத்தொழிற்பெயர் என்ற முப்பகுப்பிற்று.

இனி, இங்ஙனம் பொதுவாக இலக்கணம் கூறப்பட்ட வேற்றுமைகளுள் ஒப்பாய் நிற்கும் உருபுகளும், ஒரு பொருட்கே பல உருபுகள் வருவனவும், வேறு உருபுகள் வருவனவும் ஆகிய மூவிலக்கணங்களும் ஒருங்கே தோன்றச் செய்திகள் உரைக்கப் பட்டுள்ளன.

கருத்தா - ஒன்று, மூன்று, நான்கு, ஆறு என்னும் உருபுகளோடு வரும்.

செயப்படுபொருள் - எல்லா உருபுகளோடும் வரும்.

கருவி - ஒன்று, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு என்னும் உருபுகளோடு வரும்.

கொள்வோன் எல்லா உருபுகளோடும் வரும்.

நீக்கம் - இரண்டு, நான்கு, ஐந்து என்னும் உருபுகளோடு வரும்.

குறை - நான்கு, ஐந்து, ஆறு, ஏழு என்னும் உருபுகளோடு வரும்.

இடம் - ஒன்று, மூன்று, நான்கு, ஏழு என்னும் உருபுகளோடு வரும்.

இனி, உருபுகள் தமக்கு உரிமையாய்த் தோன்றும் பொருள் களுடன் தமக்கு உரிய பொருள் அல்லனவற்றையும் உணர்த்து மாறு கூறப்படுகிறது. வேற்றுமைகளின் பொது இலக்கணங்களை வடமொழிமரபை ஒட்டிக்கூறும் ஆசிரியர், சிறப்பிலக்கணங்களைத் தமிழ்மொழிமரபை உட்கொண்டே குறிப்பிட்டுள்ளமை குறித்து உணரத்தக்கது.

எழுவாய் செயப்படுபொருள் பொருண்மையிலும் வரும்.

செயப்படுபொருள் தான் அல்லாத பிறபொருளையும் தெரிக்கும்.

மூன்றும் உருபுகள் கருவி கருத்தா உடன் நிகழ்வு அன்றியும், வினையின்மை, வேறுவினை, மயக்கம், ஒப்பு, ஒப்புஅல்ஒப்பு, ஒற்றுமை முதலிய பொருள்களிலும் வரும்.

நான்காம் வேற்றுமை கொடைப்பொருளோடு, ஆதிகாரண காரியம், நிமித்தகாரண காரியம், இருவகைப் பெயர்ப்பின் வினையெச்சம், இருவகைப் பெயர்ப்பின் பெயரெச்சம் என்ற பொருள்களில் வரும். (இருவகைப்பெயர் - பொருட்பெயர், தொழிற்பெயர் என்பன).

ஐந்தாம் வேற்றுமை நீக்கப் பொருளில் வருவதோடன்றி ஒப்பு, எல்லை, ஒப்பின்மை என்ற பொருள்களிலும் வரும்.

ஆறும் வேற்றுமை கிழமைப்பொருளோடே அன்றி, கருவித் தொடர்பான பொருளோடும் வரும்.

ஏழாம் வேற்றுமை இடப்பொருளேயன்றித் திரிபின் ஆக்கப் பொருளிலும் வரும்.

ஓருருபு நிற்கவேண்டிய நிலைக்களத்தில் பிறிது ஓர் உருபு வரின், பொருள் பொருத்தமுற அமைதற்கு உரிய உருபையே பொருள்பற்றி மேற்கொள்ளும் உருபுமயக்கமும் உண்டு.

சில உருபுகள் ஒரே பெயரையடுத்து ஒரே முடிக்குஞ் சொல்லால் முடியினும், தமக்குஉரியபொருள்மாறுமல் இருத்தலும் உண்டு (பழியை அஞ்சும், பழியின் அஞ்சும்,)

சில உருபுகள் ஒன்றன் நிலைக்களத்துப் பிறிதொன்று வந்தும், பொருள் பொருத்தமுற அமையும் தடுமாறு உருபுகளாக வருதலையும் காணலாம்.

உருபு நோக்கிய சொல் ஒரே சொல்லாக இருத்தலும், இரண்டு சொற்களாகவே இருத்தலும், ஒரு சொல்லும் இரண்டு சொற்களும் உறழ்ந்து வருதலும் என முத்திறத்தன.

உருபு நோக்கிய சொல் உருபின் பொருள் என்ற பெயரில் பல பொருள்படுதலைத் தொல்காப்பியனார் முதலாயினோர் விரித்துக் கூறியுள்ளனர். ஆதலின் அவை இந்நூலுள் நுவலப்பெறவில்லை.

வேற்றுமைகள் ஒரு வரையறையுட்பட்டு அடங்காதுபலவாகப் பரந்து காணப்படினும், வினைமுதல் முதலாக இடம் ஈருக விளம்பப்படும் எட்டுப் பொருளில் ஒவ்வொரு பொருளே வெவ்வேறு ஆதலும், ஒவ்வொரு பொருளிலும் பல உருபுகள் வருதலும், உருபுகள் தமக்கு உரிய பொருளை உணர்த்துதலோடு வேறு பொருள்களையும் உணர்த்துதலும் ஆகிய மூன்று கூறுபாடுகளுள் எல்லாவகைப்படும் வேற்றுமைகளையும் உட்படுத்திக் காணலாம்.

வடமொழிமரபினை ஒட்டித் தமிழிற்கும் வேற்றுமை எட்டே என்று முன்னோர் கொண்டனர். ஆகவே, எட்டனையும் இறந்து வரும் வேற்றுமைகளைத் தனித்தனிப் பெயரிட்டு அழையாமல், வேற்றுமை மயக்கம் முதலிய பெயர்களால் அவ்வெட்டனுள் ஏனையவற்றையும் அடக்கிக்கூறும் நிலை ஏற்பட்டுள்ளமையால், வேற்றுமைப் பொருளோடு வேற்றுமைமயக்கமும்கூறல்வேண்டும் இன்றியமையாமை ஏற்பட்டுள்ளது.

---

# வினையியல்

வினையியலுள் தனிவினை, தொடர்வினை, தன்வினை, பிறவினை, விதிவினை, மறைவினை, செய்வினை, செயப்பாட்டுவினை, தொழிற் பெயர், வினையாலணையும் பெயர், எச்சங்கள், பொதுவினை முதலியவை பற்றிய பலசெய்திகள் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

நட, வா முதலியன முதல்நிலைத் தனிவினைகளாம். அவை முதல்நிலைத் தொழிற் பெயர் - முன்னிலை ஏவல் ஒருமை முற்று வேறு வினைமுற்று - இருவகை எச்சம் - அல்லெச்சம் முற்று-என்பனவற்றில், முதல்நிலை பிரிந்த அம்முதல்நிலைத்தொழிற்பெயர் வினைமுதல் முதலாக வெவ்வேறு ஆதல் - எட்டு உருபுகளை ஏற்று எட்டுப்பொருள் ஆதல்-செயப்படுபொருள் குன்றலும் குன்றாமை யும் ஆதல்-இடம் குன்றாமை-பலபொருட்கு ஒன்றேயாதல்-ஒரே பொருளுக்குப் பலவாதல் - இயல்பு பகுதியாதல் - திரிபு பகுதி யாதல்-பொருட்பெயராயும் இடப்பெயராயும் வினையெச்சமாயும் வருதல் முதலிய பல நிலைகளில் சொற்றொடர்களிடையே பயன் படுத்தப்படும்.

முதல்நிலையோடு விகுதி முதலானவை கூடுதலால் அமையும் வினை தொடர்வினை எனப்படும் அத்தொடர்வினைகள் பகுதியோடு விகுதி இடைநிலை சாரியை சந்தி விகாரம் என்ற ஐந்தனுள் வேண்டியவை பொருந்தி வருதல், விகுதி முதலிய ஒன்றும் பொருந்தாமலேயே திரிந்து வருதல், திணைபால் இடம் பொழுது இவை சுட்டித் தொழிற்பெயராயும் முற்றாயும் பெயரெச்ச வினை யெச்சங்களாயும் தோன்றிச் சிறப்பு வினையாகவும் பொது வினையாகவும் வருதல், தன்வினை - பிறவினை - தன்வினை பிற வினைப் பொது - என்ற பகுப்பைப் பெறுதல், விதிவினை விதி மறை என்ற இரண்டற்கும் பொது என்ற பகுப்பைப் பெறுதல், செய்வினை - செயப்பாட்டுவினை - செய்வினைக்கும் செயப்பாட்டு வினைக்கும் பொதுவினை என்ற பகுப்பைப்பெறுதல், முதல்வினை-சினைவினை - முதல் சினை என்ற இரண்டற்கும் பொது என்ற

பகுப்பைப் பெறுதல், இருவகை எச்சத்திறனுக்கும் பொதுவினையாதல், தெரிநிலை வினை, தெரிநிலை வினைக்குறிப்பு, தெரியாநிலை வினை, தெரியாநிலை வினைக்குறிப்பு, வினைக்குறிப்பு, பொதுவிற்கும் சிறப்பிற்கும் பொதுவாய் வருவன, முற்று, பெயரெச்சம், வினை எச்சம், விதிவினை, மறைவினை, பெயர், இயல்பாகிய சொல், திரிபு ஆகிய சொல், ஒருமொழி பழமொழிக்கு ஒப்பாய் நிற்றல் முதலிய பல பொருண்மைகளில் வரும்.

வினைச்சொற்கள் பெயர் வினை இடை உரி பண்பு முதலியவை அடியாகத் தோன்றும். அங்ஙனம் தோன்றும் வினைச் சொற்கள் முதல்நிலை, தொழிற்பெயர், முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்ற ஐந்து பகுப்பினுள் அடங்கும். முதல்நிலையைத் தனியே பிரித்துக்காண இயலாத நிலையில் பூசல், பட்டினி முதலிய தொழிற் பெயர்களும் வழங்குகின்றன.

செய்வி என் ஏவல்வினையாகும் பிறவினை, முதல்நிலை திரிந்தும், திரியாமலும், வி-பி யாகவோ, பி-பியாகவோ, வி-பி இணைந்தோ-தனித்தோ அணையவும் தோன்றுவதாகும். செய்வி என்னும் ஏவல் வினை, சொல்லால் பிறவினையாயினும் பொருளால் தன்வினையாக வருதலும் உண்டு.

வாழ்வான், வாழான் - வாழ்வானல்லன் - கெடுவான் என மறை மூவகையாக வழங்கப்படும்.

சில பெயர் வினைகளைத் தனித்தனியே விதி என்றோ மறை என்றோ கூற இயலாத நிலையும் உண்டு.

மறை, நிலைமொழி மறை - வருமொழி மறை - இருமொழி மறை என மூவகைப்படும்.

விதிச்சொல் மறைப்பொருளாகியும் மறைச்சொல் விதிப் பொருளாகியும் வருதலோடு, விதிச்சொல்லின் முதல்நிலை மறைப் பொருளையும், மறைச்சொல்லின் முதல்நிலை விதிப்பொருளையும் தருதலும் இலக்கண ஆசிரியர் சிலரால் கொள்ளப்பட்டுள்ளது.

செயப்பாட்டுவினையாவது வினைமுதல், செயப்படுபொருள், தொழிற்பெயர் மூன்றன் பயனிலையாய் வரும். இனி, செயப்பாட்டு வினையாலணையும் பெயர் வினைமுதல், செயப்படுபொருள்,தொழிற் பெயர் என்பனவாகவும் வரும். முதல்நிலை - தொழிற்பெயர்- முற்று - பெயரெச்சம் - வினையெச்சம் - வினைமுதல் - செயப்படு பொருள் முதலியவற்றில் படுசொல் வாராதிருந்தும் படுசொற் பொருள் அமைந்தும் வரும். இனி, முதல்நிலை முதலியவை படுசொல் பெற்றே வருதலும் உண்டு. முற்று - தொழிற்பெயர் முதலியவற்றுள் படுசொல் வரினும் படுபொருள் அமையாமலும் வரும். பெயரின் பின்னரும் வினையெச்சத்தின் பின்னரும் படுசொல் வந்தும் வேறுபொருள் படுதலும் உண்டு; தன் பொருள் பிறபொருள் என்னும் இரண்டற்கும் பொதுவாய்ப் படுசொல் பொருந்தி நிற்றலும் உண்டு; படுசொல் வாராது படுபொருள் தருதலும், படுசொல் வந்தே படுபொருள் தருதலும் உண்டு. படுசொல் மறைந்தவழியும் வேறுபொருள் படாதாயின் தொகுக்கப்படும். படுசொல் தொகுக்கவழி வேறு பொருள் படுவதாயின் படுசொல் தொகுக்கப்படாது.

வேற்றுமை வினை பண்பு உவமை உம்மை அன்மொழித் தொகைகளோடு படுதொகை என்பதனையும் சேர்த்துத் தமிழில் தொகை ஏழு என்பாரும் உளர்.

வினைகள், சிற்றறிவோர் வினை - பேரறிவோர் வினை - என இருவகைப்படும். ஒவ்வொரு வகையும் தனக்குப் பயன்படும் வினை, பிறருக்குப் பயன்படும் வினை, தனக்கும் பிறருக்கும் பொதுவாகப் பயன்படும் வினை, தனக்கும் பிறருக்கும் பயன்தாரா வினை என நான்கு பகுப்புக்களை உடையது.

அவ்வினைகள் மனம் மொழி மெய் அறிவு என்பனவற்றின் அசைந்தவினை, மனம் மொழி மெய் அறிவு என்பனவற்றின் அசைவு இல்லாத வினை, நல்வினை, தீவினை, வெறுவினை, அறிந்து செய்வினை, அறியாது செய்வினை, அசேதனம் செய்வினை, தீவினை நல்வினையாகும் வினை, நல்வினை தீவினை ஆகும் வினை, செய்யா வினையாகும் செய்வினை, செய்வினையாகும் செய்யாவினை, ஒன்றோ டொன்று கலக்கும் வினைகள், ஒன்றோடொன்று கலவாதவினைகள்,

ஒன்றனைவிடுத்து ஒன்று நில்லாத வினைகள், இடையே வினை இடையீடுபடினும் பயன்தரும் வினைகள், இடையே வினை இடையீடுபடின் பயன்தாரா வினைகள் முதலாகப் பலவகைப்படும்.

தொழிற்பெயர்—எழுவாய், செயப்படுபொருள், கருவி, இடம், பெயரெச்சம், முற்று என்பனவாக வரும் எனவும், தெரிநிலை முற்றும் குறிப்புமுற்றும் பெயரெச்ச வினையெச்சங்களாக வரும் எனவும், பெயரெச்சவினையெச்சங்கள் முற்றாக வரும் எனவும் இலக்கண ஆசிரியருள் சிலர் கூறுவார்கள்.

வினையாலணையும் பெயர்கள்—வினைமுதல், செயப்படுபொருள், கருவி, இடம், தொழிற்பெயர் என்ற ஐந்தாகவும் வரும்; எட்டு வேற்றுமை உருபுகளை ஏற்று அவற்றின் பொருளாகவும் வரும்; ஈற்றயல் திரிந்தும், பெயரெச்சவினையெச்சங்கள் ஆகியும், ஈறு இகரமாயும் வரும் அங்ஙனம் ஈற்றெழுத்து இகரமாகிய வினையாலணையும் பெயர்கள் வினைமுதல், செயப்படுபொருள், கருவி, இடம், வினையெச்சம் என்ற பொருள்களில் வரும். உருபும் படுசொல்லும் தொக்க வினைமுதலாயும் செயப்படுபொருளாயும் வருதல் முதலியனவும் காணப்படும்.

பெயரெச்ச வினையெச்சங்கள் பற்றி இலக்கண ஆசிரியர்கள் இடையே பலவேறு வகைப்பட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. எச்சம் என்பன இல்லை இவை அடைச் சொற்களே என்பாரும், முற்றின் விகாரமே எச்சம் என்பாரும், எச்சம் ஒன்றே என்பாரும், இரண்டே என்பாரும், தன்வினை, பிறவினை என்ற இரு பகுப்புக்களையே எச்சங்கள் உடையன என்பாரும், மூன்று காலங்களுக்கும் உரிய மூவகை எச்சங்களே கொள்ளப்படும் என்பாரும், எச்சங்கள் தலைமையெச்சம் தலைமையில்லா எச்சம் என்ற இரு பகுப்பினவே என்பாரும், காரணஎச்சம் காரியஎச்சம் என்ற இரு பகுப்பினவே என்பாரும், முதல்வினை எச்சம் சினைவினை எச்சம் என்ற இரு பகுப்பினவே என்பாரும், இயல்பெச்சம் திரிபெச்சம் என்ற இரு பகுப்பினவே என்பாரும், விரிதொகை என்ற இரு பகுப்பினவே என்பாரும், கொண்டு முடியும் சொல் பற்றிப் பெயரெச்சம் வினையெச்சம் என்ற இரு பகுப்பினவே என்பாருமாகப் பலப் பல மதங்களைக் கொண்ட இலக்கண ஆசிரியர்கள் கருத்தைப் பலரும் ஏலார்.

வேறு - இல்லை - உண்டு - யார் - வேண்டும் - தகும் - படும் என்ற ஏழு குறிப்புவினைமுற்றுச் சொற்களும், வினையெச்சம், பெயரெச்சம், வியங்கோள் வினைமுற்று என்ற வினைப்பகுப்புக் களும் இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவானவை.

வினைச்சொல்லின் இலக்கணம் பகுத்து விளக்குதற்கு அரியது. பலவினைச் சொற்களுக்குப் பொருள் விளங்க உரை எழுதும் உரையாசிரியர்கள் சொற்குணம் வாளாபோயினர். வினைப்பகுதிகளை வரையறுத்தலினும் கருத்துவேறுபாடு உண்டு. ஒரே படியவாகிய முதல்நிலைகள் விகுதியொடு பொருந்துங்கால், பலவாக வேறுபட்டு வருதலும் உண்டு. ஒரே தொழிற்பெயர் பலவாறு பொருள்பட்டு நான்மடியாகுபெயர்அளவும் பொருள் விரிதலும் உண்டாம். ஆயினும் அவை யாவையும் முதல்நிலை, தொழிற்பெயர், முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்ற ஐவகையுள் அடக்கிக் கொள்ளப்படும்.

---

# ஒழிபியல்

வேற்றுமையியல் வினையியல் ஆகியவற்றுள் கூறப்படாத சொல் பற்றிய பல அருஞ்செய்திகள் இவ்வியலில் கூறப் பட்டுள்ளன. இச்செய்திகளுள் பல பிரயோகவிவேக நூலுள்ளும் உள்ளன.

பொதுஎழுத்தானும்வடசிறப்பெழுத்தானும் தமிழ்வடமொழி என்றஈரெழுத்தானும் அமைந்தும், மொழி பெயர்த்தும்கொள்ளப் படும் ஆரியச் சொற்கள் தமிழில் வழங்குங்கால் பொது எழுத்துள் பொதுவாய்த் திரிந்தும், தமிழ்ச் சிறப்பெழுத்து ஐந்தானும் திரிந்தும், மொழி முதல் இடை கடை என்னும் மூன்றிடத்தும் தோன்றல் திரிதல் கெடுதல் என்ற விகாரங்களைப் பெற்றும் தமிழில் வடசொல்லாக வழங்கப்பெறும்.

தமிழ்ச்சொல் பொது எழுத்தானும் சிறப்பெழுத்தானும், ஈரெழுத்தானும் இலங்குமாயினும், ஆரியச்சொற்கள் அவ்வாறு வந்து தமிழில் வடசொல்லாக வழங்கும்போது அவற்றிற்குக் குறியீடு வழங்கினாற்போலத்தனித்தனிக் குறியீடுவழங்கப்பெறாமல் வரும்.

அதிகாரம், அவாய்நிலை, ஒரு சொல்லின் பொருளை நன்கு விளக்குதல், செய்யுள் விகாரம், இழிவுபட்டதாகிய இடக்கர் விளக்கம், அறுவகைப்பொருள்கள், அறுவகைத் தொகைகள், இடையில் உள்ளன எல்லாம் கெடுதல் முதலிய பல காரணங் களால் பொருத்தம் அறிந்து தனித்தனியே மொழிகளை வருவித்து முடிக்கும் நிலை ஏற்படும்.

அளபெடைகள் இயற்கையளபெடை, செயற்கையளபெடை, எழுத்துப்பேறளபெடை, இசைநூல் அளபெடை, ஒற்றுப் பேறளபெடை என ஐவகைப்படும். அவையே குற்றெழுத்

தளபெடை, நெட்டெழுத்தளபெடை, ஒற்றெழுத்தளபெடை என எழுத்து நோக்கி மூவகையாகவும் ஆக்கப்படும். அவை மொழி முதல் இடை கடை என்னும் மூவிடத்தும் வரும்.

போலி எழுத்துக்கள் எனப்படும் இணை எழுத்துக்கள், செய்யுட்கண் மோனைத்தொடைக்கும் எதுகைத்தொடைக்கும் பயன்படுதலால், அவற்றைப் பயனற்றவை என்று தள்ளாது பயனுடையவை எனக் கோடல் வேண்டும்.

உருபு முதலியன தொகுக்கப்பட்டு வழங்கும் தொகை நிலைகளே தொகாநிலைகளின் பொருளைத் திரிபின்றிப் புலப் படுத்தலால், உருபு முதலியன வெளிப்பட்டு நிற்றலால் பயன் என்னை எனின், உருபு முதலியன தொக்கவழிக் கருதிய பொருள் தோன்றுதலும், கருதியபொருள் அன்றி வேறொரு பொருள் தோன்றுதலும், பலபொருள்கள் தோன்றுதலும் நிகழ்தல் கூடும் ஆதலின், கருதியபொருள் தோன்றுதற்கண் ஐயம்திரிபு ஏற்படும் இடங்களில் எல்லாம் உருபு முதலியவற்றை விரித்தே வழங்குதல் வேண்டும் என்று கொள்க.

உருபு தொக்கவழி ஒருபொருளேயன்றி ஏழு என்ற எல்லை காறும்பொருள்விரித்துஉரைத்தற்குத் தமிழ்ச் சொற்றொடர்க்கண் வாய்ப்பு உண்டு.

உருபு தொக்கவழி ஒரு சொல்லே ஒருகால் எழுவாயாகவும், ஒருகால் செயப்படுபொருளாகவும் பொருள்தடுமாறி அமையக் கூடிய தொகைகளும் உள.

தொகைநிலை தொகாநிலை என்ற சொற்றொடர்களின்விளக்கம் பற்றி இலக்கண ஆசிரியர்களிடையே மூவகை வேறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. வேற்றுமை உருபு முதலியன இடையே தொகுதலின் தொகை என்பர் ஒருசாரார். நிலைமொழி வருமொழிகள் உருபுகளோடு இணைந்து விட்டிசையாது, நிலை மொழி போலவே நின்று வருஞ்சொற்களோடு முடிதலைதொகை என்பர் ஒருசாரார். பல சொற்கள் கூடி ஒருசொல்போல ஆகி விட்டிசைக்காது, பிரித்தற்குப் பொருந்தாது ஒருசொல் நீர்மைய வாகத் தொகுதலை தொகை என்பர் ஒருசாரார்.

இம்மூவரும் முறையே உருபு முதலியவற்றை இடையே உரைத்தல், விட்டிசைத்து உரைத்தல், வெவ்வேறு உரைத்தல் என்பனவற்றையே தொகாநிலை என்பர். இவர்தம் கருத்துக்களுள் எதனையும் எளிதாக மறுத்து மற்றொன்றை நிலைநாட்டுதல் என்பது இயலாது.

அறுவகைத் தொகையும் அமையும் போது, ஒன்றே தொகுதலும் பலவே தொகுதலும். ஆறுவகையும் ஒருசேரத் தொகுதலும், உருபேதொகுதலும்,பொருளேதொகுதலும்,உருபும் பொருளும் ஒருங்கே தொகுதலும், உருபும் பொருளும் ஒருங்கு பல தொகுதலும், பொருளும் உருபும் பொருளும் தொகுதலும் முதல் இடை கடை என்ற மூவிடத்தும் தொகுதலும், கடை இடை என்ற ஈரிடத்துத் தொகுதலும் நிகழும்.

பண்புகளுள் வெண்மை என்பது ஒன்றே ஒரு பெயருக்கு அடையாகுங்கால் இனம் பற்றியும், இனம் பற்றாமலும், தனக்குரிய சினையை விட்டு முதலைப் பற்றியும், எதிர்வு-இழிவு-சாதி-புதுமை-பொய் - உள்ளீடின்மை - இயல்பு - கலப்பின்மை - தனிமை-நிறமின்மை-மந்தம்-பண்புப்போலி முதலிய பற்றியும் வருதலின், பண்புத்தொகை விதி பகரின் பெருகும் என்று தொடங்கும் ஆசிரியரால் பண்புத்தொகையின் பலவகைகளுள், பண்பு முன் வருதல்-இருபண்பு அடுத்தல்-இருபண்பொடு பொருள் இயைதல்-இருபண்புகள் சேர்ந்தே ஒரு பொருளைக் குறிப்பிடல் - இயற்பெயர் முன்னும் சிறப்புப்பெயர் பின்னும் வருதல் - சிறப்புப்பெயர் முன்னும் இயற்பெயர் பின்னும் வருதல்-பொதுப்பெயர் முன்னும் சிறப்புப்பெயர் பின்னும் வருதல் - பின்மொழி ஆகுபெயராதல்-முன்மொழி ஆகுபெயராதல் - இருமொழி ஆகுபெயராதல் - ஒரு பொருட்குஇருபெயராகிவருதல்-முதற்சொல்தமிழ்ச்சொல்லாதல் முதற்சொல் வடசொல்லாதல் - இருசொற்களும் தமிழ்ச்சொல்லாதல்-இருசொற்களும் வடசொல்லாதல்-வண்ணம், வடிவு, அளவு, சுவை பற்றி வருதல் என்பன குறிப்பிடப்பட்டுள்ளன.

சில பெயரெச்சங்களும், சில வினைத்தொகைகளும், உவமத் தொகைகளும், வண்ணச்சினைச் சொல்லும் வடமொழியில் பண்புத் தொகையுள் அடங்கும்.

மறை, இன்மை-பிறிது-மறை என மூவகைப்படும். அவற்றை வடமொழிக்கண் அ-அந்-ந-நீ-கு-வி என்ற உபசர்க்கங்கள் பெறப்படுத்தும்.

மறையின் மூன்று வகைகளுள் இன்மை என்னும் அபாவம், என்றும் அபாவம், இன்மையது அபாவம், ஒன்றினொன்று அபாவம், உள்ளதன் அபாவம், அழிவுபாட்டபாவம் என ஐவகைப்படும்.

எழுத்தாற்றல், சொல்லாற்றல், பொருளாற்றல் மொழிப் பொருட்காரணம் இவற்றுள் கொள்ளத்தகுவனவற்றைக்கோடலே முறை. அவ்வாற்றல் கெட்டனவற்றையும் நுணுகி அறிதல் வேண்டும்.

முன்பு உள்ளநிலை, இன்று உள்ளநிலை, சொல் ஒற்றுமை, என்ற நிலையை ஓர்ந்து முப்பது எழுத்துக்களும் முறையே ஒற்றுமையுடைய எனினும், கச-சய-வய-மன-லள-வல என்பன சிறப்பாக ஒற்றுமை உடைய எழுத்துக்களாகும்.

எழுத்துச்சாரியைகள் வருங்கால், ஒரெழுத்திற்கு ஒரே சாரியையாகவும், ஒரெழுத்திற்கே பல சாரியைகளாகவும் பல எழுத்திற்கு ஒரே சாரியையாகவும், தொடர்ந்த பல எழுத்திற்கு ஒரே சாரியையாகவும், சாரியை செய்யுளுள் கலந்து தோன்றும் சாரியையாகவும் வரும். சாரியை இன்றி எழுத்துக்கள் தனித்தும் தொடர்ந்தும் வருதலும் உண்டு.

தொடர்மொழிகள் அவாய்நிலை, தகுதி, அண்மைநிலை என்ற முத்திறங்களில் ஒன்றனை அடிப்படையாகக்கொண்டு அமையும்.

புணர்ச்சியாவது பொருத்தப்புணர்ச்சி, பொருத்தமில் புணர்ச்சி, பொருத்தம் இன்மையும் உடைமையும் ஒருங்கே பொருந்தும் புணர்ச்சி, வழுவுடைப்புணர்ச்சி என நான்கு வகைப் படும்.

பொருத்தப் புணர்ச்சியும் வழுவுடைப் புணர்ச்சியும் இலக் கண ஆசிரியர் பலராலும் விளக்கப்பட்டமையின் இந்நூலுள் இடையன இரண்டுமே சுட்டப்பட்டன.

ஆற்றொழுக்கும் அடிமறிமாற்றும் அல்லாத அடிமொழி மாற்று-கண்ணமொழி மாற்று-நிரல்நிறை-விற்பூட்டு-தாப்பிசை அளைமறிபாப்பு - கொண்டுகூட்டு என்ற எழுவகைப் பொருள் கோள் பற்றிய தொடர்கள், மரூஉமொழி - பொய்யுரை - சில இடைப்பிறவரல் - பண்பு - அதிகாரம் - அவாய்நிலை முதலியன, விகுதி உருபு உம்மை மாறி வருதல் முதலியன பொருத்தமில் புணர்ச்சியாம்.

சில இடைப்பிறவரல்கள் ஒருகால் பொருத்தப் புணர்ச்சி யாகவும், ஒருகால் பொருத்தமில் புணர்ச்சியாகவும் வரும்.

எழுத்து விகாரம், புணர்ச்சி விகாரம் - புணர்ச்சியில் விகாரம் என்ற இருபிரிவினது ஆகும்.

புணர்ச்சி விகாரம் எழுத்திலக்கணத்தில் எழுந்த விகாரம், யாப்பிலக்கணத்தில் எழுந்த விகாரம் என்ற இரு பகுப்பினை உடையது.

புணர்ச்சியில் விகாரம் தோன்றல் - திரிதல் - கெடுதல் - நிலை மாறுதல் என்ற நான்கு வகைகளை உடையது.

இந்நான்கு விகாரங்களும் எழுத்தளவில் அமையாது சொற் றொடர்களில் அமைந்துள்ள சொற்களிடையேயும் காணப்படும்.

இவ் விகாரங்களால் பொருள் வேறுபடுதலும் உண்டு; பொருள் வேறுபடாமையும் உண்டு.

காரணத்தையே இடுகுறியாகவும், இடுகுறியையே காரண மாகவும், பல சொற்களையே ஒரு சொல்லாகவும், ஒரு சொல்லையே பல சொற்களாகவும் சான்றோர் கருதும் நிலையும் தமிழ் மொழிக் கண் உள்ளது.

பகுபதத்துப் பல நிலைகளும் விளக்கப்பட்டுள்ளன. ஒரு மொழி ஈற்றினும், தொடர்மொழி ஈற்றினும், பின்மொழி கெட்ட முன்மொழி ஈற்றினும், முன்மொழி கெட்ட பின்மொழி யீற்றினும் வரக்கூடிய பல வகைப்பட்ட விகுதிகளுள் பொருத்தமான

விகுதிகள் பொருந்துதலால் பகுபதம் அமையும், பகுபதம் வேற்றுமை உருபு - உவமஉருபு - இடைநிலை - சாரியை - என நான்கும் சேர்ந்தோ, தனித்தோ பொருந்தி வரும்; வேற்றுமைப் பொருள்களை ஏற்றும் நிற்கும்; ஒவ்வொரு வேற்றுமை வெவ்வேறாகியும் வரும்; இதனை உடையது இது எனவும் நிற்கும்; இதனது உடைமை இது எனவும் நிற்கும்; இடப்பொருளை உணர்த்தும் வினா, சுட்டு, எண் என்பனவற்றை அடுத்து இடைச்சொல்லாகவும் நிற்கும்; தன்மை மாத்திரம் தானாகவும் நிற்கும்; பெயர்ச்சொல் முதலிய நான்கினும் பிறக்கும்; பெயர்தான் அறுவகையாகப் பிரிந்தும் தோன்றும்; பகுபதமாயினும் பல குணப்படலால் பகாப் பதம் எனப் பெயர் பெறுதலும் உண்டு; வினைக்குறிப்பு முற்றாக வும் வினைக்குறிப்புப் பெயராகவும், பெயரெச்சமாகவும், வினையெச்சமாகவும் பகுபதம் வருதலும் உண்டு; பகாப்பதப் பொருள்படப் பகுபதமாக வருதலும் பகாப்பதச் சொற்படப் பகுபதமாக வருதலும் உண்டு; பகுத்தலை ஏற்றும், பகுக்கப் படாமையை ஏற்றும், இவ்விரு பெற்றிகளையும் ஒருங்கே ஏற்றும் பகுபதம் தோன்றும்; பல சொல் ஒருபொருளாகப் பட்டும், பல பொருள் ஒருசொல்லாகப் பட்டும், இன்னும் பல வகையாகவும் பகுபதம் தோன்றும்.

நிலைமொழியும் வருமொழியும் புணரும் சந்தி, வேற்றுமை வழி - அல்வழி - பொதுவழி - அடங்காவழி என நான்கு வகைப் படும்.

வேற்றுமைவழிச் சந்தி, தொகைச்சந்தி விரிச்சந்திகளால் பதினாறாகவும், உருபு சந்தியோடு கூட்ட இருபத்து நான்காகவும் கணக்கிடப்படும்.

அடுக்குத்தொடர் பெயரடுக்கு, முற்றடுக்கு, உருபு அடுக்கு, பெயரெச்ச அடுக்கு, வினையெச்ச அடுக்கு என ஐவகைத்து. இவ்வைவகையொடு இரட்டைக்கிளவியையும் சேர்க்க அடுக்கு அறுவகைத்தாம். அவ்வடுக்கிலுள்ள சொற்கள் ஒன்று பல அடுக்கல், வேறு பல அடுக்கல், விதியாய் அடுக்கல், மறையாய் அடுக்கல், விதிமறை கூடி விரவி அடுக்கல், பல சொல் கூடி ஒரு

பொருளாய் அடுக்கல், பல பொருட்கே ஒரு சொல்லாய் அடுக்கல், இயல்பாய் அடுக்கல், விகாரமாய் அடுக்கல் முதலிய பல வகைப்படும்.

அடுக்கு அல்லாத சொற்களும் சொல்லமைப்பால் அடுக்குத் தொடர்போலத் தோன்றுதலும் உண்டு.

துணிவாவது, பொருளைப் பொருள் என்று கூறுதல், பொருள் அல்லதனைப் பொருள் என்று கூறுதல், இதுபொருள் அன்று என்று தெரிந்தும் இதனையே பொருளாகக் கொள்ளுதல் என மூவகையாகக் கொள்ளப்பட்டுள்ளது.

அன்பு அருள் ஆசை அறிவு அறியாமை ஆகிய ஐந்தினால் துணிதலும் முற்கூறிய மூவகைத் துணிபுகளுள் அடங்கும்.

சொற்றொடர் பல சேர்ந்தவழி, அவை, தெரிவிக்கும்பொருளை ஒட்டி, ஒரு தொடர் - பல தொடர் என்று இரண்டாகப் பகுக்கப்படும்.

எழுத்துத் திரிபு, சொல் திரிபு, பொருள் திரிபு என்பன ஏற்புழி நிகழ்தலும் உண்டு.

பல பொருட்கு ஒரே வடிவமாகிய சொற்கள் ஓசையை அடிப்படையாகக் கொண்டே பிரித்து உணரப்படும். அச்சொற்கள் தனிமொழி தொடர்மொழி இரண்டிலும் வரும். தனிமொழி வினைமொழியையே சாரும்; தொடர்மொழி சொல் வேறுபடாது பொருள் வேறுபடுதல், பொருள் வேறுபடாதுசொல் வேறுபடுதல், பொருள் சொல் ஒருங்கே போய் வேறுபடுதல் என மூவகைப்படும்.

எடுத்தல் படுத்தல் என்ற இரண்டே சிறப்பான ஓசைகளாம்; பின்னர் நலிதல் ஓசையோடு ஓசை மூன்றாயிற்று; விலங்கலொடு சேர்த்து ஓசை நான்கு என்பாரும் உளர்.

ஒரு பொருளைக் குறிக்கப் பல வாய்பாடுகளும், பல பொருள்களைக் குறிக்க ஒரு வாய்பாடும் வருதலும் உண்டு.

சொல்லுக்கு உரிய பொருள்-பொருள், அதிகாரம், முன்னம், உத்தி, வெளிப்படை, குறிப்பு, மெய்ப்பாடு, அன்மொழி, ஒட்டு, ஆகுபெயர், உவமை, இறைச்சி, உபசாரம், அவா, உள்மயக்கு முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு உரைக்கப்படும்.

உயர்திணை இயற்பெயர், அஃறிணை இயற்பெயர், உயர்திணைச் சாதிஒருமை, சாதிப்பன்மை அஃறிணைச்சாதி ஒருமை, சாதிப்பன்மை, ஒரு சொல் நின்றே தனித்தனி உதவுதல் எனப் பிரிவு ஏழு வகைப்படும்.

இலக்கியம், இலக்கணம், உரை என்ற மூன்றனுள் செய்யுள் இயல்பு அடங்கிவிடும்.

இவ்வாறு இலக்கணக்கொத்தினுள் நூல்-ஆசிரியன்-மாணாக்கன் பற்றிய பாயிரச்செய்திகளும், வேற்றுமை உருபு பொருள்-மயக்கம் ஆகியவை பற்றிய வேற்றுமையியற் செய்திகளும், ஐவகைப்பட்ட வினை பற்றிய வினையியற் செய்திகளும், வடமொழியாக்கம் - தொகைநிலை - பகுபதத்திலக்கணம் முதலிய சொல் பற்றிய எஞ்சிய செய்திகளாகிய எச்சவியற் செய்திகளும் தொகுத்துத் தக்க எடுத்துக்காட்டு விளக்கங்களுடன் தரப் பெற்றுள்ளன.

—0o0—

# நூற்பாச் செய்தி

[ எண் நூற்பாவெண்ணைக் குறிக்கும் ]

# உரையில் எழுத்தாளப்பட்டுள்ள இலக்கண இலக்கிய நூல்களின் அகர வரிசை

---

அகநானூறு
குறள்
குறுந்தொகை
கோவையார்
சிலப்பதிகாரம்
சீவகசிந்தாமணி
தண்டியலங்காரம்
தனிப்பாடல்கள்
திரிகடுகம்
திருவாசகம்
திவ்வியப்பிரபந்தம்
தேவாரம்
தொல்காப்பியம்
நல்வழி
நன்னூல்
நாலடியார்
நேமிநாதம்
பரிபாடல்
பழமொழி
புறநானூறு
மாபுராணம்
முருகாற்றுப்படை
யாப்பருங்கலக்காரிகை-
முதலியன.

—o—

# உரை நலன்கள்

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த இலக்கணப் பெரும் புலவர்களாகிய மூவரும் முறையே வைத்தியநாத தேசிகர், சுப்பிரமணிய தீக்கிதர், சாமிநாததேசிகர் என்பாராவர். அவர்கள் இயற்றிய நூல்கள் முறையே இலக்கணவிளக்கம், பிரயோக விவேகம், இலக்கணக்கொத்து என்று பெயரிடப்பட்டுள்ளன. இவற்றுள் பின்னைய இரண்டும் சிறப்புப்பற்றிச் சொல் இலக்கணமே நுவல்வனவாம். இந்நூல்களின் தனிச் சிறப்பு இந்நூலாசிரியர்களே இந்நூல்களுக்கு உரையும்வரைந்தமையாம். இலக்கணவிளக்கத்தில் போல, நூற்பாக்களுக்குப் பொழிப்புரை ஏனைய இருநூல்களிலும் காணப்பெறவில்லை. பிரயோக விவேகத்தில் நூற்பாக்களின் போந்த பொருள் குறிக்கப்படவும், இலக்கணக்கொத்துள் அதுவும் இடம் பெற்றிலது. மேலும் பின்னைய நூல்கள் இரண்டும் அவ்வவ்வாசிரியர் யாத்த நூற்பாக் களையே உடையன. எடுத்துக்காட்டுக்களின் விளக்கங்கள் கொண்டே நூற்பாச் செய்திகள் நுணுகி உணரப்பட வேண்டிய நிலையில் இலக்கணக்கொத்து உள்ளது.

பதினேழாம் நூற்றாண்டுகாறும் வளர்ந்த செய்யுள்மரபு பற்றிய செய்திகள் பலவும், உலகவழக்கச் செய்திகள் சிலவும் பிரயோகவிவேகத்தில் விளக்கப்பட்டுள்ளன. ஆனால் இலக்கணக் கொத்துப் பெரும்பாலும் உலக வழக்கில் வளர்ச்சியுற்ற தமிழ் மொழிச் சொல், சொற்றொடர் பற்றிய செய்திகளையே விளக்கிச் செல்கிறது.

'இந்நூற்கு உதாரணம் தொன்னூல் செய்யுளுள்
சிலவே எழுதினம்; பலவே எழுதினம்
உலக வழக்கினுள் உணரும் பொருட்டே.' —இ.கொ. 12

என்ற நூற்பாவை நோக்குக.

ஒரு மொழியில் அமைந்துள்ள பல நூல்களிடையும் மாறுபாடு காணப்படுதலானும், நூலாசிரியர் கருத்தினை நோக்காது உரையாசிரியர்கள் ஒவ்வொரு மதமாய் உரை உரைத்தலானும், நூலுரைபோதகாசிரியர் மூவரும் முக்குணவயத்தான் முறை மறந்து அறைதலானும் தம் முன் வைத்தியநாத தேசிகரும், சுப்பிரமணிய தீக்கிதரும் தத்தம் நூல்களுக்குத் தாமே உரை வரைந்தமையானும், இவ்வாசிரியரும் தாமே தம் நூலுக்குத் தம் உள்ளக் கருத்து முழுதும் வெளிப்படுத்தும் முகத்தான் தேவையான சுருக்கமான உரை வரைந்துள்ளார்.

'எளியவிதிகளை யாவரும் அறிவார், அரிய விதிகளை அறையின் அறிவார் இலை' (இ. கொ. 7) என்ற கருத்தோடு இந்நூலுள் பொதுவான பல செய்திகளை விடுத்து, அரிய செய்திகளையே திரட்டிக் கூறியுள்ளார். பலர் கருத்துக்கள் தொகுத்துக் கூறப் பட்டுள்ளனவேயன்றி, எக்கருத்து ஏற்றது எது ஏலாது என்ற ஆராய்ச்சி இந்நூற்கண் இன்று.

பிரயோக விவேகத்துள் கூறப்பட்ட செய்திகள் பலவும் ஏற்ற பெற்றி இவ்வுரையுள் நல்ல தமிழ்நடையில் எடுத்தாளப் பட்டுள்ளன ஆதலின் அந்நூல் பயிலுதற்கு இந்நூல் துணையாதல் தேற்றம். வடமொழி வல்லார் தமிழிலக்கணம் உணரப் பிரயோக விவேகமும் தமிழ் வல்லார் வடமொழி இலக்கணச் செய்தி உணர இந்நூலும் துணைபுரிவனவாகும்.

இவ்வாசிரியர் பிரயோகவிவேக ஆசிரியரைப்போல, வடமொழி தமிழ்மொழி எனும் இரு மொழிக்கும் இலக்கணம் பெரும்பாலும் ஒன்றே என்னும் கருத்தினர்.

"தொல்காப்பியம், திருவள்ளுவர் முதலிய நூல்களைக் குறைபடாமல் முழுதும் உணர்ந்தவர், அவைகளில் தடைபட்ட விடத்து அத்தடை தீர்க்கும் கருத்து உண்டாயின், இது பயன் படும்; ஆகையால் அவர்கட்கே இது நூல்; மற்றையோர்க்கு இது நூல் அன்று". என்று இந்நூற்பயன் குறிப்பிடப்பட்டுள்ளது.

பொதுவாகத் தமிழிலும் வடமொழியிலும் நிறைந்த புலமையுடன் தமிழிலக்கணம் யாக்கப்புக்க இவ்வாசிரியருக்கு, தாம் சைவத் துறவியாதலான், சைவ சமய நூல்களிடத்தும் சிவபெருமான் திருவடிகளிடத்தும் நிறைந்த பற்றுண்டு என்ற செய்தி ஆட்டாண்டு வெளிப்படுகிறது. சில காண்போம்;

'வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது' –
மூன்று – பதி, பசு, பாசம் – 6 உரை

" திருவைக் கோவைக்கும் கூட்டுக. மாணிக்கவாசகர் அறிவால் சிவனே என்பது திண்ணம். அன்றியும், அழகிய திருச்சிற்றம்பலமுடையார் அவர் வாக்கில் கலந்து இரந்து அருமைத் திருக்கையால் எழுதினுர். அப்பெருமை நோக்காது சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப்பாட்டு, கொங்குவேள்மாக்கதை முதலியவற்ருேடு சேர்த்துச் செய்யுட் களோடு ஒன்ருக்குவர். இறையனுர் அகப்பொருள் முதலான இலக்கணங்களையும், தேவாரம் - திருவாசகம் – திருவிசைப்பா – திருப்பல்லாண்டு – பெரியபுராணம் - சிவஞானபோதம் -சிவஞான சித்தியார் – சிவப்பிரகாசம் - பட்டினத்துப்பிள்ளையார்பாடல் முதலிய இலக்கியங்களையும் ஒரு பொருளாக எண்ணுது, நன்னூல்– சின்னூல் – அகப்பொருள் – காரிகை – அலங்காரம் முதலிய இலக்கணங்களையும் பத்துப்பாட்டு-எட்டுத்தொகை-பதினெண் கீழ்க்கணக்கு – இராமன் கதை-நளன் கதை – அரிச்சந்திரன் கதை முதலிய இலக்கியங்களையும் ஒரு பொருளாக எண்ணி, வாணுள் வீணுள் கழிப்பர். அவர் இவைகள் இருப்பவே அவைகளை விரும்புதல் என்னெனின், பாற்கடலுள் பிறந்து அதனுள் வாழும் மீன்கள் அப்பாலை விரும்பாது வேறு பலவற்றை விரும்புதல் போல, அவர் இயற்கை என்க."
– 7 உரை

அரிய விதியாவது 'அகரம்போல நின்றனன் சிவனும் சேர்ந்தே' 'அகர உயிர்போல் அறிவாகி எங்கும், நிகரில் இறை நிற்கும் நிறைந்து, (7 – உரை) என்ற எடுத்துக்காட்டுக்களை நோக்குக.

அரியைப் படைத்தலால் அயன் கடவுள் என்றும் அயனைப் பெற்றுக் காத்தலால் அரி கடவுள் என்றும் மாறுபட்டுழி, இவ் விருவரையும் அழித்தலான் இவர் கடவுள் அல்லர்; அரனே கடவுள் என்பதுபோல — 7 உரை

கற்றலின் சிறந்த கருவி ஆரியன் கருத்தில் அருள்வர நடத்தலேயாம். 8 உரை

நாரா யணன்பூ ஓரா யிரத்தைக்
காத்தரல் கொய்து அரற்கே கொடுத்துச்
சக்கரச் சிறுமையின் நீங்கி நற்சுவைப்
பாற்கடல் கண்ணே பள்ளி கொண்டான். 15

என்ற காரக உதாரணம் நோக்கற்குரியது.

எடுத்துக்காட்டுக்கள் சிவபெருமான் உயர்ச்சியும் சிறப்பும் தோன்ற அமைந்துள்ளன:

அவன்கண் பதினைந்து, அவன் தலை ஐந்து, நெற்றிக்கண் நெருப்பு. —19 உரை

அரிக்குச் சக்கரம் கொடுத்தான் அரன் -இழிந்தோன் ஏற்றல்; அரற்குக் கண் அலர் கொடுத்தான் அரி - உயர்ந்தோன் ஏற்றல். —36 உரை

முருகனது வேல், சம்பந்தனது தமிழ், சம்பந்தனது பிள்ளைத் தமிழ். —40 உரை

நெற்றியின்கண் விழி. — 42 உரை

மதுரையை நீக்கினுன், மதுரையின் வடக்கு சிதம்பரம்.

மதுரைக்கு வடக்கு சிதம்பரம். —48 உரை

'கால காலனைக் காண்கின்ற போது
காலனைத் துரத்தும்அக் காட்சி தானே'

'கால காலனைக் கரிசறக் காண்கின்
காலனைத் துரத்தும்அக் காட்சி தானே.'

'கால காலனைக் காண்கின் றோர்தமக்கு
ஓர்வீடு அளிக்கும் காட்சிஈது உண்மை.' -66 உரை

திருச்சிராப்பள்ளிக்கும் திருநெல்வேலிக்கும் மதுரை நடு
-66 உரை

யான் எனது என்னும் செருக்கு அறுத்தான்.

அவாவை விட்டான்.

பிறவியை ஒழித்தான்.

வீட்டை அடைந்தான்.

வேதாகமவழி விரும்பி ஒழுகினான்.

அரனது விழாவை மிக அலங்கரித்தான்.

சிவனது பூசையை மிகச் சிறப்பித்தான். - 80 உரை

எண்ணாயிரவரைக் கழுவிலேற்றினார். (சம்பந்தர்)

ஆண்டவனைத் தூதாக அஞ்சாது நடத்தினார். (சுந்தரர்)

அப்பர் தம் கொண்ட விரதம் (சமணவிரதம்) அழித்தனர்

கடவுளை நாடோறும் கல்லால் எறிந்தனர். (சாக்கியர்)

ஆண்டவன் தலையில் அடியால் மிதித்தனர். (திண்ணனார்)

- இவை தீவினை நல்வினையாயின.

அநங்கன் அலரை அரனிடத்திட்டான் - நல்வினை தீவினை ஆயிற்று.
- 81 உரை

ஏற்றான்புள் ஊர்ந்தான் எயிலெறிந்தான் மார்பிடந்தான்
நீற்றான் நிழல்மணி வண்ணத்தான்--கூற்றொருபால்
மங்கையான் பூமகளான் வார்சடையான் நீள்முடியான்
கங்கையான் நீள்கழலான் காப்பு'. —82 உரை

என்ற பாடலால் இவர் சிவபெருமானிடத்துத் திருமாலையும் கண்டவராவர்.

வெறுத்த ஞானி வீட்டை அடைந்தான். —82 உரை

இவன் மான் ஏந்தி; இவன் பிறைசூடி; இவன் கங்கையாடி.
—83 உரை

அயன் உயர் சதாசிவன் அதிகாரத்தார் என்புழி, அரி அரன் மயேச்சுரன் என வருவித்தல் போல்வன. —89 உரை

ஆகு வாகனம் —92 உரை

சூரனை வென்றான் வந்தான்:

ஒருகோட் டிருசெவி முக்கணால் வாயன்;

உல்லாச நிராகுல யோக வித சல்லாப விநோதன். —96 உரை

இவ்வூரில் வெள்ளைப் பிள்ளையார். —98 உரை

நிமலனும் இறைவன் —100 உரை

சிவஞான சித்தியார் அபாவ அளவையுள் காண்க. —101 உரை

கொடிச் சேவலன், —108 உரை

'நீலமயில் ஏறிவரும் ஈசனருள் ஞானமதலை' —109 உரை

வேலன், சேவற்கொடியன். —117 உரை

சிவனுக்கு அடியான் சைவன்:

சிவனது சமயம் சைவம்;

விசாகநாளில் பிறந்தவன் விசாகன்;

அம்பலத்தில் ஆடினவன் அம்பலவன். —122 உரை

வீட்டை அறிவிக்கும் மகனைக் கடவுள் என்று துணிந்து அவன் கருத்தின்வழியே நிற்றல்.

சொக்கலிங்கம்,

அடிஞானம் ஆன்மாவில் தோன்றும். —122 உரை

தவரடி புனைந்த தலைமையோன். —129 உரை

சிவனுடைய சீர்பாத ஞானமானது ஆன்மாவினுடைய ஞானத்தின் கண்ணே கலக்கும்.

நித்தியம் நைமித்தியம் காமியம் முதலிய விரதங்களால் உடன்பட்டுப் பயிறல் ஒழியின் அளவுபட்ட துன்பம் —129 உரை.

இவ்வெடுத்துக்காட்டுக்கள், விரதநெறி தவறாது சிவபெருமானிடம் பத்திபூண்டு வீடுபேற்றுக்கு முயன்ற இவ்வாசிரியர், அருமையாம் விதிகள் வழிவழிநின்று வழங்குதற் பொருட்டே, இக் கருவிநூல் யாத்த செயலைப் புலப்படுக்கின்றன.

பலரும் உணரும் பொருட்டு உலக வழக்கிலிருந்தே எடுத்துக்காட்டுக்களை உரைநடையில் குறிப்பிடும் இவ்வுரையில், யாவரும் தெளிவாக உணரும் வண்ணம் உவமைகள் சில எடுத்தாளப் பட்டுள்ளன.

சொல் ''அர்த்தநாரீசுரன்', போல வேற்றுமைக்கும் ஒற்றுமைக்கும் பொது. —6 உரை.

சொல், பொருள், சொற்கூட்டம், பொருட்கூட்டம் இவற்றை அளவிடல் அரிது; இவற்றுள் ஒன்றனை மாத்திரமும் அளவிடல் அரிது என்ப. ஆயின், நூல்களால் பயன் என்னையெனின்,

> 'ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
> நாழி முகவாது நானாழி'

இவ்வுவமையால் பயன் உண்டு என்று தெளிக. —6 உரை

இருவர் மாறுபட்ட கருத்துக்களை உரைத்தவழி 'அரி, அயன் என்ற இருவரையும் அரன் அழித்தலால், இவர் கடவுள் அல்லர் அரனே கடவுள்' என்றாற்போல இரு கருத்துக்களையும் மறுத்து மூன்றாவதொன்று கூறி நிலை நாட்டுதல். —7 உரை.

முன்னோர் நூல்களுள் 'வெள்ளிடைமலை' போல் விளங்கிக் கிடந்து பயன்படு விதிகள் அளவில்லை. அவற்றுள் 'இலைமறை காய்போல்' கரந்து கிடந்து பயன்படாதன சிலவற்றுள் சிறிது எடுத்து உரைத்தனன். —7 உரை.

இறையனார் அகப்பொருள் முதலியவற்றை ஒரு பொருளாக எண்ணாது, நன்னூல் முதலியவற்றை ஒரு பொருளாக விரும்புதல் 'பாற்கடலுள் பிறந்து அதனுள் வாழும் மீன்கள் அப்பாலை விரும் பாது வேறு பலவற்றை விரும்புதல்' போல்வதாம், —7 உரை

'சேற்று நிலத்தில் கவிழ்ந்த பால் தேன் நெய் முதலியனவும் சேறானாற் போல' நன்னூல் சூத்திரமும் அவ்வுரையுடனே கலந்து குற்றப்பட்டது என்க. —8 உரை.

வடநூலார் கூறும் சமானாக்கரத்தைத் தமிழ்நூலார் இணை எழுத்து என்று மொழிபெயர்க்க மறந்து போலி எழுத்து என்று மொழிபெயர்த்ததனால், 'போலிச்சரக்கு, போலி இலக்கணம், போலியுரை' என்னும் சொற்களைப்போல இதனையும் கருதி, முன்னும் பின்னும் பாராது தள்ளினர். —91 உரை.

அண்மைநிலையாவது, சோறு கடல் முழங்கிற்று உண்டான்-என இடையில் பிறசொற்கள் வந்து பொருந்தற்கு இடங் கொடாமல், தம்முள் அணுகிச் சோற்றை உண்டான் என நிற்றல். இவ்வண்மைநிலை இலக்கணம் உணராதார் யாதானுமொரு பெயரையிட்டுச் சோற்றை உண்டான்-கடல்முழங்கிற்று எனப் பிரித்து வேறு தொடராக்குவர். இதனைச் சிலர் மறுப்பர், அஃது எங்ஙனம் எனின்,

'நாற்குலத் தலைவரும் நாற்குல மகளிரும் தனித்தனியே இருவர் இருவராய்க் கிடப்பின் புல்லுதல் கூடும். இம்முறையன்றி நான்கு தலைவரும் ஒரு நிரையே, பின்பு நான்கு குலமகளிரும் ஒருநிரையேயாக, எண்மரும் ஒருமுறையே கிடப்பின் புல்லுதல் தொழில் கூடாது'.

இவ்வுவமை முதலியன காட்டி 'சொற்றொடர்பு உண்டு என்றல் மாத்திரமேயன்றிப் பொருள்தொடர்பு சிறிதாயினும் கூடாது' என்று உவமேயம் கூறி மறுப்பர். —105 உரை

இரட்டைக் கிளவியைப் பிரித்தது என்னெனின், இரட்டைக் கிளவி, இலையிரட்டை - பூவிரட்டை - காயிரட்டை-விரலிரட்டை போல ஒற்றுமைப்பட்டு நிற்றலானும், அடுக்குக்கள் ஐந்தும் மக்கள் இரட்டை - விலங்கு இரட்டை - முட்டையிரட்டை-கையிரட்டை காலிரட்டை போல வேற்றுமைப்பட்டு நிற்றலானும் என்க.

பொருள் அன்று என்பது அறிந்தும் இதுவே பொருள் எனல்- பிறன் ஒருவனை மாதா பிதாவாகத் துணிந்து திதி கொடுத்தலும், மண் - மரம் - சிலை - செம்பு முதலானவற்றைத் தெய்வம் என்று துணிந்து பூசை செய்தலும், வீட்டை அறிவிக்கும் மகனைக் கடவுள் என்று துணிந்து அவன் கருத்தின்வழியே நிற்றலும் போல்வன. —122 உரை

ஒற்றுமை - 'உடலும் உயிரும்போல'; வேற்றுமை - 'கண்ணும் அருக்கனும்போல' பொதுமை - 'அறிவின் அறிவுபோல'.

—129 உரை

இவ்விலக்கணக் கொத்து நூற்கு இவ்வாசிரியர் தாமே உரை வரையாதுபோயிருப்பின், பல செய்திகளை இவர் கருதியவாற்றான் விளக்குதற்கு வாய்ப்பு ஏற்பட்டிராது. நூற்பாக் கருத்துக்களை எடுத்துக்காட்டு வாயிலாக விளக்குதலும், சில சொற்களுக்கு இலக்கணம் விரித்தலும், சில வேறுபாடுகளை விளக்குதலும் இவ்வுரையில் சிறப்பாக அமைந்துள்ளன. அவற்றை நிரலே காண்பாம்:

## ஒரு சூத்திரத்துக்குப் பலரும் பல மதமாய் உரைத்தல்: 6

'வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது' என்புழி, மூன்றனைப் பதி பசு பாசம் என்றும், தத்துவ மசி வாக்கியம் என்றும், அறம் பொருள் இன்பம் என்றும், எழுத்துச் சொற் பொருள் என்றும், ஆண்டு என்றும் உரைப்பர், இவை ஒரு சூத்திரத்திற்கே பலரும் பல மதமாய் உரைத்தல். —6 உரை

## அவத்தை வயத்தால் அலேதல்: 6

நனவின் அறிந்ததைக் கனவிலும், கனவினறிந்ததை நனவிலும் மயங்கியும், நனவினுள்ளும் பிரேரகத்தில் அறிந்ததைச் சாக்கிரத்தில் மயங்கியும், சாக்கிரத்தின் அறிந்ததைப் பிரேரகத்தின் மயங்கியும், பிரேரகத்தினுள்ளும் தனக்குரிய யாதானுமொரு மணிப்பொற்பணியை யாதானுமொரு காரணத்தால் பிறனொருவன் கையில் கொடுத்துப்போக்கி, சிலபொழுது இடையிட்டு அவன் கொண்டுவந்து தர வாங்கிப் பார்த்து, 'அதுவோ வேறென்றோ' என்னும் ஐயம் தீர்ந்து, சிலர்க்கு அறிவித்துச் சேமத்தின்கண்ணே வைத்து, சிலபொழுது இடையிட்டு அவனைக் கண்டு 'அப்பணி தருவாயாக' என்று பகைகொண்டு, சிலபொழுது இடையிட்டு அப்பணியைக் கண்டு, தெளிந்து பகை தீர்ந்தான் - இவை போல்வன அவத்தை வயத்தால் அலேதல். - 6 உரை

## உபலக்கணமாவது:

'அஇ உ - முதல் தனிவரின் சுட்டே' நன். 66

என்புழி, முதற்கூடிவரின் சுட்டே என்றும் பொருள் கொள்ளுதல். இவ்விலக்கணம் நோக்காது, தனித்து நிற்பின் சுட்டோ, கூடி நிற்பின் சுட்டு அன்றோ' என்று கருதி, நன்னூலார்க்குப் பின்னூலார் இச்சூத்திரத்திற்கு அளவிறந்த குற்றம் கூறினர், அது நிற்க. அவர் எழுத்திற்குப் பெயரிடுதல் நோக்கியும்,

'எகரவினு முச்சுட்டின் முன்னர்' நன். 163

எனச் சந்தி நோக்கியும்,

'இவை அடைசுட்டு வினு' நன். 276

எனப் பெயரிடுதல் நோக்கியும்,

'தூக்கிற் சுட்டு நீளின்' நன். 163

என யாப்பு நோக்கியும் இங்ஙனம் கூறிப் பின்,

'சுட்டியா எகரவினு வழி' நன். 106

வினைத்தொகை சுட்டீறு ஆகும் உகரம், நன், 179

'சுட்டு வகரம் மூவினம் உற' நன். 235

'வ-இறு சுட்டிற்கு அற்றுறல் வழியே, நன். 250

'சுட்டின்முன் ஆய்தம் அன்வரின் கெடுமே' நன். 251

'அதுமுன் வரும் அன்று' நன். 180

என்று கூடிநிற்பினும் சுட்டு என்று கூறினர். இவ்விலக்கணங்களை நோக்கிலர். அதுநிற்க, 'தனிவரின் சுட்டு' (நன். 66) என்னும் சூத்திரம் 'இன்னென வரூஉம்' (தொ. எ. 131) என்னும் சூத்திரம்போல விகாரப்பட்டு நின்றது என்று யாப்புவிதி இயைபு நோக்கிலர், அதுநிற்க, ஒருமொழி ஒழிதன் இனங்கொளற்கு உரித்தே' (நன். 358) என்னும் சூத்திரப் பொருளையும் நோக்கிலர். அது நிற்க, 'ஒன்றினம் முடித்தல் தன்னினம் முடித்தல்' முதலிய உத்தியையும் நோக்கிலர். அது நிற்க, வரின் என்னும் எச்சம் பெரும்பான்மையும் கூடிநின்று சுட்டுப்பெயராம் என்று பொருள் தருதலையும் நோக்கிலர். அது நிற்க, 'முதல்வரின் சுட்டே; தனிவரின் சுட்டே' எனப் பொருள்கோள் இலக்கணமும் நோக்கிலர். அதுபற்றித் தமக்கென ஒன்றிலரும் அதுவே. உரைப்பார் உரைப்பவைக்கெல்லாம் யாம் என் செய்வோம் என்க.

– 8 உரை

'முக்கால் கேட்பின் முறையறிந்து உரைக்கும்' என்பதை மாத்திரம் உட்கொண்டு சூத்திரப்பொருளை வரம்பு செய்யாது ஓடுவர், அங்ஙனம் ஓடியும் இளைப்பே பயனன்றி நூற்பயன் இல்லையே. ஒவ்வொரு சூத்திரத்தை முக்கால் பார்த்துப் பொருளை வரம்பு செய்து நடப்பாராயின், அவர்கட்கு ஒருகாலே அமையும்; இருகால் முக்கால் வேண்டுவதில்லை என்பது. – 8 உரை

## அப்படி ஒழுகி அரும்பொருள் பெறுக: 8

பொருள் என்னும் பெயர் பொதுப்பெயர் ஆயினும், கல்விப் பொருளை மாத்திரம் அங்ஙனம் கூறாது, நற்பொருள் - பெரும் பொருள் - அரும்பொருள் - குறையாப்பொருள்-துணைப்பொருள்- நீங்காப்பொருள் - கேடில்பொருள் - விளக்கும்பொருள் - விழுமிய பொருள் முதலாக யாதானும் ஓர் அடைகொடுத்தே கூறுவர்;

'கேடில் விழுச்செல்வம் கல்வி'

எனச் சிறுபான்மை பல அடைகொடுத்தும் கூறுவர். —8 உரை

ஆதன் தந்தை என்பது செய்யுளில் வருங்கால் அவ்வாறு வாராது, ஆந்தை என்றே வரும். இச்சொல்லை வேற்றுமைத் தொகைக்கு உதாரணம் காட்டினமாயின், சிற்றதிகாரங்களைக் குற்றமற முற்றக்கற்ற சூரியரும் அவ்வாறு கொள்ளாது, நிலைமொழி ஏதோ, வருமொழி ஏதோ, அம்முதல் ஏதோ, எவ்வுருபு தொக்கதோ எங்ஙனம் தொக்கதோ, ஈது ஒரு பறவைப் பெயரோ, பிழைபட்டதோ' எனப் பலவும் எண்ணி அலைவரே.
—12 உரை

வேற்றுமைஉருபுகள் அல்லாதனவும் வேற்றுமைஉருபுகள் போலக் காணப்படுவதற்கு எடுத்துக்காட்டுக்கள்; பெண்ணை வளர்த்தான், வேலைவென்றான், எண்ணோடு நின்று பிரிந்தது, தலையோடு தகர்ந்தது. சாரியையின் நீங்கிற்று, உணற்குவந்தான், சித்திரைக்குப் போயினான் இவன்கால் நெடிது, அவன்கடை வெல்லம் முதலியன. —19 உரை

தெரியாநிலை-மாடம் செய்யப்பட்டது. தெரியாநிலையாவது வினைமுதல் என்று தெரியப்படாமல் வினைமுதலாயே நிற்பது.

தடுமாற்றம்-'ஒத்தகிழவனும் கிழத்தியும் காண்ப'. தடுமாற்றமாவது ஒருபொருளே ஒருகால் வினைமுதலாயும் ஒருகால் செயப்படுபொருளாயும் நிற்றல். —26 உரை

தெரிநிலைச் செயப்படுபொருள்-மாடம் செய்யப்பட்டது. தெரிநிலையாவது வினைமுதல் உருபு ஏற்றும் செயப்படுபொருளே என்று தெரியநிற்றல். —31 உரை

நிலைமையில் உடைமைகள் ஆம் வேற்றுமைக்குறை: சாத்தனது ஈசுமுதலியன முன்ஒருவர்க்கு உரிமையாயும், பின்வேறொருவருக்கு உரிமையாயும் வருதலின் நிலைமையில் உடைமைகள் என்றும்.

முதல்நிலைகள் முன்னிலை ஏவல் ஒருமை எதிர்கால முற்று என்பையாயின், அது பொருந்தாது; என்னை ? இவை ஆறும் மாறுபடுதலின். அஃது எங்ஙனமெனின் முதல்நிலை தனியே நின்று முன்னிலைக்கண் சென்றதாயின், அவ்வாறு ஏனை ஈரிடத்தும் சேறல் வேண்டும்; செல்லாதாகலின் முன்னிலையன்று. ஏவலாயின், முதல்நிலைக்கண் வி-பி இணைந்து வேறுபொருள் பட்டாற்போல, ஐ-ஆய்-இ விகுதி கூடின் வேறு பொருள்பட வேண்டும்; அஃது இன்று. முதல்நிலை தானே ஏவலாயிருக்கவே, அதன் மேல் மூன்று விகுதியும் விதித்தல் நின்று பயன் இன்மையாம் ஆகலின், ஏவல் அன்று. நடந்தார் என்புழி நட என்னும் வினை பன்மைப்பாற்பொருள் படலின், ஒருமையன்று நடந்தான் என்புழிநட என்னும் வினை இறந்த காலவினையாகலின் எதிர்காலம் அன்று. நடத்தல் என்புழி நட என்னும் சொல் பெயராயே நிற்றலின் வினையன்று. 'செய்குன்று' – 'செய்தக்க அல்ல' – 'அறிகொன்று' இச்சொல் நன்று – வழிவற்றது – இவ் வயலுக்கு ஆயிரம் முடிநட்டான் என்புழி, ஈரெச்சம்-தொழிற் பெயர்-பொருட்பெயர் முதலாயினவற்றிற்குப் பொதுவாதலின், முற்றன்று. அன்றியும் நடந்தேன் நடந்தான் முதலிய வழுவற்ற சொற்களெல்லாம் இடவழுவாயேவிடும், விதியும் மறையும் ஒரு சொற்கண்ணே உள்ளதே வினை, அக்குணம் இவற்றிற்கு இன்று. முதல்நிலை புடைபெயர்தலே வினையாதலின் எல்லாவினைச் சொற்களும் பிறத்தற்கு மூலமாகிய பொது முதல்நிலைத்தனி வினைப்பெயரே என்று கொள்க. எல்லாவினைச் சொற்களாவன, திணை பால் இடம் காலம் விதி மறை பொது சிறப்பு ஆதியோடு கூடின முற்று எச்சங்களும் தொழிற்பெயர்களும் என்க.

– 66 உரை

**முற்று ஈரெச்சம்............ஒப்பாய் நிற்றல்:** 67

முற்றுமுதல் நிற்றல்வரை ஒரு பொருள், அது செய்யா என்னும் வாய்பாடு.

ஒன்றனையும் செய்யா ஓரறிவும் அற்ற உயிர்கள். – முற்று. செய்யாத சாத்தன், செய்யாது வந்தான் என்ற இவை விகாரப்பட்டுச் செய்யாச்சாத்தன், செய்யாவந்தான் என ஈரெச்சமாயின. மாறாக்காதலர், — — ......, ஏறுவளை, தோற்று இடறாய் என வருவனவும் அவை.

செய்பா என்னும் வினையெச்சம் விதிவினை.

நடத்தலைச் செய்பாவாகிய குதிரைகள் கெட்டன - இஃது அஃறிணைப் பன்மைப்பெயர்.

செய்யும் யாவும் ஆவும் - இவை பலமொழி.

செய்யாச்சாத்தன் - மறை; செய்யாவந்தான் - விதிவினை.

குதிரைகள் நடத்தலைச்செய்யா - இயற்சொல்; செய்யாச் சாத்தன்-திரிசொல். —67 உரை

## முதல்நிலை இல்லாத் தொழிற்பெயர்: 70

எ-டு: பூசல், வேட்டை, சண்டை, கூத்து, தொழில், வினை, ஆசை, வேட்கை, அவா, சூது, வாது, தச்சு, கொல்லு, நெட்டி என வரும்; பட்டினியும் அது. —70 உரை

## இது விதி, இது மறை எனப்படாதன: 75

போ, வா; தொடு, விடு; வாழ், கெடு; உலவு, நில்; உறங்கு, விழி; விரும்பு, வெறு; கொடு, வாங்கு; சா, பிழை; கிழக்கு,மேற்கு; தெற்கு, வடக்கு; உறவு, பகை; துன்பம், இன்பம்: ஆண், பெண்; பகல், இரவு; ஒளி, இருள்; மெய், பொய்; உண்மை, இன்மை,
—75 உரை

## மறைச்சொல்லின் முதனிலை விதிப்பொருள் தருதல்: 77

ஒரு பொருளின் புடைபெயர்ச்சியே வினை என்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தது; அவ்வினையைக் கொள்வதால் வினையெச்சம் என்பதும் அங்ஙனம் முடிந்தது; அவ்வினையெச்சம் வினையைக் கொள்ளுதலன்றி வினையின்மையைக் கொள்ளாது என்பதும் அங்ஙனம் முடிந்தது. ஆகவே, உண்டு வந்தான் என்பது பொருந்தும். உண்டு நடவான் என்பது பொருந்தாது; இலக்கண வழுவேயாம்; ஆகையால், அம் மறைச்சொல்லினுள் முதல் நிலையைப் பிரித்து ஒரு பொருளின் புடைப்பெயர்ச்சியாகிய புடை பெயர்ந்தநடத்தல்என்னும்தொழிற்பெயராக்கி, வினையெச்சத்தை

வினைகொண்டு முடித்து, பின்பு செய்யான் என்னும் மறையை வருவித்து உண்டு நடத்தலைச் செய்யான் என்று முடிப்பர். இக்கருத்துப் பரிமேலழகருக்கும் உரையாசிரியருக்கும் நியமம். இது மறைச்சொல்லின் முதல்நிலை விதிப்பொருள் பெற்றது.

—72 உரை

## தனக்குப் பயன்தரும் பேரறிவோர் வினை: 80

யான் எனது என்னும் செருக்கு அறுத்தான்:

அவாவை விட்டான்; பிறவியை ஒழித்தான்; வீட்டை அடைந்தான். —80 உரை

## பிறருக்குப் பயன்படும் பேரறிவோர் வினை: 80

நூலைப் பாடினன்; உரையை எழுதினன்; மாணாக்கனை அறிவித்தான். —80 உரை

## தனக்கும் பிறருக்கும் பயன்தரும் பேரறிவோர் வினை 80

வேதாகமவழி விரும்பி ஒழுகினன்;
இரக்கத்தொடு பலி இரக்கக் கொடுத்தான்;
அரனது விழாவை மிக அலங்கரித்தான்;
சிவனது பூசையை மிகச் சிறப்பித்தான். —80 உரை

## தனக்கும் பிறருக்கும் பயன்சாராப் பேரறிவோர் வினை: 80

அறம் பொருள் இன்பம் அளவின்றித் தேடினன்.

அட்டமாசித்தியை அருமையாய்த் தேடினன். —80 உரை

வெறுவினை-நல்வினை தீவினை எனும் இரண்டின் உட்படாது வருவது: எ-டு: கையை நொடித்தான்; காலை நெட்டிவிட்டான்; மூச்சுவிட்டான்; உறுப்பழுக்கை உருட்டி உதிர்த்தான்; வேர்வையைத் துடைத்தான்; சோற்றைப் பிசைந்தான் என்பன.

**தீவினை நல்வினையாதல்:** 81

எ—டு: எண்ணுபிரவரைக்கழுவிலேற்றினர்; ஆண்டவனைத் தூதாக அஞ்சாது நடத்தினர்; கடவுளை நாள்தொறும் கல்லால் அடித்தனர்; ஆண்டவன் தலையில் அடியால் மிதித்தனர் முதலியன.
—81 உரை

**நல்வினை தீவினையாதல்:** 81

அநங்கன் அலரை அரனிடத்து இட்டான்; வேங்கை வரிப்புலிக்கு விடத்தைத் தீர்த்தான்; பாம்புக்குப்பால் வார்த்தான்; வலையனுக்குத் தூண்டில் வழங்கினன்; கள்ளனுக்குச் சோறு இட்டான்; கணவனை இழந்தோர்கட்கும் கண்ணி குத்தித் திரியுமவர் துயரினுக்கும் இரங்கினன்-போல்வன. —81 உரை

**செய்யாவினை செய்வினையாதல்:** 81

பெரியோரைக் காணில் இருக்கை எழாமை, எதிர் செல்லாமை; ஒருவனை யாறு ஈர்த்தவழியும், விடம் தீண்டின வழியும் அவ்விடர் தீர்க்கும் வல்லன் தீராமை;

தலைவியைப் புல்லுதற்கு விதித்த நாளில் புல்லாமை-முதலியன. —81 உரை

**செய்இருவினையே செய்யா வினையாதல்:** 81

மெய்யுணர்வுடையோர் எவ்வினை செய்யினும் அவ்வினை செய்யாவினையாகும் என்று ஆகமமறை எல்லாம் இயம்பும்.
—81 உரை

**உண்டு என்பதன் இலக்கணம்:** 85

உண்டு என்பது முறை இறந்து தன்மை முற்றாயும், எச்சமாயும், உள் என்னும் முதல்நிலையாயும், பகுபதமாயும், உண்மை என்னும் தொழிற்பெயராயும், பகாப்பதமாயும், உண் என்னும் முதல்நிலையாயும் திரியும். —85 உரை

**வேண்டும்-தகும்-படும் என்னும் பொதுவினை:** 85

வேண்டும் முதல் மூன்றும் முற்றிற்கும் எச்சத்திற்கும் பொதுவாய செய்யும் என்னும் வாய்பாடு அன்றோ எனின்,

'ஆஅதும் என்னுமவர் ஓஒதல் வேண்டும்' யான் போகல் வேண்டும், நீ உரைத்தல்வேண்டும் என உயர்திணைப்பல்லோர் படர்க்கை தன்மை முன்னிலைக்கண் வருதலின் அன்று என்க. இம்மூன்றும் ஒருபொருட் கிளவியாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப் பொருள்பட்டே நிற்கும்என்க. தேற்றப் பொருளாவது இக்காரியம் செய்தலே தக்கது, தகுதி, பொருத்தம், துணிவு, தெளிவு, நன்மை, அமைதி, முடிவு, வேண்டுவது; இக்காரியம் செய்யாமையே வழுவே, இழுவே, தீமையே, சிறுமையே, குற்றமே எனப் பொருள்படுதல்.

உம்மை வேண்டும், இன்மை வேண்டும், பொதுவினை வேண்டும், இக்காரியம் செய்யத்தகும், இக்கூழ் அருந்தத்தகும், இச்சோறு உண்ணத்தகும், வஞ்சரை அஞ்சப்படும், கற்றறிந் தோரைத் தலைநிலத்து வைக்கப்படும், கீழ்களைச் செய்தொழிலால் காணப்படும், இருவினைக்குத் தக்க உடல், 'கொள்ளப்படாது மறப்பது என் கூற்றுக்களே' எனவரும். இங்ஙனம் வரும் செய்யுள்கட்கெல்லாம் நச்சினார்க்கினியர் சேனாவரையர் பரிமேலழகர் உரையாசிரியர் முதலாயினர், முற்றாயும் எச்சமாயும் பொருள் உரைக்கின் வழுவாம் என்று கருதி, வியங்கோள் பொருட்டு என்றும், விதிபொருட்டு என்றும், தகுதிப்பொருட்டு என்றும், வேண்டுவது என்றும், தமக்கு வேண்டியவாறே பொருள் எழுதிச் சொற்குணம் வாளாபோயினர். —85 உரை

## எழுத்து என்பதன் இலக்கணம்: 86

எழுத்து என்னும் தொழிற்பெயர் அப்பொருளை விட்டுப் பால்பகா அஃறிணைப்பொருட் பொதுப்பெயராய், அப்பொருளை விட்டு ஓவியம் முதலியன போலன்றி அகரம் ஙகரம் முதலியன வடிவை உணர்த்தும் சிறப்புப்பெயராய், அப்பொருளைவிட்டு ஒலியை உணர்த்தும் ஆகுபெயராய், அப்பொருளைவிட்டு அவ்வொலியினது இலக்கணத்தை உணர்த்தும் இருமடியாகுபெயராய், அப்பொருளை விட்டு அவ்விலக்கணத்தை உணர்த்தும் நூலை உணர்த்தும் மும்மடியாகுபெயராய், அப் பொருளைவிட்டு 'இங்ஙனம் கூறிற்று எழுத்து, இங்ஙனம் அறிவித்தது எழுத்து' எனக் கருமகருத்தாவையும் கருவிக் கருத்தாவையும் உணர்த்தும் நான்மடியாகுபெயராய் நின்று பல பொருள்பட்டது காண்க. —86 உரை

## கெடுதல் விகாரத்திற்கும் மொழிவருவித்தலுக்கும் வேறுபாடு: 89

கெடுதல்விகாரம் மொழிவருவித்தலுக்கு முன்பே சொல்லாவது பொருளாவது சொற்பொருள் கூடியாவது முடியாது கிடக்கும். மொழி வருவித்தலாவது மொழி வருவித்தற்கு முன்பே சொல்லும் பொருளும் முடிந்துகிடக்கும். —89 உரை

## 'செய்யுள் விகாரத்தால், சிதைந்ததனுல்' 89

செய்யுள் விகாரம்-அகரஇறுதி இயற்றே, வாய்பாட்டின் எடுத்துக்காட்டு, இல்வாழ்க்கை, சிர்தூக்கி என்பன முறையே அகர இயற்று, பாட்டின், காட்டு, வாழ்க்கை, தூக்கி என வருவன. சிதைந்தது-இழிவுபட்டது; கழா அக்கால் முதலியன. —89 உரை

## 'பண்புத்தொகை விதி பகரின் பெருகும்' என்பதன் விளக்கம்: 98

வெண்கரும்பு என இனம் பற்றியும்,

வெண் திங்கள் என இனம் பற்றுமலும்,

வெண்டாமரை எனத் தனக்கு உரிய சினையை விட்டு உரிமையில்லாத முதலைப் பற்றியும், (வெண்பூத்தாமரை).

வெள்ளாடு என எதிர்வுபற்றியும், (எதிர்காலத்து கேள்விக்குப் பயன்படுதல் கருதி).

விலங்கன்னர் வெள்ளறிவினர் என இழிவு பற்றியும்,

வெண்களமர், வெள்ளாளர் எனச் சாதி பற்றியும்,

வெள்ளோட்டம் எனப் புதுமை பற்றியும்,

வெண்தேர் எனப் பொய் பற்றியும்

வெளிற்றுப்பனை என உள்ளீடின்மை பற்றியும்,

வெளியார் முன் என இயல்பு பற்றியும்,

இச்சோறு வெண்படி எனக் கலப்பின்மை பற்றியும்,

இவ்வுரு வெண்கலம் என ஒரு பெயரே பற்றியும்,

வெள்ளிடை எனத் தனிமை பற்றியும்,

இவ்வணி வெள்ளைப்பொன் என நிறமின்மை பற்றியும்,

இவனுக்கு வெள்ளைப் புத்தி என மந்தம் பற்றியும்,

இவ்வூரில் வெள்ளைப்பிள்ளையார் எனப் பண்புப்பேரொலி பற்றியும்

இன்னும் பலவாய் ஒரு பண்பே விரிதலின், 'பெருகும்' என்றும். —98 உரை

## எழுத்தாற்றல் கெடுதல்: 102

இக்குளத்தைப் பெருக்கு; இவ்வாற்றுப் பெருக்கு நேற்று வந்தது; இவ்வாற்றுப் பெருக்குக் கடல்போன்றது என முறையே குகர உயிர்மெய்யானது ஒன்று-அரை-கால் மாத்திரையாகவும், முற்றுகரம்-குற்றுகரம்-ஒற்று ஆகியும், அலகுபெற்றே நின்றும், பெறுதற்கும் பெறுமைக்கும் பொதுவாயே நின்றும், பெறுதே நின்றும் எழுத்து ஆற்றல் கெட்டது. —102 உரை

## சொல் ஆற்றல் கெடுதல்: 102

நகம் என்னும் சொல் ஒருகால் உகிரையும், ஒருகால் மலையையும் உணர்த்தல் சொல் ஆற்றல் கெட்டதாகும்.

—102 உரை

## பொருள் ஆற்றல் கெடுதல்: 102

'இப்பணம் முழுதும் கொடாதே' என்னும் தொடரினுள், ஒருகால் சிறிதாயினும் கொடாதே என்றும், ஒருகால் சிறிது வைத்துப் பெரிது கொடு என்றும், ஒருகால் பெரிதுவைத்துச் சிறிது கொடு என்றும் உணர்த்தல் பொருளாற்றல் கெட்டது

—102 உரை

## புணர்ச்சி விகாரம், புணர்ச்சியில் விகாரம்- வேறுபாடு: 113

புணர்ச்சி விகாரம் வருமொழி நாற்கணம் நோக்கியாவது, வேற்றுமை அல்வழி நோக்கியாவது, அடிதொடை ஓசை மூன்றும் நோக்கியாவது, இன்னும் யாதானும் ஒரு காரணத்தால் விகாரப்படுவது. புணர்ச்சியில் விகாரம் ஒரு காரணமும் இன்றியே விகாரப்படுவதாம். —113 உரை

## நிலைமாறுதல்: 114

'தமிழ் மொழி விதியால் நிலைமாறுதலுக்கும் வடமொழி விதியால் நிலைமாறுதலுக்கும் வேறுபாடு என்னை யெனின், 'நிலை மொழியும் வருமொழியும் திரியாது தம்முள் நிலைமாறுதல் திரிந்து தம்முள் நிலைமாறுதல் என்க. எ-டு: 'வைக்கும் தன் நாளை எடுத்து' - 'பருகுவன் பைதல் நோய் எல்லாம் கெட'- எனவும், வாய் பிளந்து உறங்கினன், குறட்டைவிட்டு உறங்கினன் எனவும் முறையே காண்க. —114 உரை

## அரசன் என்பதன் பொருள்கள்: 117

அரசன் என்பது அரச குலத்தில் பிறந்தவன், அரசனுக்குப் பிறந்த வேறொரு சாதியான், அரசனது தொழிலை ஏற்ற வேறொரு சாதியான், அரச குலத்தில் பிறந்து வேறொரு சாதியாய் வழுவினவன் என்று பலபொருள் ஒருசொல்லாகப் பொருள்பட்டு வரும். —117 உரை

## மாண்டான் என்பதன் பொருள்கள்: 117

மாண்டான் என்பது பஞ்சத்தில் படையில் மாண்டான், குணத்தில் பொறையில் கல்வியில் ஒழுக்கத்தில் மாண்டான் என்று பலபொருள் ஒரு சொல்லாகப் பொருள்பட்டு வரும். —117 உரை

## வேற்றுமைஅல்வழிஇரண்டற்கும்பொதுவழிச்சந்தி 118

எ-டு: அஞ்செவி, அங்கை, கருப்புவேலி, உரைநூல், நூலுரை, மதிமுகம், முகமதி, புலிகொன்றது, நாய்கடித்தது போல்வன. —118 உரை

## வேற்றுமை-அல்வழி பொதுவழியுள் அடங்காச்சந்தி: 118

எ-டு; பொருபடை, கருங்குதிரை, படைபடை, பம்பந்து, வயிறு மொடுமொடென்றது, முன்றில், முயற்கோடு, சாத்தன் சோற்றைப் பகற்கண்பசித்து விருந்தோடு உண்டான் போல்வன.

—118 உரை

## பொது இடம் என்பதன் விளக்கம்: 118

இவன் சொன்னசொல் என்பது தன்மைக்கும் முன்னிலைக்கும் படர்க்கைக்கும் பொதுவிடம். தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மையும், முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலையும் பொது இடம் என்றலும் ஒன்று.

—118 உரை

## ஒருதொடர்-பலதொடர்-விளக்கம்: 124

எ-டு:சாத்தன் அரிசி நெல் பயறு முதலானவை கொண்டு வந்தான்; கொற்றன் பூ இலை காய் பழம் முதலானவை கொண்டு வந்தான்; தேவன் மிளகு புளி கடுகு முதலானவை கொண்டு வந்தான்; பூதன் சீலை தாலி பூண் அணி முதலானவை கொண்டு வந்தான்; அரசன் அக்காலத்து அமைச்சொடு வந்தான்; தலைவன் தலைவிக்குத் தாலி கட்டினான் - இப்பல தொடர்களும் வரைதல் என்னும் ஒரு பொருட்கண்ணே வருதலின், ஒரு தொடரேயாம். அங்ஙனம் ஆதல், வந்தான் என்னும் ஐந்து முற்றையும் செய என் எச்சமாக்கி நோக்குக.

சாத்தனை வரைவிற்கு வடக்கனுப்பினான்; கொற்றனை இழவுக்குக் கிழக்குப்போக்கினான்; தேவனை நெற்கொள்ளத் தெற்கே ஏவினான்; பூதனைத் தேன் விற்க மேற்கே செலுத்தினான்- இவையெல்லாம் ஒருவன் வினையேயாயினும் ஒன்றற்கொன்று மறையாகப் பொருத்தம் இன்மையால் பல தொடரேயாம்.

—124 உரை

## பொருட்டிரிபு என்பதன் விளக்கம்: 125

பொருட்டிரிபாவது மாவினது வெண்பூப் பசுங்காயாயிற்று, களாவினது பசுங்காய் கருங்கனியாயிற்று, மயிரினது கருமை வெண்மையாயிற்று, பாலினது இனிமை புளிப்பாயிற்று என்பன போல்வன.

—125 உரை

## பலபொருட்கு ஒருவடிவாகும் பதங்களை ஓசையொடு கூறுதல்: 126

நட, வா முதலிய முதல்நிலைத் தனிவினைகளை முற்றாக்க வேண்டில் எடுத்துச்சொல்லுக; முதல்நிலைத் தொழிற்பெயராக்க வேண்டில் படுத்துச் சொல்லுக.

கட்டு என்பதனை முற்றுகர முற்றாக்க வேண்டில் எடுக்க; குற்றுகரத் தொழிற்பெயராக்க வேண்டில் படுக்க.

'நெறிநின்றார் நீடு வாழ்வார்' என்பதனை முறையே பெயராக்க வேண்டில் எடுக்க; முற்றாக்க வேண்டில் படுக்க.

செய்யும் என்பதை எச்சமாக்க வேண்டில் எடுக்க; முற்றாக்க வேண்டில் படுக்க.

அம்பலத்தாடி என்பதனைப் பெயராக்க வேண்டில் எடுக்க; எச்சமாக்க வேண்டில் படுக்க. இவை போல்வன எல்லாம் பல பொருட்கு ஒரு வடிவமாகிய தனிமொழி. —126 உரை.

## செய்யும் என்பதன் இலக்கணம்: 128

செய்யும் என்பது இருதிணைக்கும், ஆண்பாற்கும், பெண் பாற்கும், ஒருமைக்கும், பன்மைக்கும், முற்றிற்கும், எச்சத்திற்கும், நிகழ்காலத்திற்கும் எதிர்காலத்திற்கும் பொருந்தி நிற்கும்.

—128 உரை

## பொருள் காரணமாகச் சொற்பொருள் உணர்த்தல்: 129

பொருள் காரணமாகச் சொற்பொருள் உணர்த்தலாவது, முன்பே தனக்கு வேண்டிய பொருளைக்கருதிக்கொண்டு, பின்பு அப்பொருளுக்கு ஏற்கச் சொற்பிரித்துச் சந்தி கூட்டுதல்; 'தவரடி புனைந்த தலைமையோன்'-இத்தொடருக்குத் தவருடைய அடியைப் புனைந்த அன்பிற் பெரியோன் என்றும், தவத்தோராலே தன்னுடைய அடியைப் புனையப்பட்ட அறிவிற் பெரியோன் என்றும் கூறுக.

## அதிகாரம் காரணமாகச் சொற்பொருள் உணர்த்தலாவது: 129

'கூடில் இன்பம், பிரியின் துன்பம்' என்னும் தொடர் அகச்செய்யுட்கண் வரின், தலைவியைத் தலைவன் புணரில் அளவில் இன்பம்; ஓதல், பகை, தூது, துணை, பொருள் முதலியவற்றால் உடன்படாது நீங்கில் அளவில் துன்பம் என்றும், புறச் செய்யுட்கண் வரின், கற்றோருடன் கலை பயிலில் அளவுபட்ட இன்பம்; நித்தியம், நைமித்திகம், காமியம் முதலிய விரதங்களால் உடன்பட்டுப் பயிறல் ஒழியின் அளவுபட்ட துன்பம் என்றும் கூறுதல். —129 உரை

இவ்வாசிரியரே இந்நூற்பா அடிகளுக்கு இத்தகைய எடுத்துக்காட்டுக்களும், விளக்கங்களும் தாராது ஒழியின், இத்தகைய அருஞ்செய்திகளைத் திரிபின்றி உள்ளவாறு உணர்தல் இயலாது என்பது தேற்றம்.

பேரறிவோர் பிறருக்குச் செய்யும் வினைகளாக-நூலைப் பாடினான், உரையை எழுதினான் என்ற எடுத்துக்காட்டுக்களைத் தந்துள்ள இவ்வாசிரியராம் பேரறிஞர் பிறருக்குப் பயன்படல் வேண்டும் என்ற அருள் நோக்கத்தால் இந்நூலை உரையுடன் யாத்த பெற்றி உணரப்படும்.

# இலக்கணக் கொத்து நூல்



இந்நூல் கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறைச் சுவாமிநாத தேசிகரால் இயற்றப்பட்டது. இது தொல்காப்பிய இலக்கண நூலினும் தொல்காப்பியங் களிலும் அருகிக்கிடந்த விதிகளைப் பெருகத் திரட்டி வடமொழி இலக்கண வழக்கும் சில விராய்க் கூறும் நூலாகும். இது வேற்றுமையியல், வினையியல், ஒழிபியல் என்னும் மூன்றியல்களாய்ச் சொல்லிலக்கண நுட்பம் தெள்ளிதின் துறைப்படுத்து உணர்த்தும் ஒரு சிறப்புடை நூலாகும்.

—திராவிடப் பிரகாசிகை.

# இலக்கணக் கொத்து நூல்

உ

## சிறப்புப் பாயிரம்

மதிவெயில் விரிக்கும் கதிர்எதிர் வழங்காது
உயர்வரை புடவியின் அயர்வுற அடக்கித்
தென்புவி வடபுவி யின்சமம் ஆக்கிக்
குடங்கையில் நெடுங்கடல் அடங்கலும் வாங்கி
ஆசமித்து உயர்பொதி நேசம்உற்று இருந்த
மகத்துவம் உடைய அகத்திய மாமுனி
தன்பால் அருந்தமிழ் இன்பால் உணர்ந்த
ஆறுஇரு புலவரின் வீறுஉறு தலைமை
ஒல்காப் பெருந்தவத் தொல்காப் பியமுனி
தன்பெய ரால்உலகு இன்பஉறத் தரும்நூல்
உளம்கூர் உரையாம் இளம்பூ ரணமும்
ஆனு இயல்பின் சேனு வரையமும்
உச்சிமேல் புலவர்கொள் நச்சினர்க் கினியமும்
மற்றமற்று இடப்பொருள் முற்றும் உணர்ந்தும்
நன்னூல் முதலிய சின்னூல் தெரிந்தும்
தொல்காப் பியங்கள் பல்கால் பயின்றும்
அவைகளின் அருகிய நவையறு விதிகளும்
வடமொழி இலக்கணக் கடல்முடிவு உடையவும்
கற்பவர்க்கு எளிதி னில்புலப் படவே
மதியினின் மதித்துமுன்று அதிகாரம் ஆக்கிப்
புலக்கணத்து எனஉலகு இலக்கணக் கொத்துஎன்று
ஒருபெயர் இட்டுத் திருவுளம் பற்றினன்
வளமையின் வளர்புகழ் அளவிய புனல்நாட்டு
ஏஅடு விழிஉமை ஆவடு துறையில்

ஆசிலா உயிர்க்குஅருள் மாசிலா மணிப்பெயர்
அம்பல வாணன்என்று உம்பரும் பரவ
வருஞான தேசிகன் இருதாள் புனையும்
அமிழ்தினும் இனிய தமிழ்வளர் நெல்லை
உவாமுதிர் மதிக்கலை சுவாமி நாதன்
தேசார் ஞானச் செல்வன்
ஈசான தேவன் எனும்தே சிகனே.

**மதிவெயில்................அகத்தியமாமுனி:**

**விளக்கவுரை:** மதியமும் கதிரும் வெளிப்படுத்தும் கதிர், தன்னைக் கடந்து பரவாதபடி உயர்ந்த விந்தியமலையை நிலத்தில் ஆழுமாறு அடக்கி, தம் வருகையால் தென்னிலத்தை வடநிலத்திற்கு ஒப்பாக்கி, உலகை ஏற்றத்தாழ்வு இலதாக்கி, உள்ளங் கையில் பெருங்கடலை அடக்கி ஆசமனம்செய்து, உயர்ந்தபொதிய மலையில் விருப்பொடு தங்கியிருந்த மேம்பாடுடைய அகத்தியப் பெருமுனிவர்.

**தன்பால்...............தருநூல்:**

**வி-ரை:** தம்மிடத்தில் அரிய தமிழை இன்பமாகப்பயின்ற புலவர் பன்னிருவருள் மேம்பாடுற்ற தலைமையினை உடைய தளராத பெருந்தவத்தை உடைய தொல்காப்பிய முனிவர் தம் பெயரால் நன்மக்கள் இன்புறுமாறு அருளிய நூல்.

**உளங்கூர்...............உணர்ந்து:**

**வி-ரை:** உள்ளத்தில் பொருந்துவதற்குச் சார்பான உரை யாகின்ற இளம்பூரணமும், ஒரு காலத்திலும் நீக்கும் நிலைமை-யில்லாத சேனாவரையமும், கற்றுவல்ல சான்றோர் தம் உச்சிமேல் வைத்துக்கொண்டு கொண்டாடும் நச்சினார்க்கினியமும் ஏனைய தமிழிலக்கணச் செய்திகளும் முழுதும் உளங்கொண்டு,

**நன்னூல்..................திருவுளம்பற்றினன்:**

வி-ரை: நன்னூல் முதலிய சிறிய நூல்களை ஆராய்ந்தும், பழைய காப்பியங்களைப் பலகாலும் கற்றும், அவைகளில் இலை மறை காய் போல அருமையாகக் காணப்படும் குற்றமற்ற விதிகளும், வடமொழியில் கடல் போலப் பரந்துபட்டுள்ள இலக்கண முடிபு உடைய தமிழ்நூற் செய்திகளும், கல்வி வல்லார்க்கு எளிமையாகப் புலனுமாறு. தன் கூரிய மதியான் நுனித்தறிந்து மூன்று இயல்களை அமைத்து 'அறிவுக்குரிய செய்திகளின் தொகுப்பு இது' என நன்மக்கள் நுவலுமாறு இலக்கணக் கொத்து என இந்நூற்குப் பெயரிட்டமைத்தான்.

**வளமையின்..................தேசிகனே:**

தன் நில வளப்பத்தால் புகழ் ஓங்கிய சோழநாட்டில், அம்மை ஒத்த கூரிய கண்களை உடைய உமாதேவியார் சிறப்புற்றிருக்கும் திருவாவடுதுறையில், குற்றம் நீங்கிய ஆன்மாக்களுக்கு அருள் பாலிக்கும் மாசிலாமணியாம் அம்பலவாண தேசிகன் என்று சான்றோர்களும் புகழுமாறு அவதரித்த குரு மகாசந்திதானத்தின் திருவடிகளைத் தலைமேற் கொண்டு விளங்கும், அமிழ்தினும் இனிமையுடைய தமிழ்மொழி வளரும் திருநெல்வேலியில், நிறைமதி போலக் கலைகளால் நிரம்பிய சிறப்புடைய சுவாமிநாதன் என்ற இயற்பெயரினனும், ஒளியைத் தரும் ஞானத்தையே செல்வமாகக் கொண்ட ஈசான தேவன் என்னும் தீட்சா நாமமுடைய குரவனுவான்.

இச் சிறப்புப்பாயிரம் இயற்றியவர் இன்னுர் என்பது அறியக் கூடவில்லை. இதன்கண் சிறப்புப்பாயிர இலக்கணங்கள் அமைந்துள்ள வாற்றை நோக்குவோம்:

ஆக்கியோன் பெயர்-சுவாமிநாதன் எனும் ஈசானதேவன்.

வழி-தொல்காப்பிய உரைகள், நன்னூல் முதலிய சின்னூல், பழைய காப்பியங்கள், வடமொழிநூல்கள் ஆகியவற்றின்வழி.

எல்லை தென்புவி.

நூற்பெயர்-இலக்கணக்கொத்து.

யாப்பு-நவையறு விதிகள் கற்பவர்க்கு எளிதினில் புலப் படவே தொகுத்தமை.

முதலியபொருள்-முன்னோர் இலக்கண இலக்கியங்களும் வட மொழி இலக்கணமும் கூறும் அரிய விதிகள்.

கேட்போர்-இந்நூல் புலக்கணத்தது என்னும் நன்மக்கள்.

பயன்-அரியவிதிகள் எளிதினில் புலப்படல்.

எளிய விதிகளைவிடுத்து அரிய விதிகளையே நிரலாக அமைத்துத் தாம் வரைந்த உரையால் எளிதிற் புலப்படுத்தி யுள்ளமை இந்நூல் முழுதும் காணப்படும்.

[பாயிரப் பகுதியாக அமைந்துள்ள முதல் பன்னிரு நூற்பாக் களையும் பாயிரவியல் என்று கொள்வோம்.]

# பாயிரவியல்

## விநாயக வணக்கம்

தேக பந்தம் தீர்ந்துஅருள் பெறவே
ஏக தந்தன் இணையடி பணிவாம்.

வி-ரை: உடல் தொடர்பு நீங்கி அருள் பெறுவதற்காக ஒற்றைக்கொம்புடையவனாகிய விநாயகனுடைய திருவடிகள் இரண்டனையும் வணங்குவோமாக. 1

## சிவ வணக்கமும் முருகன் வணக்கமும்

2 கற்றைச் செஞ்சடைக் கண்மூன்று உடையனை
ஒற்றைச் செங்கதிர் வேலனை உள்குவாம்.

வி-ரை: கற்றையாக அமைந்த சிவந்த சடையினையும் மூன்று கண்களையும் உடைய சிவபெருமானையும் ஒன்றாகிய கதிரவன்போல ஒளி வீசும் வேலை ஏந்திய முருகப்பெருமானையும் உடல் தொடர்பு நீங்கி அருள் பெறுமாறு மனத்தால் வழி படுவோமாக. 'தேகபந்தம் தீர்ந்து அருள்பெற' என்ற தொடரை இந்நூற்பாவின்கண்ணும் கூட்டிப் பொருள் செய்க. 2

## ஞானகுரு வணக்கம்

3 ஊரும் பேரும் உருவும் இல்லான்
ஆயினும் திருவா வடுதுறை ஊர்அணைந்து
அம்பல வாணன் எனும்பெயர் ஆதரித்து
அறிவே உருவாய் அமர்ந்தகுரு ராயனைப்
பொறையுடல் போகப் புகழ்ந்து அடி போற்றுவாம்.

வி-ரை: தான் தனக்கென ஓர் ஊரும் ஒருபெயரும் ஒரு வடிவும் ஏற்றுக்கொண்டிருப்பவன் அல்லன் ஆயினும், திருவாவடுதுறை என்ற ஊரை ஏற்றுக்கொண்டு, அம்பலவாணன் என்னும் பெயரையும் கொண்டு, ஞானமே வடிவமாகக் கொண்டு, மகாசந்நிதானமாக வீற்றிருக்கும் குருவாம் அரசனை, வீடு பெற விரும்புவாருக்குப் பாரமாகத் தோன்றும் உடல் தொடர்பு நீங்குமாறு புகழ்ந்து, அவன் திருவடியைப் போற்றுவோமாக.

'இறைவனே குருவடிவாகிக் குவலயந்தன்னுள், திருவடி வைத்துத் திறம் இது பொருள் என வாடா வகை உபதேசிப்பன்,' என்பது சான்றோர் கருத்து. 3

## வடமொழிப் போதகாசிரியர் வணக்கம்

4 செப்பறைப் பதியில் வாழ்சிவத் துவிசன்
கனக சபாபதி கருதுவட நூற்கடல்
தபோதனர் புகழும் சைவாதி ராசன்
உபய பதங்களை உண்மையொடு பணிவாம்

வி-ரை: செப்பறை என்ற ஊரில் வாழ்கின்ற ஆதிசைவர் மரபில் உதித்தவனும், கனக சபாபதி என்ற இயற்பெயரை உடையவனும், சான்றோரால் போற்றப்படும் வடநூலறிவில் கடல் போன்றவனும் ஆகிய, தவத்தையே செல்வமாகக் கொள்ளும் சான்றோர்கள் புகழத்தக்க சைவசமயத்துப் பேரரசனுடைய திருவடிகள் இரண்டனையும் மனம் மொழி மெய் மூன்றும் ஒன்றிய உண்மையோடு பணிவோமாக. 4

## தமிழ்ப் போதகாசிரியர் வணக்கம்

5 திருநெல்வேலி எனும்சிவ புரத்தன்
தாண்டவ மூர்த்தி தந்தசெந் தமிழ்க்கடல்
வாழ்மயி லேறும் பெருமாள மகிபதி
இருபத கமலம் என்தலை மேற்கொண்டு
இலக்கணக் கொத்துஎனும் நூல்இயம் புவனே.

[வி-ரை: திருநெல்வேலி என்னும் சைவத் திருப்பதியை இருப்பிடமாக உடையவனும், தாண்டவமூர்த்தி என்பாருடைய மகனும், செந்தமிழ் அறிவில் கடலாக இருப்பவனும் ஆகிக் கல்விச் சிறப்போடு வாழ்கின்ற மயிலேறும் பெருமாள் என்னும் பெருஞ் செல்வனுடைய இரண்டு திருவடித்தாமரைகளையும் என் தலையிற் சூடி இலக்கணக்கொத்து என்னும் இந்நூலினை ஆக்குகின்றேன்.]

நிறைந்த கல்வியுடையார் மாட்டுச் செல்வம் வாழ்நாள் அதிகாரம் முதலிய நலன்கள் குறைதல் பெரும்பான்மை; இவனுக்கு ஒரு குறையும் இல்லை என்பது தோன்றப் பெயருக்கு முன்னும் பின்னும் அடை கொடுத்தாம்.

பலர் நூல்களினும் பலர் உரைகளினும் சிதறிக்கிடந்த சில விதிகளை ஒவ்வொரு சூத்திரத்தால் ஒருங்கே அறியக் கிடத்தலின், இலக்கணக்கொத்து என்று காரணப்பெயர் பெற்றது என்க.

[வி-ரை: 'இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளியர் ஆதலும் வேறு'. கு-374

என்ற குறட்பாவினையும்,

'நாவின் கிழத்தி நணுகுதலால் சேராளே
பூவின் கிழத்தி புலந்து'. நாலடி-252

என்ற நாலடியார் அடிகளையும் நோக்கிக் கல்வியும் செல்வமும் ஒருங்கு நில்லாமையே உலகில் பெரும்பான்மை என்பது அறிக. பெயருக்கு முன்அடை 'வாழ்' என்பது. பின்அடை 'மகிபதி' என்பது.

இந்நூலமைப்பிற்கு இலக்கண நூல்களேயன்றி அவற்றின் உரைகளும் அடிப்படையாதல் சிறப்புப்பாயிரத்துள்ளும் சுட்டப்பட்டுள்ளது.

இறைவணக்கப் பாடல் மூன்றனும் வீடுபேற்றை விரும்பும் இவ்வாசிரியர் இக்கருவி நூல் யாத்தமை, பேரறிவோர் பிறருக்குப் பயன்படுமாற்றால் செய்யும் அருளிச்செயல்களுள் ஒன்றாம் என்பது இந்நூல் என்பதாம் நூற்பா உரையால் தெளிவுறுதலும் நோக்குக.] 5

## இந்நூலின் தோற்றம்பற்றிய விளக்கமும் அவையடக்கமும்

6 பத்தொடு ஒன்பது பாடை நூல்களுள்
மாறு படுதல் வழக்கே,[1] அன்றியும்
ஒவ்வொரு பாடையின் உள்ளே ஓரின்
பலநூல் மாறு படுமே[2] அன்றியும்
ஒவ்வொரு நூற்கடல் உள்ளே ஓரின்
எழுத்துச் சொல்பொருள் யாப்புஅணி ஐந்தனுள்
ஒன்றனை ஒன்றே ஒழிக்கும்,[3] அன்றியும்
ஓர்அதி காரத்து உள்ளே ஓரின்
ஓர்இயல் விதியினை ஓர்இயல் ஒழிக்கும்[4]
ஓர்இயல் அதனின் உள்ளே ஓரின்
ஒருசூத் திரவிதி ஒருசூத் திரவிதி
தன்னைத் தடுத்துத் தள்ளும்,[5] அன்றியும்
ஒருசூத் திரத்தின் உள்ளே ஓரின்
ஒருவிதி அதனை ஒருவிதி ஒழிக்கும்,[6]
நூல்ஆ சிரியர் கருத்தினை நோக்காது
ஒருசூத் திரத்திற்கு ஒவ்வொர்ஆ சிரியர்
ஒவ்வொரு மதமாய் உரைஉரைக் குவரே.[7]
அவ்வுரை யதனுள் அடுத்தவா சகங்கட்கு
அவர்கருத்து அறியாது அவர்அவர் கருத்தினுள்
கொண்ட பொருள்படப் பொருள்கூ றுவரே,[8]
ஒருவிதி தனக்கே பலபெயர் வருமே,[9]
ஒருபெயர் தனக்கே பலவிதி வருமே,[10]
நூல்உரை போதகா சிரியர் மூவரும்
முக்குண வசத்தான் முறைமறந்து அறைவரே,[11]
இம்முறை எல்லாம் எவர்பகுத்து அறியினும்
அவத்தை வசத்தால் அலைகுவர் திடனே,[12]
அதிமதி நுட்பமோடு அதிகலை கற்பினும்
விதியது வசத்தால் விதிவிலக்கு அயர்ப்பாம்,[13]
ஆகையால் அளவிடல் அரிதே, அன்றியும்
சொல்லின் கூட்டமும் பொருளின் கூட்டமும்

அவ்விரண் டனையும் அளவிடப் படாவே,[14]
இந்நால் வகையினுள் என்றால் இயன்றது
சிறப்பாய் உள்ளன சிலதே டினன், அவை
மறப்பு எனும் பகைவன் வாரிக் கொண்டனன்,[15]
அவன்கையில் அகப்படாது அடங்கின வற்றுளும்
சிறிதினைச் சிறியேன் சிறிய சிறார்தமக்கு
உரைத்தனன்; அன்றிஃது ஒருநூல் அன்றே;
இவ்வழக்கு அறிந்தோர் இகழுதல் வழக்கே!
இவ்வழக்கு அறியார் இகழுதல் வழக்கே.[16]

இது அவையடக்கம், இதற்குப் பொருள்கூறின் மிகவும் பெருகுமாதலின், இன்றியமையாதனவற்றிற்கு மாத்திரம் சுருக்கிக் கூறுகின்றாம். இந்நூல் முழுதும் அது.

பத்தொடு ஒன்பது பாடை நூல்களுள்
மாறுபாடு உறுதல் வழக்கே

எழுத்து ஐம்பத்துமூன்று; முப்பது-இது பாடைமாறுபாடு.

[வி-ரை: வடமொழியும் ஏனைய பதினெண் மொழிகளுமாக மொழிகள் பத்தொன்பதாயின. இப்பதினெண் மொழிகள் வழங்கும் நிலங்களுக்கெல்லாம் வடமொழி பொதுவாகலின் வேறாகப் பிரித்துக் கொள்ளப்படுகிறது.

'மண்டலத்துப் பதினெண் தேசிகச்சொல் வடசொல்'
பி. வி. 18

'முட்டிலா மூவறு பாடை மாக்களும்'

'முனிவுஅற அருளிய மூவறு மொழியுளும்' நன். சிற. பாயி.

'சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுக்குடகம்
கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலுங்கம் கலிங்கம்வங்கம்
கங்கம் மகதம் கடாரம் கவுடம் கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாம்இவையே'.

என்ற மேற்கோள்களான் பாடைகள் பத்தொன்பதாமாறு அறியப்படும்.

[வடமொழியுள் உயிர் 16, மெய் 35 ஆக எழுத்துக்கள் 51 என்பதே பிரயோகவிவேக நூலார் கருத்தாகும். த்ர, ஞ்ய என்பனவற்றைச் சேர்த்து ஐம்பத்து மூன்று என்பார் நன்னூலார். அவர் மதத்தைப் பின்பற்றியவர் இவ்வாசிரியர். தமிழில் முதலெழுத்து முப்பது என்பதனுள் கருத்துவேறுபாடின்று.]

2. ஒவ்வொரு பாடையி னுள்ளே ஓரின்
பலநூல் மாறு படுமே

சார்பெழுத்து மூன்று, பத்து. இது ஒருபாடை நூல் மாறுபாடு.

[வி-ரை: சார்பெழுத்து மூன்று என்னும் தொல்காப்பியம். பத்து என்னும் நன்னூல் முதலியன.]

3. ஒவ்வொரு நூற்கட லுள்ளே ஓரின்
எழுத்துச் சொல்பொருள் யாப்புஅணி ஐந்தனுள்
ஒன்றனை ஒன்றே ஒழிக்கும்

நெடில் தொடர்க்குற்றுகரம் எழுத்தினுள்ஈரலகு; யாப்பினுள் ஓர் அலகு.

'பால்போலும் மொழி' சொல்லினுள் விரி: அணியினுள் தொகை.

'துப்பின் எவனாவர் மன்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர்' -குறள் 1165

'கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் கடல்ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து' -குறள் 496

இவை சொல்லினுள் வெளிப்படை; முறையே அகப்பொருளினும் புறப்பொருளினும் குறிப்பு.

இவை ஒரு நூலுள் ஐந்தும் மாறுபாடு. ஒன்றே என்றதனால் ஒழித்தல் எளிது என்க.

[வி-ரை: கடல்போலப் பரப்புடைய ஓரிலக்கண நூலுள் கூறப்பட்டுள்ள எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்ற ஐம்பகுப்புக்களில் ஒரு பகுப்பில் கூறப்பட்ட செய்தி பிறிது ஒரு பகுப்பில் விலக்கப்படுதலும் உண்டு.

நெடில்தொடர்க் குற்றுகரம் என்பது நெடில்தொடர்க் குற்றுகர ஈற்றுச் சொற்களாகிய நாகு, காசு போல்வன. அச் சொற்கள் எழுத்ததிகாரத்துள் இரண்டு எழுத்துக்களாகக் கணக்கிடப்படுவன. 'சீரும்தளையும் சிதையின் சிறிய இஉ அளபோடு - ஆரும் அறிவர் அலகு பெறுமை' (யா. கா. ஒ. 1) என்பது யாப்பிலக்கண விதியாதலின், சீரும் தளையும் சிதையுமிடத்துக் குற்றுகரம் கணக்கிடப்படாதாகவே, நெடில் தொடர்க் குற்றுகரச்சொல் ஒரே அசையாகக் கணக்கிடப்படும் செய்தி எழுத்திலக்கண விதியை யாப்பிலக்கணவிதி விலக்கிய-தற்கு எடுத்துக்காட்டு.

'பால்மொழி' — உவமத்தொகை, பால்போலும் மொழி— உவமவிரி. இது சொல்லதிகாரச் செய்தி. உவமையின் இனிமை என்ற பொதுத்தன்மையும் வெளிப்படப் 'பால்போலும் இனிய மொழி' என்று கூறுதலே விரி உவமை; 'பால்போலும் மொழி' என்பது தொகைஉவமை என்பதே அணிபிலக்கணச் செய்தி. இது சொல்லதிகாரச் செய்தியை அணியதிகாரம் விலக்கியதற்கு எடுத்துக்காட்டு.

தூதுவிடாமை நோக்கித் தோழியொடு புலந்து உரைக்கும் தலைவி, 'இன்பம் செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்ப வரவினைச் செய்பவல்லவர், துன்பம் செய்தற்குரிய பகைமைக்கண் என் செய்வர் கொல்லோ?' என்று கூறிவதாகப் பொருள்படும் 'துப்பின் எவனாவர்' என்ற குறட்பாவில், சொற்களுள் எதுவும் மறைந்திலாமையால் சொல்லினுள் வெளிப்படை. ஆனால், தலைவி தன் தோழி நட்பை விடுத்துத் துயரஞ் செய்யும் பிறளாயினள் என்று கருதியமை அகப்பொருளினுள் குறிப்பு.

'சக்கரம் வலிய நெடிய தேர்கள் நிலத்தின்கண் அன்றிக் கடற்கண் ஓடா; அதுபோலக் கடற்கண் ஓடும் நாவாயும் நிலத்தின்கண் ஓடா' என்று பொருள்படும் 'கடல்ஓடா' என்ற குறளில் சொற்கள் வெளிப்படையாக உள்ளன. ஆனால், 'பகைவரை அவர் நிற்கும் நிலன் அறிந்து அதற்கேற்ற கருவியால் வெல்க' என்று குறிப்பால் பெறப்படுத்தப்படுதலின், புறப்பொருளினுள் குறிப்பு. இவ்விரண்டு பாடல்களும் சொல்லதிகாரச் செய்தியைப் பொருளதிகாரச் செய்தி விலக்கியமைக்கு எடுத்துக்காட்டு.

இவ்வாறு ஓரதிகாரச் செய்தி பிறிது ஓர் அதிகாரச் செய்தியால் விலக்கப்படுதல் இலக்கண நூல்களில் மிகுதியாகக் காணப்படும் என்பது.]

ஒவ்வொரு நூற்கடல்

அகப்பொருள் விளக்கம், யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங்காரம் முதலிய நூல்கள் ஒன்றனையே உணர்த்தும்; நன்னூல், சின்னூல் முதலிய நூல்கள் இரண்டனையே உணர்த்தும்; அவை போலன்றித் தொல்காப்பியம் ஐந்தனையும் உணர்த்தலின் 'கடல்' என்றும். அகத்தியம், அவிநயம் முதலாயினவும் அதுவாதலால் 'ஒவ்வொரு நூல்' என்றும்.

[வி-ரை: அகப்பொருள் விளக்கம் - அகப்பொருள் நூல்.

யாப்பருங்கலக் காரிகை - யாப்பு நூல்.

தண்டியலங்காரம் - அணி நூல்.

நன்னூல், சின்னூல் - எழுத்து, சொல் என்ற இரண்டனை மாத்திரம் நுவலும் நூல்கள்.

தொல்காப்பியம் எழுத்து - சொல் - பொருள் என்ற மூன்றே பகுப்புடையதாயினும், பொருட்பகுப்பினுள் செய்யுளியல் யாப்பினையும் உவமவியல் அணியினையும் விளக்குதலின், தொல்காப்பியம் எழுத்து - சொல் - பொருள் - யாப்பு - அணி என்ற ஐந்திலக்கணம் நுவலும் நூல் எனப்பட்டது. தொல்காப்பியக் காலத்தில் யாப்பும் அணியும் பொருளதிகாரக் கூறுகளாகவே இருந்து பின்னர்த் தனித்தனி விரிந்தவாகும்.

அகத்தியம், அவிநயம் என்ற நூல்கள் இக்காலத்து வழக்கில் இல்லை. அகத்திய நூற்பாக்கள் என்பவை மிக அருகியே காணப்படுகின்றன. அவிநய நூலின் யாப்புப் பற்றிய நூற்பாக்களே பலவாகக் காணப்படுகின்றன.]

4. ஓரதி காரத்தின் உள்ளே ஓரின்
ஓர்இயல் விதியினை ஓர்இயல் ஒழிக்கும்

'இடைஉரி, தழுவுதொடர் அடுக்குஎன ஈரேழே' ந. 152

'உருபுகள் புணர்ச்சியின்,
ஒக்குமன் அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே' ந. 242

இவை ஓரியலோடு ஓரியல் மாறுபாடு.

[வி-ரை: ஒரே அதிகாரத்தினுள் ஓரியலில் விதிக்கப்பட்ட செய்தியைப் பிறிது ஓரியல் ஒழிக்கும். நன்னூல் எழுத்ததிகாரத்தில், உயிரீற்றுப் புணரியலில் இடைச்சொல்தொடர் அல்வழிப்புணர்ச்சி என்று கூறப்பட்டிருக்கவும், உருபுபுணரியலில் இடைச்சொல்லாகிய வேற்றுமைஉருபு பெயரோடு கூடும் புணர்ச்சி வேற்றுமைப்புணர்ச்சி என்று கூறப்பட்டிருக்கும் செய்தி ஓரியல் விதியினைப் பிறிதோரியல் விதி விலக்கியமைக்கு எடுத்துக்காட்டு.]

5. ஓர்இயல் அதனின் உள்ளே ஓரின்
ஒருசூத் திரவிதி ஒருசூத் திரவிதி
தனைத் தடுத்துத் தள்ளும்.

'ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்பும் ஆகும் வேற்றுமைக்கு' ந. 209

'சாதி குழூஉபரண் கவண்பெயர் இறுதி
இயல்பாம் வேற்றுமைக்கு' ந. 211

இவை ஓரியலுள் ஒரு சூத்திரத்தை மற்றொரு சூத்திரம் தள்ளுதல்

[வி-ரை வேற்றுமைப் புணர்ச்சியில் நிலைமொழியீற்றில் ணகரமோ னகரமோ இருக்கவும், வருமொழி முதலில் வல்லினம் வந்தால் ணகரம் டகரமாகவும், னகரம்றகரமாகவும் திரியும் என்ற நன்னூல் மெய்யீற்றுப் புணரியலில் உள்ள பொதுவிதியை, பாண் உமண் முதலிய சாதிப் பெயர்களும், அமண் முதலிய குழூஉப் பெயர்களும் பரண் கவண் என்றபெயர்களும் வருமொழிவல்லினம் வரினும் வேற்றுமைப் பொருட்கண் இயல்பாகவே புணரும் என்ற மெய்யீற்றுப் புணரியல் சிறப்பு விதி விலக்கியமை, ஓரியலின் ஒரு சூத்திரவிதியை அவ்வியலின் மற்றொரு சூத்திரவிதி விலக்கியமைக்கு எடுத்துக்காட்டு.]

6. ஒருசூத் திரத்தின் உள்ளே ஓரின்
ஒருவிதி யதனை ஒருவிதி ஒழிக்கும்

'ஞணநம லவளன ஒற்றுஇறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி ய-அல் மெய்வரின்
உ-உறும் ஏவல் உறாசில சில்வழி'. ந. 207

இஃது ஒரு சூத்திரத்தினுள் ஒன்றனை ஒன்று ஒழித்தல்.

[வி-ரை: மெய்யீற்று முதல்நிலைத்தொழிற்பெயர்களும் ஏவல் வினைகளும் உகரச்சாரியை பெறும் என்ற பொதுவிதியை, சில ஏவல்கள் உகரச்சாரியை பெறா என்று அச்சூத்திரத்திலேயே விலக்குதல், ஒரு சூத்திரத்தினுள்ளே ஒரு விதியைப் பிறிதொரு விதி விலக்கியமைக்கு எடுத்துக்காட்டு.]

7. நூலா சிரியர் கருத்தினை நோக்காது
ஒருசூத் திரத்திற்கு ஒவ்வொரா சிரியர்
ஒவ்வொரு மதமாய் உரைஉரைக் குவரே

எழுத்தினுள் உயிர்மெய்யை உம்மைத்தொகை என்றும், அன்மொழித்தொகை என்றும், வேற்றுமைத்தொகை என்றும் உரைப்பர். சொல்லினுள் மக்கட்சுட்டை அன்மொழித்தொகை என்றும், இருபெயரொட்டு ஆகுபெயர் என்றும், பின்மொழி ஆகுபெயர்ப் பண்புத்தொகை என்றும் உரைப்பர். பொருளினுள், 'வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது' (தொ. பொ 188) என்புழி, மூன்றினைப் பதி பசு பாசம் என்றும், தத்துவமசி வாக்கியம் என்றும், அறம் பொருள் இன்பம் என்றும், எழுத்துச் சொற்பொருள் என்றும், ஆண்டு என்றும் உரைப்பர். இவை ஒரு சூத்திரத்திற்கே பலரும் பலமதமாய் உரைத்தல்.

[வி - ரை: உயிர்மெய்யில் உயிரெழுத்தின் ஓசையும் கலந்திருத்தலின், ஓசை பற்றி நோக்குமிடத்து உயிர்மெய் உம்மைத்தொகையாம்; மாத்திரை பற்றி நோக்குமிடத்து உயிர்மெய் உயிர்மாத்திரையாயே நிற்றலின் அன்மொழித் தொகையாம்; சொற்பொருள் விளக்கம் காணுமிடத்து உயிர்மெய் என்பது உயிரோடு கூடிய மெய் என்று பொருள்படுதலா வேற்றுமைத்தொகையாம். இஃது எழுத்ததிகாரச்செய்தி.

மக்களாகிய கட்டு யாதன்கண் நிகழும் அது மக்கட்சுட்டு எனப் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை என்பர் சேனாவரையர். மக்கள் என்று சுட்டப்படும் பொருள் என இருபெயரொட்டாகுபெயர் என்பர் நச்சினார்க்கினியர். சுட்டு என்பது சுட்டப்படும் பொருளை ஆகுபெயரான் உணர்த்த மக்கள் என்பது அவ்வாகுபெயர்ப் பொருளை விசேடித்தலின் பின் மொழி ஆகுபெயர்ப் பண்புத்தொகை என்பர் சிலர். சிவஞான முனிவரும் இவ்வாசிரியரும் இக்கருத்தினர். இது சொல்லதிகாரச் செய்தி.

'வேண்டிய கல்வியாண்டு மூன்று இறவாது'-தொ. பொ. 188 மூன்று - பதி பசு பாசம் என்பர் சைவர். தத்துவ மசி வாக்கியம் என்பர் வேதாந்திகள். அறம் பொருள் இன்பம் என்பர் உலகியல் நோக்குவார். எழுத்துச் சொற்பொருள் என்பர் இலக்கண நூலார். மூன்று ஆண்டுகள் என்பார் நேரிய பொருள் காண்பார். இஃது பொருளதிகாரச் செய்தி.]

நூலாசிரியர் கருத்தினை நோக்காது

இனிச் சொல்லை நித்தியம் என்றும், அநித்தியம் என்றும், வியாபகம் என்றும், ஏகதேசம் என்றும், பொருள் என்றும், பொருள் அன்று என்றும், கடவுள் கட்டினது என்றும், அறிவாரும் அறியாரும் சாதியாரும் சமயத்தாரும் தேசத்தாரும் காலத்தாரும் தத்தமக்கு வேண்டியவாறே கட்டினது என்றும், ஒருவரானும் கட்டப்பட்டதன்று தானே அநாதியாய் உள்ளது என்றும் சொல்லும் பொருளும் சாத்தனது ஆடை போல வேற்றுமை என்றும், கோட்டது நூறு போல ஒற்றுமை என்றும் அர்த்தநாரீச்சுரன் போல வேற்றுமைக்கும் ஒற்றுமைக்கும் பொது என்றும் இன்னும் பலவாற்றானும் பலரும் கூறுவர். அவை நிற்க, இனி, தொல்காப்பியர் ஒருவர் தாமே அச்சொல்லை,

'அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்' -தொ.சொ. 316
என இயற்றுதற்கருத்தாகவும்,

'அம்ம கேட்பிக்கும் -தொ.சொ. 278
என ஏவுதற்கருத்தாவாகவும்,

'பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும்' -தொ.சொ 158

எனக் கருவியாகவும்,

'கொடைஎதிர் கிளவி' -தொ.சொ. 109

எனக் கொள்வோனாகவும்,

'முன்மொழி நிலையலும்' -தொ.சொ. 419

என இடமாகவும், பொருளிற்கு வேறு என்றுகூறி,

'கமம்நிறைந்து இயலும்' -தொ.சொ. 355

'உரு உட்குஆகும்' -தொ.சொ. 302

'செல்லல் இன்னல் இன்னாமையே' -தொ.சொ. 304

'எல்லே விளக்கம்' -தொ.சொ. 271

'கொல்லே ஐயம்' -தொ.சொ. 270

எனப் பொருளிற்கு வேறு அன்று என்றும் கூறினர். அச்சொற்கு ஒரு குணமே அன்றிப் பலகுணம் பொருந்தாது. அவர்க்கும் அதுவே கருத்து. அக்கருத்து அறிதல் அருமை நோக்கி 'நூலாசிரியர் கருத்தினை நோக்காது' என்றும். இக்கருத்துச் சொற்கேயன்றி அவர் கூறிய விதி விலக்கிற்கு எல்லாம் பொது.

[வி-ரை: சொல்லிலக்கணம் பற்றி இவ்வாசிரியர் பலர் மதமாய் விரித்து உரைத்துள்ளன யாவும் பிரயோக விவேகத்திலும் காணப்படுகின்றன. அவற்றை நோக்குவோம்: குடம் அறியாதானுக்குக் குடத்தைக்காட்டி இது குடம் என்றால் இது என்னும் சுட்டுப்பெயரும் குடம் என்னும் பொருளும் பேதமின்றி அபேதமாய்த் தோன்றும் என்றும், சொல்லை நித்தியம் என்றும், விபு என்றும், திரவியம் என்றும் சத்தநூலார் கூறுவர். அர்த்தநாரீசுவரன் என்னும் பார்வதிபரமேசுவரன் போலப் பொருளும் சொல்லும் பேதாபேதமாய் வரும் என்பாரும் உளர். காளிதாசனும் 'வாகர்த்தாவிவ' என்னும் சுலோகத்தால் அவ்வாறு கூறுவன். சொல்லாவது பொருளைக் காரணமாய் நின்று உணர்த்துவதற்கு உரியதன்றோ எனின்,

'பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும்' – தொ. சொ. 158

எனக் காரணமாகவும்,

'கொடைஎதிர் கிளவி, – தொ. சொ. 109

எனச் சம்பிரதானமாகவும்,

'முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குஉடன் நிலையலும்'
– தொ. சொ. 419

என அதிகரணமாகவும்,

'அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும், – தொ. சொ. 316

'ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்' –தொ. சொ. 2

'முதல்அறி கிளவி', சினைஅறி கிளவி' – தொ. சொ. 115

'அம்ம கேட்பிக்கும்' – தொ. சொ. 278

எனக் கருத்தாவாகவும் சொல்லைக் கூறுவர். அவை யெல்லாம் உபசாரம் என்க.

'கமம்நிறைந்த இயலும்' – தொ. சொ. 355

'உரு உட்குஆகும்' – தொ. சொ. 302

'செல்லல் இன்னல் இன்னு மையே' – தொ. சொ. 304

'எல்லே விளக்கம்' – தொ. சொ. 271

'கொல்லே ஐயம், – தொ. சொ. 270

எனச்சொல்லும் பொருளும் பேதமிறின் அபேதமாகக் கூறுதலின், தொல்காப்பியருக்கும் அதுவே கருத்து என்க. இனி, சேனு வரையரும் சத்தநூலார் உரைத்தாங்கு உரைப்பர். நச்சினர்க் கினியர் சத்தநூலாரோடு மாறுபடச் சொல்லைப் பொருள் உணர்த்தற்குக் கருவி என்பர். தார்க்கிகர் சுவரூபசம்பந்தம் என்பர்.' – பிர. விவே. 18 உரை

இனிச் சிவஞானமுனிவரும் தம் தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியுள் பின்வருமாறு குறித்துள்ளார்:

சொல்லும் பொருளும் பேதா பேதமாகலின் அது பற்றி,

'உறுதவ நனிஎன வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப.' – தொ. சொ. 299

'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' – தொ. சொ. 372

'புதிதுபடல் பொருட்டே யாணர்க் கிளவி' – தொ. சொ. 379
எனச் சிலவற்றை வேற்றுமைநயம் படவும்,

'கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு'
– தொ. சொ. 319

'தடவும் கயவும் நளியும் பெருமை' – தொ. சொ. 320

எனச் சிலவற்றை ஒற்றுமைநயம் படவும் கூறுவராகலின், ஈண்டு 'எழுத்தெனப்படுப, அகரமுதல் னகரஇறுவாய்' – தொ. எ. 1 என ஒற்றுமைநயம்படக் கூறிற்று. சொல்லும் பொருளும் வேறு என்பார் எழுத்து எனப் பெயர் பெறுவனவற்றை எழுத்து என்றது ஆகுபெயர் என்ப. இனிச் சொல்லும் பொருளும் ஒன்று என்பார், 'புதிதுபடல் பொருட்டே யாணர்க்கிளவி' (தொ. சொ. 279) என்பது 'இராகுவினது தலை' என்றாற்போலும் என்பர்.

இவற்றால் சொல்லும் பொருளும் ஒன்று எனவும்; வேறு எனவும், ஒற்றுமையும் வேற்றுமையும் கலந்தன எனவும் மூவகைக் கருத்துக்கள் இலக்கணம் வல்லாரிடை நிலவுதல் காணலாம். வடநூலார் மதம் பற்றிச் சொல்லும் பொருளும் ஒன்றே என்று கருதுவார் பலர்.]

8. அவ்வுரை யதனுள் அடுத்தவா சகங்கட்கு
அவர்கருத்து அறியாது அவரவர் கருத்தினுள்
கொண்ட பொருள்படப் பொருள்கூ றுவரே

'இச்சூத்திரத்திற்கு இதுவே பொருள்' என்னும் வாசகத்திற்கு, இது பொருள் என்றும், இது பொருள் அன்று என்றும், இது

பொருளோ அன்றோ என்றும், இதுவோ அதுவோ பொருள் என்றும் பல பொருள்படுதலின், அவரவர் கருத்திற்கு அகப்பட்ட பொருளையே கூறுவர். இக்கருத்து எல்லா வாசகங்கட்கும் பொது. இனிச் சூத்திரங்கட்குப் பொருள் கொள்ளுதல் எளிது; உரை வாசகங்கட்குப் பொருள் கொள்ளுதல் அரிது என்பது தோன்ற, 'நோக்காது உரைக்குவர், அறியாது கூறுவர்' என்றும்.

[வி-ரை: இச்சூத்திரத்திற்கு இதுவே பொருள் - ஏகாரம் தேற்றமாய் எடுத்து ஒலிக்கப்படின் இதுபொருள் என்றும், ஏகாரம் வினாவாய் ஒலிக்கப்படும் இது பொருள் அன்று என்றும், ஏகாரம் வினாவாய்ப் பொருள் என்பது எடுத்து ஒலிக்கப்படின் இது பொருள் அன்றோ என்றும், ஏகாரவினாவும் பொருள் என்ற சொல்லும் எடுத்து ஒலிக்கப்படின் இதுவோ அதுவோ பொருள் என்றும் அத்தொடர் ஒலிஎழுத்தை நோக்கிப் பொருள்தரும். ஆனால் வரிவடிவில் எல்லாப் பொருள்களையும் ஒரே தொடரே குறிப்பிட வேண்டுதலின், அவ்வொரு தொடருக்கே இத்தனைப் பொருள்களையும் ஒவ்வொருவர் ஒவ்வொருகருத்துப்படக்கூறுதற்கு வாய்ப்பு உண்டு. பெரும்பாலும் நூற்பாக்கள் இத்தகைய ஐய உணர்வுக்கு இடம்இன்றி யாக்கப்படும். உரைநடையாய் அமையும் உரையில் ஐயஉணர்வை அடியோடு அகற்றுமாற்றான் சொற்றொடர்களை அமைத்தல் அத்துணை எளிமைத்தன்று. ஆதலின் உரை வாசகங்கட்குப் பொருள் கொள்ளுதல் அரிது என்பது கூறப்பட்டது. 'உரையின்றிச் சூத்திரம்தானே பொருள் புலப்பட்ட காலமும் உண்டு; அஃதுஇன்றி அமையாது இக் காலத்தார்க்கு' என்று பேராசிரியர் மரபியலில்குறிப்பிட்டுள்ளதன் கருத்து சூத்திரம் உரையின்றிப் புலப்படும் வகையிலேயே தொடக்கத்தில் யாக்கப்பட்ட செய்தியை வலியுறுத்தும்.]

9. ஒருவிதி தனக்கே பலபெயர் வருமே

மூன்றும்திரிபு, மூன்றும்விகாரம்; அஃறிணை இயற்பெயர், பால்பகா அஃறிணைப்பெயர் - இவைபோல்வன விதி ஒன்றற்கே பலபெயர்.

[வி-ரை: மெய்பிறிது ஆதல் மிகுதல் குன்றல்என்று
இவ்வென மொழிப திரியு மாறே'

-தொ. எ. 109

'தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழிமூ விடத்தும் ஆகும்' - ந. 154

எனத் தொல்காப்பியம் திரிபு என்று கூறும் பெயர், நன்னூலில் விகாரம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

'தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே'
- தொ. சொ. 171

'பால்பகா அஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய'
-ந. 281

எனத் தொல்காப்பியம் அஃறிணை இயற்பெயர் எனக் குறியிட்டுள்ள பெயர், நன்னூலில் பால்பகா அஃறிணைப்பெயர் என்று வேறு ஒரு குறியிடப்பட்டுள்ளது. ஒருவிதி தனக்குப் பல பெயர் வருதற்கு இவ்விரண்டும் எடுத்துக்காட்டு.]

10 ஒருபெயர் தனக்கே பலவிதி வருமே

தனிமொழியாவது, ஆ என்றும், ஆறு என்றும், ஆற்றினன் என்றும், ஒன்று என்றும் கூறுவர்.

தொடர்மொழியாவது ஆ என்றும், ஆறு என்றும் ஆற்றினன் என்றும், ஆறிரண்டு என்றும், ஆறிரண்டுதோளான் என்றும், வரைழை என்றும் கூறுவர்.

பொதுமொழியாவது எட்டு என்றும், கவி என்றும், சாத்தன் என்றும், வாழ்க என்றும் கூறுவர். இவை போல்வன ஒரு பெயர்க்கே பலவிதி.

[வி-ரை: தனிமொழி - ஒரேசொல். தொடர்மொழி - தொடர்ந்தஇரண்டு முதலிய சொற்கள். பொதுமொழி-ஒருகால் தனிமொழியாகவும் ஒருகால் தொடர்மொழியாகவும் அமைவது, ஒருபொருளுக்கும் அப்பொருள் செய்வானுக்கும் பொதுவாக அமைவது, உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொதுவாக அமைவது, இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாக அமைவது எனப் பலவகைப்படும்.

ஆ - பசு; ஆறு - நதி, வழி; ஆற்றினன் - பொறுத்துக் கொண்டான்; ஒன்று-ஒன்று என்னும் எண் - இவை ஒரே சொல்லாய் அமைதலின் தனிமொழி.

ஆ-நீ ஆவாய்-முன்னேறுவாய்;

ஆறு-நீ ஆறுவாய்-சினம் தணிவாய்;

ஆற்றினன்-ஆறு+இன்னன்-வழியில் இத்தன்மையான்;

ஆறிரண்டு-ஆறு+இரண்டு-பன்னிரண்டு;

ஆறிரண்டு தோளான்-ஆறு+இரண்டு+தோளான்-முருகன்;

வாழை-வாழ்+ஐ-வாழும் தலைவன்;

என்புழி, ஆ-ஆறு-என்பன எழுவாய் மறைந்த ஏவல்வினை கொண்ட தொடர்மொழி. ஏனைய பல சொற்கள் இணைந்த தொடர்மொழி.

எட்டு-எட்டு என்ற எண், எள்+து-எள்ளினை உண்பாய்.

கவி-பாடல், பாடலை இயற்றுபவன்.

சாத்தன் (வந்தான்)-உயர்திணை ஆண்பாற்பெயர்.

சாத்தன் (வந்தது)-அஃறிணை ஆண்பாற்பெயர்.

வாழ்க (யான் நீ அவன்)-பொதுவினை.

இவை ஒரே பெயர் ஒன்றுக்கு மேற்பட்ட விதிகள் பெற்றமைக்கு எடுத்துக்காட்டாகும்.]

11. நூல்உரை போதகாசிரியர் மூவரும்
முக்குண வசத்தான் முறைமறந்து அறைவரே

'அன்றி இன்றிஎன் வினைஎஞ்சு இகரம்
தொடர்பினுள் உகரமாய்(த்திரியும்)' -ந. 173

என்று முறை கூறினர்; அம்முறையே வினையெச்சம்மே வினை முற்று ஆகலும்' எனல் வேண்டும்; அது மறந்து,

'வினைமுற்றே வினையெச்சம் ஆகலும்' -ந. 351
என்றார். இம்மறவி உரையாசிரியர் போதகாசிரியரோடு மூவர்க்கும் பொது. இம்முறை இப்பதினொன்றும் என்க.

[வி—ரை: அன்றி என்ற வினையெச்சம் வினைமுற்றாய்த் திரியும் என உயிரீற்றுப் புணரியலில் நன்னூலார் குறிப்பிட்டதனால் வினையெச்சம் வினைமுற்றாய்த் திரிதல் வேண்டும் என்பதும் வினைமுற்று வினையெச்சமாய்த் திரிதல் ஏற்றதன்று என்பதும் போதரவும், பின் வினையியலுள் வினைமுற்றே வினையெச்சமாகத் திரியும் என்று அவர் குறிப்பிட்ட செய்தி, இடையில் ஏற்பட்ட தமோகுணத்தான், கூறவேண்டிய முறையை மறந்து கூறியதாகும் என்பது இவ்வாசிரியர் கருத்து.

வினைமுற்றே வினையெச்சமாய்த் திரியும் என்பது சேனாவரையர் முதலாயினார் கருத்து. வினையெச்சமே வினை முற்றாய்த்திரியும் என்பது நச்சினார்க்கினியர் முதலாயினார் கருத்து. யாதேனும் ஒரே கருத்தை இறுதிவரை தழுவாது முதலில் ஒன்று கூறிப் பின்னர்ப் பிறிதொன்றினைக் கூறியது முறை மறந்து கூறியதாம். நூலாசிரியரிடம் காணப்படும் இக்குறை உரையாசிரியர், போதகாசிரியர் என்பாரிடமும் காணப்படும் என்பது. பாடைமாறுபாடு முதல் முறைமறந்து அறைதல் ஈறாகக் கூறப்பட்ட இப்பதினொன்றும் மொழி இலக்கணத்தில் சிக்கல்கள் ஏற்படுவதற்குக் காரணங்களாம்.]

12. இம்முறை எல்லாம் எவர்பகுத்து அறியினும்
அவத்தை வசத்தால் அலைகுவர் திடனே

நனவின் அறிந்ததைக் கனவின் மயங்கியும், கனவின் அறிந்ததை நனவின் மயங்கியும் நனவினுள்ளும் பிரேரகத்தின் அறிந்ததைச் சாக்கிரத்துள் மயங்கியும், சாக்கிரத்தின் அறிந்ததைப் பிரேரகத்தின் மயங்கியும், பிரேரகத்தினுள்ளும் தனக்கு உரிய யாதானும்ஒருமணிப்பொற்பணியையாதானுமொருகாரணத்தால் பிறன் ஒருவன் கையில் கொடுத்துப் போக்கி, சிலபொழுது இடையிட்டு அவன் கொண்டுவந்துதர வாங்கிப்பார்த்து, அதுவோ வேறொன்றோ என்னும் ஐயம் தீர்ந்து, சிலர்க்கு அறிவித்துச் சேமத்தின் கண்ணே வைத்து, சிலபொழுது இடையிட்டு அவனைக் கண்டு 'அப்பணி தருவாயாக' எனப் பகைக்கொண்டு, சிலபொழுது

இடையிட்டு அப்பணியைக் கண்டு, தெளிந்து பகைதீர்ந்தான். இவை போல்வன அவத்தை வசத்தாலலைதல். இவையும் மூவாசிரியருக்கும் பொது.

[வி-ரை: பாடைமாறுபாடு முதல் முறைமறந்து அறைதல் ஈறாகிய பதினொன்றனையும் நன்கு பகுத்து அறியினும், உயிர்நிலை உபாதியாகிய சாக்கிரம்-சொப்பனம்-சுழுத்தி முதலியவற்றால் மனத்திட்பம் அழிவுபெறுதலுக்கு உலகியல் செய்தியை எடுத்துக் காட்டாகத் தந்துள்ளார்.

சாக்கிரம்-கவனிப்பு, விழிப்பு; பிரேரகம்-காரியப்படுதல்.]

13. அதிமதி நுட்பமோடு அதிகலை கற்பினும்
விதியது வசத்தால் விதிவிலக்கு அயர்ப்பாம்

அதிமதி - அளவிறந்த புத்தி; அதிகலை - மேம்பாட்டினை உடைய நூல். விதி - ஊழ். விதி, விலக்கு - வழுவில்லது, வழுவுடையது. அயர்த்தல் - விதியை விலக்கு என்றும், விலக்கை விதி என்றும் கூறுதல். இக்கருத்து,

'நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்' — குறள் 373

'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு' - குறள் 423

'தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு' - குறள் 396

இவை முதலாயினவற்றுள் காண்க. இவையும் மூவாசிரியருக்கும் பொது.

[வி-ரை: அளவிறந்த இயற்கையறிவோடு மேம்பட்ட நூல்களைக் கற்றாலும் போகூழ் வயத்தால் விதியை விலக்கு என்றும், விலக்கை விதியென்றும் மயங்கிக் கொள்ளும் நிலை ஏற்படும்.

பேதைப்படுக்கும் ஊழுடையான் ஒருவன் நுண்ணிய பொருள்களை உணர்த்தும் நூல் பலவற்றைக் கற்றானாயினும்,

அவனுக்குப் பின்னும் தன் ஊழாகுகிய பேதைமை உணர்வே மேற்படும்.

முக்குணங்களும் மாறிவருதல் மனித இயற்கையாதலின், உயர்ந்தபொருள் இழிந்தார்வாயிலும் இழிந்தபொருள் உயர்ந்தார் வாயிலும் உறுதிப்பொருள் பகைவர்வாயிலும் கெடுதிப்பொருள் நட்டார்வாயிலும் வெளிப்படுதலும் கூடும். ஆதலின், சொல்வாரை நோக்காது சொல்லப்படும் பொருளின் நன்மை தீமைகளை ஆய்ந்து கொள்க.

மணலின் கட்கேணியின்கண் நீர் தோண்டிய அளவிற்றாக ஊறும். அதுபோல மாந்தர்க்கு அறிவு கற்ற அளவிற்றாக ஊறும்.

இழவூழ் உற்றக்கடை பேதைபடுக்கும் ஆதலின், விதியை விலக்காகவும் விலக்கை விதியாகவும் மயங்கிக்கூறும் நிலை நூல் உரை போதகாசிரியருக்கு ஏற்படுதல்கூடும் என்பதாம்.]

14. ஆகையால் அளவிடல் அரிதே; அன்றியும்
சொல்லின் கூட்டமும் பொருளின் கூட்டமும்
அவ்விரண் டனையும் அளவிடப் படாவே

ஆகையால் இப்பதின்மூன்று ஏதுவினாலும், விதிவிலக்கு அளவு செய்தல் யாவரானும் கூடாது. அன்றியும் சொற்கூட்டமும் பொருட்கூட்டமும் அதுவே. ஒருபொருள் பலசொல்லினையும், ஒருசொல் பலபொருளினையும் முறையே சொற்கூட்டமும் பொருட்கூட்டமும் என்பர் இலக்கணநூலோர். வேத ஆகம புராணம் முதலிய நூல்களையும், மாயாகாரியமாய் உள்ள சகல பிரபஞ்சங்களையும் முறையே சொற்கூட்டமும் பொருட்கூட்டமும் என்பர் வீட்டு நூலோர்.

[வி–ரை: பாடைமாறுபாடு முதல் ஊழ்வயத்தால் விதிவிலக்கு அயர்த்தல் ஈறாக ஏதுக்கள் பதின்மூன்றாதல் காண்க. விதியும் விலக்கும் பலவாய் இருத்தலினாலும் இவற்றை உள்ளவாறு அளந்து அறிந்து கூறுதல் அவ்வளவு எளிமை உடைய செயல் அன்று. மலை என்ற பொருளில் விண்டு, விலங்கல், வெற்பு, குவடு, கோடு முதலிய பல சொற்கள் அமைந்துள்ளமை சொற் கூட்டத்துக்கு எடுத்துக்காட்டு. மா என்ற சொல் வண்டு,

விலங்கு, மாமரம், திருமகள் முதலிய பல பொருள்களைத் தருவது பொருட்கூட்டத்துக்கு எடுத்துக்காட்டு.]

15. இந்நால் வகையினுள் என்னுள் இயன்றது
சிறப்பாய் உள்ளன சிலதேடினன்; அவை
மறப்புஎனும் பகைவன் வாரிக் கொண்டனன்
அவன்கையில் அகப்படாது அடங்கின வற்றுளும்

இந்நால்வகை என்று பின்னும் கூறியது அநுவாதம்; அஃது என்னெனின், வீடு ஒன்றே நீங்கலாக ஒழிந்தன எல்லாம் இங்ஙனம் கூறிய நான்கனுள் அடங்கும் என்று பொருள்படுதலின் என்க. இந்நான்கனையும் அளவிடல் அரிதேயன்றி, இவற்றினுள் ஒறனை மாத்திரம் அளவிடலும் அரிது என்க. ஆயின் நூல்களால் பயன் என்னெனின்,

'ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நானாழி' -மூதுரை 19

இவ்வுவமையால் பயன் உண்டு என்று தெளிக. இம்முறை பற்றியே 'என்னால் இயன்றது' என்றும். நாழிபோல் உருவப் பொருள் அன்றே, அருவமாய் நித்தமாய் அறிவுமயமாய் அறியும் அறிவு இருக்கவே, முழுதும் கொள்ளாது குறையக் கொள்வது எக்னெனின், பஞ்சபாசத் தடையால் என்க. தடை தீர்ந்த பின்பு கொள்க எனின், அங்ஙனமும் கொள்ளப்படாது என்க. அம்முறை இங்ஙனம் விரிக்கின் பெருகும் என்க.

ஐந்தனுள் எழுத்தினும் சொல் சிறப்பு; ஏனைமூன்றும் அச்சிறப்பின்று. மூன்றனுள் இயற்றமிழ் சிறப்பு; ஏனை இரண்டும் அச்சிறப்பின்று. திருவள்ளுவர், திருக்கோவையார், திருமுருகாற்றுப்படை முதலிய செய்யுட்கள் சிறப்பு; சிலப்பதிகாரம், சிந்தாமணி, மணிமேகலை முதலிய செய்யுட்கள் அச்சிறப்பின்று. நான்கனுள் வீட்டுநூல் சிறப்பு; அறம் முதலிய மூன்று நூலும் அச்சிறப்பின்று. வீட்டு நூலுள்ளும் அறிவுநூல் சிறப்பு; சரியை முதலிய மூன்று நூலும் அச்சிறப்பு இன்று. சிறப்பிற்கும் சிறப்பின்மைக்கும் பொதுவிற்கும் காரணம் விரிக்கின் பெருகும் என்க. இம்முறை பற்றியே 'சிறப்பாய் உள்ளன' என்றும். எல்லா நூலும் இம்மூன்றனுள் அடங்கும் என்க. சிறப்பாய் உள்ள வற்றுள்ளும் சில என்க, அவற்றுள்ளும் மறந்தது பல என்பது

தோன்ற 'வாரிக்கொண்டனன்' என்றும். 'அடங்கினவற்றுள்ளும் சிறிது' என்பதற்குக் காரணம் 'எளியவிதிகளை' (7) என்னும் தொடரான் மேற்காட்டுதும்.

[வி-ரை: நால்வகை - விதி, விலக்கு, சொற்கூட்டம் பொருட்கூட்டம் என்பன. முன்கூறிய ஒன்றனையே பின்னும் ஒரு காரணம் பற்றி எடுத்துக் கூறுதல் அநுவாதம் எனப்படும். முன் மொழிந்தது புரோவாதம் எனப்படும். ஈண்டு அநுவாதத்தால் பயன் வீடு நீங்கலான செய்திகள் எல்லாம் இந்நான்கனுள் அடங்கும் என்பது. இவற்றின் பரப்பை நோக்க, இந்நான்கனுள் ஒன்றனைக்கூட முழுதும் அளவிடல் இயலாது. கடல்நீர் முழுதையும் நாழி முகவாவிடினும் தான் கொள்ளும் அளவிற்குக வாதல் முகந்துவருதல் கூடும்; அதுபோல, முழுதையும் கூறா விடினும் இலக்கண ஆசிரியர்கள் தத்தம் அறிவு ஆற்றலுக்கு ஏற்ப இந்நான்கனுள் தாம் அறிந்து தெளிந்தவற்றை எடுத்துக் கூறுவர் என்பது. நாழிபோலாது, உருவமற்று என்றும் அழியாது அறிவு மயமான ஞானம்மக்களுக்குஆண்டவனால் அருளப்பட்டிருப்பினும், அறிவு, உலகப்பற்றுக்களால் தடைபட்டுத் தன் ஆற்றல் குறைந்து விடும் என்பது.

வடநூலார் சொல்லிலக்கணம் ஒன்றனையே இலக்கணம் என்று கூறுவர். அக்கருத்தை உடன்பட்டு இவ்வாசிரியரும் சொல்லிலக்கணமே சிறந்தது என்பர். அங்ஙனமே தாம் வழிபடும் சான்றோர் கருத்தை ஒட்டி, இயற்றமிழ் - சைவசமயநூல்கள் - வீட்டுநூல் - ஞானநூல் இவற்றின் தனிச் சிறப்புக்களை ஏனைய- வற்றிலிருந்து பிரித்துக் கூறுகின்றார். சரியை முதலிய - சரியை, கிரியை, யோகம் என்பன. எளியவிதிகளை யாவரும் அறிவர் ஆதலின் அவற்றை விடுத்து, மிக அரிய விதிகளையே கூறலின் 'சில' என்றார். இம்மூன்று-தொல்காப்பியம், திருக்குறள், திருக் கோவையார் என்பன.]

16. சிறிதினைச் சிறியேன் சிறிய சிறார்தமக்கு
உரைத்தனன் அன்றிஈது ஒருநூல் அன்றே
இவ்வழக்கு அறிந்தோர் இகழுதல் வழக்கே !
இவ்வழக்கு அறியார் இகழுதல் வழக்கே

கற்றோர் எல்லாருள்ளும் கடையேன் என்பது தோன்றச் 'சிறியேன்' என்றும், சூரியோர்க்குத் தொல்காப்பியம் முதலிய நூல்கள் இருத்தலால் ஏனையோர்க்கே இது என்பது தோன்றச் 'சிறிய' என்றும், தருணர்க்கு எல்லாம் அந்நூல்கள் இருத்தலின் பாலர்க்கே இது என்பது தோன்றச் 'சிறார்' என்றும், ஓரதிகாரமாயினும் இதனுள் அறியக்கூடாது என்பது தோன்ற 'நூல் அன்று' என்றும், நூல் அன்று என்று எம்மால் சொல்லியிருக்கவே, குற்ற முண்டாயினும் கூறார் என்பது தோன்ற 'வழக்கே' என்றும், வழக்கு அறியாதார் வழக்கையும் இகழுதல் இயற்கையே என்பது தோன்ற 'வழக்கே' என்றும் கூறினும்.

'காணாதாற் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டானாம் தான்கண்ட வாறு' - குறள் 849

என்பதனுள் இகழுதல் இயற்கை என்பது காண்க.

அவையடக்கம் என்று பெயரிட்டு இங்ஙனம் பலவற்றையும் விரித்ததனால்பயன் என்னெனின், பலவாற்றானும் புழுத்தநாயினும் கடையேனது அறியாமையை எல்லோர்க்கும் அறிவித்தல் ஒன்றுமே பயன் என்க. இவ்வாசகம் முடிந்தது முடித்தல் என்னும் உத்தி.

[வி-ரை: இந்நூல் இளையோர்க்கே என்றும், இச்சிறு நூலுள் ஓரதிகாரச் செய்திகூட முற்றக் கூறப்படவில்லை என்றும், இச்செய்தி அறிந்து சான்றோர் இதனை இகழார் என்றும், கீழோருக்கு எதனையும் என்றும் இகழுதல் இயற்கை என்றும், தாம் விரும்பியவாறே எதனையும் செய்யும் கீழோருக்கு அறிவுரை கூறுபவன் அறிவிலியாவான் என்றும் கூறி, வெவ்வேறாகப் பல நூல்களுள் கூறப்பட்ட செய்திகள் ஒருங்கு புலப்படவேண்டி அவற்றை 'முடிந்தது முடித்தல்' என்னும் உத்தியால் தொகுத்துச் சுட்டியுள்ள செய்தியையும் குறிப்பிட்டுள்ளார். 'பணியுமாம் என்றும் பெருமை' (குறள் 978) என்ற சான்றோர் உரைக்கு இணங்கத் தம்மைத் தாழ்த்திக்கொண்டு பேசுதல் சான்றோர் பலருக்கும் இயல்பு என்க. 6

## இந்நூல் பார்த்தற்கு உரிய கருவிகள் பத்தாவன

7. வடமொழி இலக்கணம் சிலவகுத்து அறிந்து
தொல்காப் பியத்தினும் தொல்காப் பியத்தினும்
அருகிக் கிடந்ததைப் பெருக உரைத்தனன்;
வேறுவிதி நவமாய் விளம்பிலன்என்க[1];
தொல்காப் பியம்திரு வள்ளுவர் ஆதிநூல்
வடமொழி நியாயம் வந்தன சிலவே
தமிழின் நியாயம் தந்தன பலவால்;
தமிழ்விதி வல்லராய் வடமொழி விதிசில
அறிந்தவர்க் கேஇந் நூல்ஆம் என்க[2] ;
வடமொழி வழிகல வாதே தமிழைத்
தனியே நீர்தராத் தன்மை என்னெனின்,
இலக்கணம் இலக்கியம் ஏது நிமித்தம்
சாத்திரம் சூத்திரம் தந்திர வுத்தி
பகுதி விகுதி பதமே பதார்த்தம்
ஆதி அந்தம் அகாரம் மகாரம்
உதாரணம் மாத்திரை உவமை உருவகம்
விகற்பம் சந்தி விதிஅலங் காரம்
காலம் இலேசம் காரகம் ஞாபகம்
விசேடணம் விசேயம் விகரம் அதிகாரம்
குணம்குணி ஆதியாம் சொற்கோள் அன்றியும்
பிறிதின் இயைபின்மை நீக்குதல் பிறிதின்
இயைபு நீக்குதல் என்னும் இலக்கணம்
முதலாப் பலவா மொழிபெயர்த் தனவும்
கொண்டனர் பண்டையோர்; உண்டோ? இன்றோ?
அன்றியும் தமிழ்நூற்கு அளவு இலை; அவற்றுள்
ஒன்றே யாயினும் தனித்தமிழ் உண்டோ?
அன்றியும் ஐந்துஎழுத் தால்ஒரு பாடைஎன்று
அறையவே நாணுவர் அறிவுடை யோரே;
ஆகையால் யானும் அதுவே அறிக[3];
வடமொ தழிமின்மொழி எனும்இரு மொழியினும்
இலக்கணம் ஒன்றே என்றே எண்ணுக[4];
எளிய விதிகளை யாவரும் அறிவார்

அறிய விதிகளை அறையின்அறி வார்இலை
அதனால் அவையால் பயன்இலை; அதனால்
பயன்படு விதிசில பகர்ந்தனன் என்க[5];
முன்னொரு பின்மலைவு உள்ளன போல
வருவன எல்லாம் பிறர்மதம் ஆக்குக[6]!
கூறின பின்னும் கூறின சில; அவை
அநுவாதம் என்றே அறிந்தே அடக்குக[7];
தமிழ்விதிக்கு அகப்படாச் சிலவிதி சாற்றினன்,
அவைவட மொழிவிதி என்றே அறிக[8];
வேற்றுமை வினைஒழிபு எனமூன்று ஆக்கி
அவற்றினுள் சொல்லினுள் சிலவிதி அடக்கி
ஏனைநால் விதியும் இயம்பிலன் என்க[9];
பல்கால் பழகினும் தெரியா உளவேல்
தொல்காப் பியம்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினும் முழங்கும்; ஆண்டினும் இலையேல்,
வடமொழி வெளிபெற வழங்கும் என்க[10].

இது இந்நூல் பார்த்தற்குச் சில கருவி கூறுகின்றது. அவை பத்து வியங்கோளும் என்க. யாதொரு முயற்சிக்கும் கருவி இன்றி முடியாது; கருவியும் ஏற்ற கருவியே அன்றி வேறு கருவி ஆகாது; உரிய கருவியும் ஒழுங்கு உடையதே யன்றி ஒழுங்கு இல்லாது ஆகாது; ஆகையால் இப்பத்தினையும் பல்கால் கூர்ந்து இந்நூலின் இறங்குக. பதவுரை எழுதின் பெருகும் ஆதலின் அரும்பதவுரை மாத்திரமே எழுதினம் என்க. மேலும் அதுவே.

[வி-ரை: பத்து வியங்கோளாவன – வேறு விதி நவமாய் விளம்பிலன் என்க என்பது முதல் வடமொழி வெளிபெற வழங்கும் என்க என்பது ஈறுக அமைந்தன. இப்பத்து வியங்கோள் களும் இந்நூலினை ஐயம்திரிபு அற விளங்கிக் கோடற்குக் குறிப்பிடப்பட்ட ஒழுங்குடைய ஏற்ற சிறப்புக் கருவிகளாம் என்பது ]

1. வடமொழி இலக்கணம் சிலவகுத்து அறிந்து
தொல்காப் பியத்தினும் தொல்காப் பியத்தினும்
அருகிக் கிடந்ததைப் பெருக உரைத்தனன்
வேறுவிதி நவமாய் விளம்பிலன் என்க,

வடமொழி இலக்கணம் கடலே ஆதலின் சில வருந்து அறிந்தேன் எனச் செப்பினனே. தொல்காப்பியம் முன்னது இலக்கணம். பின்னது பழைய செய்யுட்கள். சுருங்கிக் கிடந்ததைப் பெருக்கினன் என்பது முன்னூல்களையும் இந் நூலினையும் சீர்தூக்கின் தானே விளங்கும். ஒரு சொல்லாயினும், பொருளாயினும் புதிதாகச் சொற்றனன் அல்லன் என்பது 'நவமாய்' என்பதனால் அறிக.

[வி-ரை: கடல்போலப் பரந்துகிடக்கும் வடமொழி இலக்கணத்துள் தமிழுக்கு மிக இன்றியமையாதனவாக முன்னோர் ஏற்றுக்கொண்ட சில இலக்கணங்களைமாத்திரம் பிரித்து எடுத்துக்கொண்டு தொல்காப்பியம் என்ற இலக்கண நூலிலும், பழைய தமிழ் இலக்கியங்களிலும் இலைமறைகாய்போல மறைந்து கிடந்த அரிய விதிகளை விளக்கிக் கூறினேனேயன்றி, யானே புதியனவாகப் படைத்து விதிகளை இந்நூலில் விளம்பினேன் அல்லேன் என்பது. குறிப்பிட்ட வடமொழிலிலக்கணச்செய்திகள் தமிழில் இலக்கண இலக்கியங்களுள் அவற்றைக் கண்டு கூறியனவே.]

2. அ. தொல்காப் பியம்திரு வள்ளுவர் ஆதிநூல்
வடமொழி நியாயம் வந்தன சிலவே

'ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி
இரண்டுஇறந்து இசைக்கும் தொடர்மொழி' - தொ.எ. 45

'மூன்றுதலை யிட்ட முப்பதிற்று எழுத்து' - தொ.எ.103

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு' கு.- 1

'மதிநுட்பம் நூலோ டுடையார்க்(கு) அதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை' கு.- 936

'நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்என்னும்
பேணுப் பெருங்குற்றத் தார்க்கு' கு.- 924

இவைபோல்வன வடமொழி நியாயம் வந்தன.

[வி-ரை: ஒன்று, பல என்பது தமிழ் வழக்கு. ஒன்று இரண்டு பல என்று கோடல் வடமொழி வழக்கு. இவ்வழக்குத் தமிழில் பழைய இலக்கியத்துள்ளும் பயின்றுள்ளமை,

'ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்' –புறநா. 101

'மழைபெயல் மாறிய கழைதிரங்கு அத்தம்
ஒன்றுஇரண்டு அலபல கடந்து' பதிற்று. 41

முதலிய அடிகளால் வலியுறும்.

முப்பத்துமூன்று என்பது தமிழ்மரபு. மூன்றைத் தலையில் பெற்ற முப்பது என்பது வடமொழி மரபு. இது காத்தியாயனர் மதம்.

ஆதிபகவன் என்பது இருமொழியும் வடமொழியாய பண்புத் தொகை.

அதிநுட்பம் - மிகுதிப்பொருள் தரும் உரிச்சொல்லாகிய முன்மொழியைப் பெற்ற அவ்வியயிபாவசமாசன்.

நாண் என்ற பொருளைக் குறிக்கும் லஜ்ஜா என்ற வடமொழிச் சொல், சொல் பற்றிப் பெண்பாலாகலான் அம்முறை பற்றி அப் பொருளில் வரும் நாண் என்ற தமிழ்ச் சொல்லையும் வடமொழிச் சொற்பாலை உட்கொண்டு 'நாண் என்னும் நல்லாள்' எனப் பெண்பாலாக்கினூர். இவை யாவும் பிரயோகவிவேக உரையிலும் இடம் பெற்றுள்ளன.]

2. ஆ. தமிழின் நியாயம் தந்தன பலவால்

'எழுத்தெனப் படுப,
அகரமுதல னகர இறுவாய்
முப்பஃது என்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே' –தொ. எ.1

'கற்றதனல் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றூன் தொழாஅர் எனின்' –கு. 2

இவைபோல்வன எல்லாம் தமிழின் நியாயம் தந்தன.

[வி-ரை: முக்காலத்திலும் ஒத்து இயல் பொருளை எதிர் காலத்தால் குறிப்பிடுதலே தமிழ் மரபு என்பதனைச் சிவஞான முனிவர் சூத்திரவிருத்தியுள் குறிப்பிட்டு 'எழுத்தெனப்படுப' என்பதனை எடுத்துக்காட்டாகத் தந்துள்ளார்.

அன எனப் பிரத்தியாகாரம் செய்தல் வடமொழி மரபு.

அகரமுதல னகர இறுவாய் என விளக்கிக் கூறுதல் தமிழ் மரபு.]

2\. இ. தமிழ்மொழி வல்லராய் வடமொழி விதிசில
அறிந்தவர்க் கேஇந் நூல்ஆம் என்க

சில, பல என்பன சிறுபான்மை பெரும்பான்மை என்க. ஏனைநூல் எல்லாம் இவ்விரு தன்மையே. இந்நூலும் அதுவே யாதலின், இருவகை நியாயமும் ஏகதேசமாயினும் அறிந்தார்க்கே யன்றி ஏனை இருவர்க்கும் இது பயன்படாது என்பது தேற்றே-காரத்தால் அறிக.

[வி-ரை: தமிழ் நூல்களிலெல்லாம் வடமொழி நியாயமும் சில சிவணியிருத்தலின் தமிழில் வல்லவராய் இருப்பதனோடு வடமொழியறிவும் ஓரளவாயினும் பெற்றவரே தமிழ்நூல்களை ஐயம் திரிபு அறக் கற்றுணர்தல் இயலும். தேற்றேகாரம்-'அறிந்தவர்க்கே' என்பதிலுள்ள ஏகாரம்.]

3\. வடமொழி வழிகல வாதே தமிழைத்
தனியே நீர்தராத் தன்மை என்னெனின்
இலக்கணம் இலக்கியம் ஏது நிமித்தம்
சாத்திரம் சூத்திரம் தந்திர வுத்தி
பகுதி விகுதி பதமே பதார்த்தம்
ஆதி அந்தம் அகாரம் மகாரம்
உதாரணம் மாத்திரை உவமை உருவகம்
விகற்பம் சந்தி விதிஅலங் காரம்
காலம் இலேசம் காரகம் ஞாபகம்
விசேடணம் விசேடியம் விகாரம் அதிகாரம்
குணம்குணி ஆதியாம் சொற்கோள் அன்றியும்

பிறிதின் இயைபின்மை நீக்குதல் பிறிதின்
இயைபு நீக்குதல் என்னும் இலக்கணம்
முதலாப் பலவாம் மொழிபெயர்த் தனவும்
கொண்டனர் பண்டையோர்; உண்டோ இன்றே ?
அன்றியும் தமிழ்நூற்கு அளவுஇலை; அவற்றுள்
ஒன்றே ஆயினும் தனித்தமிழ் உண்டோ ?
அன்றியும் ஐந்துஎழுத் தால்ஒரு பாடைஎன்று
அறையவே நாணுவர் அறிவுடை யோரே
ஆகையால் யானும் அதுவே அறிக

வடநூலைவிட்டுத் தனியே தமிழ் நூல் நடவாதது நியாயமே என்பது தோன்ற, 'வடநூல்வழி கலவாதே' என்பது முதலாக 'யானும் அதுவே' என்பது ஈறுக! வினாவிடையால் கூறினும்.

[வி-ரை: தமிழறிவு நிரம்பப்பெறுதற்கு வடமொழி அறிவும் தேவை என்பது தமிழறிஞர் பலருக்கும் உடன்பாடு. அன்றியும் தமிழ்ச் செய்யுட்களில் வடசொற்களையும் முறைப்படிக்கலக்கலாம் என்பது 'இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று, அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே' தொ.சொ.எ.1 என்ற தொல்காப்பிய நூற்பாவானும் வலியுறும்.

அல்லதூஉம் வடநூல் உணர்ந்தார்க்கன்றித் தமிழ் இயல்பு விளங்காது என்பதும் உணர்ந்து கோடற்கு அன்றே, பாயிரத்துள் 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என்றதூஉம் என்க என்று சிவஞான முனிவரும் சூத்திரவிருத்தியில் குறிப்பிட்டுள்ளார். ஐந்தெழுத்து – தமிழ்ச் சிறப்பெழுத்துக்களாகிய ற ன ழ எ ஒ என்பன. தமிழுக்கும் வடமொழிக்கும் இலக்கணம் ஒன்றே என்ற இவ்வெண்ணம் 17ஆம் நூற்றாண்டில் நிலவியிருந்தது.

'இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்காறு அல்ல செய்யு ளாறே' –தொ.சொ. 18

எனவே, அடைகள் இனஞ்சுட்டுவன. இனம்சுட்டாதன என இருவகைய. இனம்சுட்டாத அடைகள் இயைபின்மை நீக்கும் விசேடணங்களாம்.

இயைபின்மை நீக்கலும், பிறிதின் இயைபு நீக்கலும் என விசேடித்தல் இருவகைத்து. –தொ.சொ. 182 சேனா.

வெண்குடைப் பெருவிறல் என்பது, செங்குடை முதலிய வற்றோடு இயைபு நீக்காது வெண்குடையோடு இயைபின்மை மாத்திரை நீக்கி நின்றாற்போலப் 'பன்மை சுட்டிய' என்பதும் ஒருமை இயைபு நீக்காது, பன்மை சுட்டுதலோடு இயைபின்மை மாத்திரை நீக்கிநின்றது. இஃது இயைபின்மை நீக்கமாம். கருங்குவளை என்பது, செம்மை முதலியவற்றோடு இயைபு நீக்குதலின் பிறிதின் இயைபு நீக்கமாம். எனவே, விசேடித்தல் இருவகை ஆயின. -தொ.சொ.184நச்.

பிறிதின் இயைபு நீக்குதலை அந்நியயோகவியவச்சேதம் என்றும், இயைபின்மை நீக்குதலை அயோகவியவச்சேதம் என்றும் கூறுவர். -பி.வி.50உரை

வடநூலார் இயைபின்மை நீக்குதலை அயோகவிவச்சேதம் என்றும் பிறிதின் இயைபு நீக்குதலை அந்யோகவிவச்சேத மென்றும் கூறுப. -இ.வி.332உரை

இங்ஙனம் ஆசிரியர் பலரும் குறிப்பிடும் இயைபின்மை நீக்குதலை இவ்வாசிரியர் பிறிதின் இயைபின்மை நீக்குதல் என்று சுட்டுவது மயக்கம் தருகிறது.]

4. வடமொழி தமிழ்மொழி எனும்இரு மொழியினும்
இலக்கணம் ஒன்றே என்றே எண்ணுக.

குணத்தை உடையது குணி; பண்பை உடையது பண்பி; இவை மொழியான் வேறு என்பது திண்ணம். இவை போல உடைமை, உடையான், பகுதி, விகுதி, பகுபதம், உருபு, பொருள், திணை, பால், இடம்-இப்பத்து முதலிய இலக்கணம் எல்லாவற்றானும் ஒன்றே என்பது தோன்றத் தேற்றம்இரட்டித்தாம். இனிச் சிறுபான்மை மிகவும் அருகி இலக்கணமும் வேறுபடும் என்பது தோன்ற 'எண்ணுக' என்றும். வேறுபடுதலாவது இருதிணையும் ஆண்பால் பெண்பால் வினையீறும் வடமொழிக்கு இல்லை. மூன்று லிங்கமும் முதல் ஈற்று வேற்றுமைகட்கு உருபுகளும் தமிழிற்கு இல்லை. மேலும் ஆண்டாண்டுக் காட்டுதும்.

[வி-ரை: உடைமை முதலியன வடமொழியில் முறையே திரவியம், திரவியவிசிட்டன், பிரகிருதி, விகிருதி, கண்டபதம்,

பிரத்தியயம், பதார்த்தம், சேதனுசேதனம், லிங்கம் புருடத்திரயம் என்று குறியிடப்பட்டுள்ளன. தேற்றம் இரட்டித்தலாவது 'ஒன்றே என்றே' என்பது. இச்சிறுபான்மை வேறு பாட்டினைப் பிரயோகவிவேக நூலார்,

'சாற்றிய தெய்வப் புலவோர் மொழிக்கும் தமிழ்மொழிக்கும்
வேற்றுமை கூறின் திணைபால் உணர்த்தும் வினைவிகுதி
மாற்றருந் தெய்வ மொழிக்கில்லை; பேர்க்குளமு வாய்உருபும்
தேற்றிய லிங்கம் ஒருமூன்றும் இல்லை செழுந்தமிழ்க்கே' 49

என்று குறிப்பிட்டவாறே இவர் உரைநடையில் குறிப்பிட்டுள்ளார்.

இனி, தமிழ் நூல்களை உணர்தற்கு வடமொழி அறிவு பெரிதும் பயன்படும் என்பதன்றித் தமிழிற்கும் வடமொழிக்கும் இலக்கணம் ஒன்றே என்று கூறுவது பொருந்தாது என்பதனைச் சிவஞான முனிவர் சூத்திரவிருத்தியில், "தொல்காப்பியன் தன் நூலை ஐந்திரம் நோக்கித் தொகுத்தான் எனின், தமிழ்மொழிப் புணர்ச்சிக்கண்படும் செய்கைகளும் குறியீடுகளும், வினைக்குறிப்பு வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம் புறம் என்னும் பொருட்பாகுபாடுகளும் குறிஞ்சி வெட்சிமுதலிய திணைப்பாகுபாடு களும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுள் இலக்கணமும், இன்னோரன்ன பிறவும் வடமொழியில் பெறப்படா மையானும், இவையெல்லாம் தானே படைத்துக் கொண்டு செய்தான் எனின் 'முந்து நூல் கண்டு, என்பதனோடு முரணுத லானும், முற்காலத்து முதல் நூல் அகத்தியம் என்பதூஉம், அதன் வழித்தாகிய தொல்காப்பியம் அதன் வழிநூல் என்பதூஉம் துணியப்படும் என்க" என்று கூறி மறுத்துள்ளமை நோக்கத் தக்கது.]

5அ. எளியவிதிகளை யாவரும் அறிவார்
அரிய விதிகளை அறையின்அறி வார்இலை

எளிய விதியாவது உயிர் பன்னிரண்டு, உடம்பு பதினெட்டு. இவை போல்வன என்க. அரியவிதியாவது,

'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' – தொ. எ. 46

அகரமுதல எழுத்தெல்லாம்' – குறள் 1

'அக்கரங்கள் இன்றும் அகர உயிரின்றேல்'
– சி. போ.உ. த. வெ.

'அகரம்போல நின்றனன் சிவனும் சேர்ந்தே'

'அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து' – திருவருட் 1

என்பனவற்றிற்குப் பொருள் கூறுங்கால், அகர உயிரானது உருவெழுத்து – ஒலியெழுத்து – உணர்வெழுத்து – தன்மை எழுத்து – என்று பொருள் கூறின், உபமேயத்தொடு மாறுபடுதல் முதலிய பல குற்றப்படும்; அங்ஙனம் குற்றப்படாமல் பொருள் கூறுதல் அரிதே. அன்றியும், எழுத்துக்கட்குப் பிறப்பிலக்கணம் தொல்காப்பியர் எடுத்தோதினவற்றைப் புலப்பட அறிந்திருந்தும்,பிறர் அவற்றிற்கு மாறுபடக் கூறினர். அன்றியும் அவர் ஏழ்உயிரீற்றுப் பதம் அன்று என்று அறிவித்தற்குப் புள்ளிமயங்கியலுள் (388-394) எடுத்தோதினர். அஃதறிந்தும் அஃது ஒற்றீற்றுப் பதம் அன்று என்று அறிவித்தற்கு உயிரீற்றுப் புணரியலுள் எடுத்தோதினர். இவ்விருவரும் அன்றி நூலாசிரியர் பலரும் அதுவே; உரையாசிரியர் பலரும் அதுவே. இவர்கள் இங்ஙனம் மாறுபட்டுழி 'இருவர் மாறுகோள் ஒருதலை துணிவே' என்பதனால் குணம் குற்றங்களைப் பலவாற்றானும் பகுத்தறிந்து உண்மை கண்டு ஒன்றனை மறுத்து ஒன்றனைத் தழுவலும், ஒற்றுமை நயம் வேற்றுமை நயம் என்பபோலச் சில கருவி கொண்டு அம்முறையால் அது நன்று-இம்முறையால் இது நன்று-என்று அவ்விரண்டனையும் தழுவலும், 'அரியைப் படைத்தலால் அயன் கடவுள்' என்றும் அயனைப் பெற்றுக் காத்தலால் அரி கடவுள்' என்றும் மாறுபட்டுழி. 'இவ்விருவரையும் அழித்தலால் இவர் கடவுள் அல்லர், அரனே கடவுள்' என்பதுபோலச் சில கருவி கொண்டு இம்முறையால் இது வழு-அம்முறையால் அது வழு-என இரண்டனையும் மறுத்து இவ்விரண்டற்கும் வேறாகி வழுவற்றது ஒன்றனைத் தழுவலும் போல்வன என்க. எமக்கு அடங்கினவற்றுள்ளும் இவ்விரண்டனுள்ளும் பிறருக்குப் பயன் இல்லையே என்னும் துன்பம் தோன்ற 'யாவரும் அறிவார்' 'அறிவார் இலை' என்றும்.

[வி-ரை: 'மெய்யின் இயக்கம்' என்ற நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் வரைந்துள்ள உரையை நோக்குக. எழுத்துக்களுக்கு அகரம் காரணமாதல், உலகுக்கு இறைவன் காரணமாதல் முதலியவற்றை விளக்குதல் அரிது ஆதலின். இவை அரிய விதிகள் எனப்பட்டன.

அகரமொடு சிவணும் - அகரம் உரு எழுத்து
அகர முதல - அகரம் ஒலி எழுத்து
அகர உயிர் இன்றேல் - அகரம் உணர்வெழுத்து

அகாரம் போல, அகர உயிர் போல-அகரம் தன்மை எழுத்து- என்று விளக்கங் கூறின், பொருள் மாறுபட்டுக் குற்றம் ஏற்படும் அங்ஙனம் குற்றப்படாமல் யாண்டும் அகரம் ஒலி எழுத்தே என்று கூறி விளக்கினும் விளக்கிக் கொள்ளுதல் அரிது.

உரு எழுத்து - வரிவடிவில் எழுதப்படும் எழுத்து; என்னை?

'காணப் பட்ட உருவம் எல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினை போல
எழுதப் படுவது உருஎழுத் தாகும்' ஆதலின்.

ஒலி எழுத்து - உந்தியில் தோன்றி வெளிப்படும் காற்று வெளிவரும் ஒலியால் உணரப்படும் எழுத்து; என்னை?

'இசைப்படு புள்ளின் எழாஅல் போலச்
செவிப்புலன் ஆவது ஒலிஎழுத்து ஆகும்,' ஆதலின்.

உணர்வு எழுத்து - மந்திரங்களுக்கு அறிகுறியாக வரையப் படும் அடையாளத்தால் உணரப்படும் எழுத்து; என்னை?

'கொண்டஓர் குறியால் கொண்ட அதனை
உண்டுஎன்று உணர்வது உணர்வுஎழுத்து ஆகும்' ஆதலின்.

தன்மை எழுத்து – எடுத்தல் படுத்தல் நலிதல் ஓசை தோன்ற செவிப்புலனாக ஒலிக்கப்படும் எழுத்து; என்னை?

'முதற்கா ரணமும் துணைக்கா ரணமும்
துணைக்கா ரணத்தொடு தொடரிய உணர்வும்
அவற்றொடு புணர்ந்த அகத்துஎழு வளியின்
மிடற்றுப் பிறந்து இசைப்பது தன்மை எழுத்தே' ஆதலின்.

தொல்காப்பியனார் மூக்கினைமுயற்சிக் கருவியாகக் கூறவும் நன்னூலார் பிறக்கும் இடமாகக் கூறினார். எழுத்தொலி மேல்வாயை அடைந்து உரலாணி இட்டாற்போலச் செறிதலான் யகரம் பிறக்கும் எனத் தொல்காப்பியனார் கூறவும் நன்னூலார் 'அடிநா அடிஅணம்உறய-தோன்றும்' (ந. 82) என மாறுபட்டுக் கூறினார்' தொல்காப்பியனார் ஏழ் என்பதனை முகர ஈற்றுச் சொல்லாகக் கொண்டு அதன் புணர்ச்சிவிதியைப் புள்ளி மயங்கியலில் விளக்கியிருப்பவும், நன்னூலார் அதனை ஏழு என்ற உகர ஈற்றுச் சொல்லாகவே கொண்டு உயிரீற்றுப் புணரியலில் சுட்டினார். உயிர்மெய்யை ஒரே எழுத்தாகக் கொள்வது ஒற்றுமை நயம். உயிர்மெய்யை உயிரும் மெய்யும் என்ற இருவேரு எழுத்துக்களாகக் கொள்வது போல்வது வேற்றுமைநயம். இவ்விரண்டும் இலக்கண நூல்களுக்கு இடம் நோக்கி இன்றியமையாதன. இரு வேறுபட்ட கருத்துக்கள் இருப்பின் காரணம் காட்டி இரண்டனையும் தழுவுதலும், காரணம் காட்டி இரண்டனையும் மறுத்து மூன்றாவது கருத்து ஒன்று கோடலும் விளக்கப்பட்டன. 'எளியவிதிகளை அறிந்தும் பயன் படுத்துவார் இலர்; அரியவிதிகளை அறிபவரே மிகச் சிலராவர்' என்று ஆசிரியர் வருந்துகிறார்.]

5 ஆ. அதனால் அவையால் பயனஇலை அதனால்
பயனபடு சிலவிதி பகர்ந்தனன் எனக

முன்னோர் நூல்களுள் வெள்ளிடைமலைபோல விளங்கிக் கிடந்து பயன்படு விதிகள் அளவில்லை. அவற்றுள் இலைமறைகாய் போலக் கரந்து கிடந்து பயன்படாதன சிலவற்றுள் சிறிது எடுத்து உரைத்தனன் என்பது தோன்றப் 'பயன்படு விதிசில' என்றும், அவையடக்கத்துள் 'சிறிது' என்றும் கூறினும். புதிது ஒன்றும் இன்று என்பது இதனாலும் அறிக.

[வி-ரை: எல்லோரானும் அறியப்படும் எளியவிதிகளை இலக்கண ஆசிரியர் பலரும் எடுத்தோதியுள்ளமையானும், அவை

பலரானும் அறியப்படுதலானும் அவற்றையே மீண்டும் எடுத்து மொழிவது பயனிலகூறுதலாகும்; ஆகவே, பல இலக்கண நூல்களுள்ளும் ஆண்டாண்டு அருகிக் காணப்படும் விதிகளுள் மிகப் பயன்படுவனவற்றுள் சிலவற்றை ஆசிரியர் எடுத்தோதி-யுள்ளார். உள்ளனவற்றைத் தொகுத்துக் கூறியுள்ளாரேயன்றிப் புதியதாய் எதனையும் படைத்து மொழியவில்லை.]

6. முன்னொடு பின்மலைவு உள்ளன போல
வருவன எல்லாம் பிறர்மதம் ஆக்குக

முன்னொடு பின் மலைவாவது யாதானும் ஒன்றனையே இது விதி என்றும், விலக்கு என்றும், இயல்பு என்றும், திரிபு என்றும், இது பெயர் என்றும் அது பெயர் என்றும், இன்னும் மாறுபடக் கூறுதல் என்க. இம்மலைவு இந்நூலில் பெரும்பாலும் வரும். அவை எல்லாம் அவரவர் கொண்ட மதம் என்க. அவரவர் பெயர் களை அங்ஙனம் அங்ஙனம் உரைக்கின் பெருகுதல் பற்றிக் கூறும்' அவை எல்லாம் மலைவு அல்ல என்பது தோன்றப் 'போல' என்றும். அங்ஙனம் மலைவனவற்றை எடுத்தோதல் என் எனின், அவையெல்லாம் ஒவ்வொரு நியாயத்தால் பயன்படுதல் நோக்கி என்க.

[வி-ரை: இந்நூலுள் எந்த ஆசிரியர் கருத்தும் எடுத்து மறுக்கப்படவில்லை. பெரும்பான்மையும் ஆசிரியர் பலருடைய கருத்துக்களே தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. ஒரோவழியே ஆசிரியர் சிலருடைய பெயர்கள கூறப்படினும், பெரும்பாலும் பலருடைய கருத்துக்களே கூறப்படுமேயன்றி, அப் பலருடைய பெயர்கள் கூறப்படவில்லை. இலக்கணக் கொத்து என்ற பெயருக்கு ஏற்ப, இந்நூலுள் ஒவ்வொன்று பற்றியும் இலக்கண ஆசிரியருடைய பல கருத்துக்கள் தொகுத்துக் கூறப்பட்டிருத்தலே இதன் சிறப்பு.]

7. கூறின பின்னும் கூறின சில அவை
அநுவாதம் என்றே அறிந்தே அடக்குக

இந்நூலுள் முற்கூறிய அதனையே பிற்கூறுதலும் சில உள. அங்ஙனம் கூறுவது கூறியது கூறல் என்னும் குற்றமன்று;

அநுவாதம் என்றே கொள்க. கூறியது கூறல் வெளி. ஏனையது எங்ஙனமெனின், யாதானும் ஒரு நிமித்தத்தால் ஒன்றனை முற்கூறி வேறொரு நிமித்தத்தால் அதனையே பின்னும் கூறல் என்க.

'நின்ற உயிர்முன் கசதப மிகும்' -ந.165

என்று கூறினவர் தாமே,

'பலசில எனும்இவை தம்முன் தாம்வரின் —மிகும்' -ந.170

'அல்வழி இஐ முன்னராயின் ... மிகும்' -ந.176

'மீக்கு வலி மிகும்' -ந.178

'நெடிலோடு உயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டற-வொற்று இரட்டும் வேற்றுமை மிகவே' -ந.183

'பனைமுன் கொடிவரின் மிகும்' -ந.203

என்று பின்னும் கூறினர்.

'அன்ஆன் அள்ஆள்' -ந.140

என்றவர்தாமே'

'என்ஏன் அல்அன்' -ந.140

என்றார்.

அன் ஆன் இறுமொழி' -ந.325

என்றவர் தாமே,

'அல் அன் என் ஏன் ஆகும் ஈற்ற' -ந.331

என்றார்.

'நேர் நிரை' -ய. கா.5

என்றவர் தாமே,

'வேல் நிறம்' -யா. கா.5

என்றும்,

'நாள், மலர்' -யா. கா.7

என்றும் கூறினர்.

'நேர் நேர் நிரை நேர்' -யா. கா.6

என்றவர் தாமே,

'தேமா புளிமா' -யா. கா.7

என்றும்,

'காசு பிறப்பு' -யா. கா.28

என்றும் கூறினர்.

'நேர் நேர் நிரை' 'நிரை நேர் நிரை'

என்றவர் தாமே (நத்தத்தர்)

'மாவாழ்சுரம், புலிவாழ்சுரம்'

என்றும், தூஉமணி கொழூஉமணி' என்றும் கூறினர். தொல் காப்பியமும் அது. அது கண்டு நச்சினார்க்கினியரும் அநுவாதம் என்று எழுதினர்.

'சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்(கு)
ஆக்கம் எவனோ உயிர்க்கு. -கு.31

என்றவர் தாமே,

'அறத்தினூஉங்(கு) ஆக்கமும் இல்லை' -கு.32

என்று பின்னும் கூறினர்.

இவை அறியாக்கால் பொருள் உரைக்கவும் கேட்கவும் கூடாது என்பது தோன்றத் தேற்றம் இரட்டித்தாம். முன்னது அது நிமித்தம், பின்னது இது நிமித்தம் என்று அறிதல் அருமை நோக்கி 'அடக்குக' என்றும்.

[வி-ரை: அண்மைநிலை கருதியும், தெளிவு கருதியும் இலக்கண நூல்களில் முன்னர்க் கூறப்பட்ட செய்திகள் பின்னரும் கூறப்பட்டிருத்தல் கூறியதுகூறல் என்னும் குற்ற மாகாது, வழிமொழிதல் என்னும் நூற்புணர்ப்பாம் என்பது விளக்கப்பட்டு உள்ளது.

பொதுவாக 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' என்ற நன்னூலார், அகர ஈற்றுப் பல சில என்னும் சொற்களும், அவ்வழிப் புணர்ச்சிக்கண் இருபெயரொட்டாக வரும் இகர ஐகார ஈற்றுச் சொற்களு, மீ என்னும் ஈகார ஈற்றுச் சொல்லும், குற்றியலுகர ஈற்றுள் இடை ஒற்று இரட்டிய நெடில் உயிர்த் தொடர்களும் கொடி என்ற வருமொழியோடு புணரும் பனை என்னும் ஐகாரஈற்றுச் சொல்லும் மிகும் என்று பின்னரும் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளார்.

படர்க்கை ஆண்பால் வினை விகுதியாக அன் என்பதனைக் கூறியபின், தன்மை ஒருமை விகுதியாகிய அன் என்பதும் உண்டு என்பது ஒரே நூற்பாவில் சுட்டப்பட்டது. அதுவே, விளக்கமாக அன்-ஆண்பாற் படர்க்கை விகுதி என்று ஒரு நூற்பாவில் கூறப் பட்டபின், அடுத்து ஆறுவது நூற்பாவில் அன் என்ற தன்மை ஒருமை விகுதியும் கூறப்பட்டது.

நேர் நிரை என்ற அசைகளுக்குப் பொது எடுத்துக்காட்டாக வேல் நிறம் என்பன கூறப்பட்டபின், வெண்பாவின் ஈற்றசைச் சீராக வரும் நேர், நிரை என்பனவற்றிற்கு நாள், மலர் என்ற சிறப்பு வாய்பாடும் கூறப்பட்டுள்ளன. (அமிதசாகரர்-யாப்பருங் கலக்காரிகை)

நேர் நேர் நிரை-நிரை நேர் நிரை-எனவும், மாவாழ்சுரம்-புலிவாழ்சுரம்-எனவும் கூறிய நத்தத்தனார். தூஉமணி-கெழூஉ-மணி என்ற வாய்பாடுகளையும் கூறியுள்ளார்.

'மாவாழ் புலிவாழ் சுரமுளவாக மணியிறுவாய்
ஓவா தளபெடுத் தூஉங் கெழுஉவு முதாரணமாய்
நாவார் பெரும்புகழ் நத்தத்தர் யாப்பி னடந்துபோல்
தேய்வா முகரம்வந் தாலியற் சீருக்குச் செப்பியதே'

என்ற யாப்பருங்கலக்காரிகை மேற்கோள் (26) நூற்பாவை நோக்குக.

'அம்ஆம்' (தொ. சொ. 204) என்னும் சூத்திரம் முதலாகப் 'பல்லோர் படர்க்கை' (தொ. சொ. 229) என்னும் சூத்திரம் இறுதியாக மூவகை இடமும் மூவகைப் பொருளும் இருவகை வினையும் எடுத்து ஓதியவற்றை, ஈண்டும்,

'இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்று
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தான் வினையினுங் குறிப்பினும்
மெய்ம்மை யானும் ஈரிரண் டாகும்' தொ. சொ. 427

என்று ஓதியது அநுவாதம் ஆயிற்று என்பர் நச்சினார்க்கினியர்.]

8. தமிழ்விதிக்கு அகப்படாச் சிலவிதி சாற்றினன்
அவைவட மொழிவிதி என்றே அறிக

மொழிபெயர்த்தற்கு வாராத சிலவற்றை அம்மொழியாகவே அறைந்தனன் என்பது தோன்ற 'அகப்படா வடமொழி' என்றும். அவை சைவன், சைவம், பார்வதி, கார்த்திகேயன், காங்கேயன் முதலியன என்க.

[வி-ரை: சைவன் முதலிய சொற்கள் தமிழ்விதியை ஒட்டி-யமையாது வடமொழிவிதியை ஒட்டி அமைந்த தத்திதாந்தச் சொற்களாம். முதல்சொல் தன்னைச்சேர்ந்த மற்ற சொற்கள் எல்லாம் நீங்கத் தான் அவற்றின் பொருளைக்கொண்டு சிறிது திரிந்து நிற்பது தத்திதாந்தச் சொல்லாம்.

சிவனை வழிபடுபவன் - சைவன்
சிவனோடு தொடர்புடைய சமயம் - சைவம்
பர்வத மன்னன் புதல்வி - பார்வதி
கிருத்திகை மீன்களின் மகன் - கார்த்திகேயன்
கங்கையின் மகன் - காங்கேயன்

போல்வன. இத் தத்திதம் பற்றிய செய்திகள் பலவற்றையும் பிரயோகவிவேக தத்தித படலத்தால் அறிக.]

9. வேற்றுமை வினைஒழிபு எனமூன்று ஆக்கி
அவற்றினுள் சொல்லினுள் சிலவிதி அடக்கி
ஏனைநால் விதியும் இயம்பிலன் எங்க

அறநூல் முதலிய நான்கற்கும் கருவி எழுத்து முதல் ஐந்தே. அவற்றுள்ளும் ஏனை நான்கற்கும் கருவி சொல்லே. அச் சொல்லிற்குக் கருவி அதுவே. ஆகையால் எல்லாவற்றினும்

சொல்லே சிறப்பு என்பது நோக்கி, மூன்று இயலாகிய இந் நூலுள் சொல்மாத்திரமே சில சொற்றனம் என்பது தோன்ற 'இயம்பிலன்' என்றும். வடநூலாரும் தலைமைபற்றிய வழக்கால் அவ்வைந்தனையும் சொல் என்று வழங்குவர்.

[வி-ரை: வடமொழிவியாகரணத்துள் பெரும்பாலும் சொல்லிலக்கணமே கூறப்பட்டுள்ளது. 'வடமொழிப் பிரயோக விவேகத்தினும் சொல்லிலக்கணம் அல்லது எழுத்திலக்கணம் கூறப்பட்டிலது' என்பது பிரயோகவிவேக உரை.1.]

10. பல்கால் பழகினும் தெரியா உளவேல்
தொல்காப் பியம்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினும் முழங்கும் ஆண்டினும் இலையேல்
வடமொழி வெளிபெற வழங்கும் என்க

முக்கால் பார்த்து, நல்லோர் பலருடன் பலகாலும் பயின்று, பிறர்க்கு அறிவித்தல் முதலியன எல்லாம் அடங்கப் 'பல்கால் பழக்கம்' என்றும். இங்ஙனம் பழகமாட்டார் என்பது தோன்றப் 'பழகினும்' என்றும். இங்ஙனம் பழகின் தெரியாதது ஒன்று இல்லை என்பது தோன்ற, 'உளவேல்' என்றும்.

திருவைக் கோவைக்கும் கூட்டுக. மாணிக்கவாசகர் அறிவால் சிவனே என்பது திண்ணம். அன்றியும் அழகிய திருச்சிற்றம்பலமுடையார் அவர் வாக்கில் கலந்து இரந்து அருமைத் திருக்கையால் எழுதினர். அப்பெருமையை நோக்காது சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப்பாட்டு, கொங்குவேள்மாக்கதை முதலியவற்றோடு சேர்த்துச் செய்யுட்களோடு ஒன்றுக்குவர். அங்ஙனமும் அமையாது, இலக்கணமாவது தொல்காப்பியம் ஒன்றுமே, செய்யுளாவது திருவள்ளுவர் ஒன்றுமே, தனிச்சிறப்புடைய இவ்விரண்டும் நீங்கலான இலக்கண இலக்கியமெல்லாம் ஒன்றற்கு ஒன்று பெருமை சிறுமை இணை என்று கொள்வார் என்பது தோன்ற இம் முறை வைத்து அடையைப் பொதுவாக்கினும். அவர் அதுமட்டோ இறையனார் அகப்பொருள் முதலான இலக்கணங்களையும். தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம், சிவஞானபோதம்,சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம்,

பட்டினத்துப்பிள்ளையார்பாடல் முதலிய இலக்கியங்களையும் ஒரு பொருளாக எண்ணாது, நன்னூல்,சின்னூல்,அகப்பொருள்,காரிகை, அலங்காரம் முதலிய இலக்கணங்களையும், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, இராமன் கதை, நளன் கதை அரிச்சந்திரன் கதை முதலிய இலக்கியங்களையும் ஒருபொருளாக எண்ணி வாணாள் வீணாள் கழிப்பர். அவர் இவைகள் இருக்கவே அவைகளை விரும்புதல் என்னெனின், பாற்கடலுள் பிறந்து அதனுள் வாழும் மீன்கள் அப்பாலை விரும்பாது வேறு பலவற்றை விரும்புதல்போல, அவரது இயற்கை என்க. ஓரிடத்துக்கூறி அமையாது பலவிடத்தும் கூறும் என்பது தோன்ற, 'ஆண்டினும் இலையேல்' என்றும். இம்மூன்றனுள் வடமொழி வழக்குப்பற்றிக் கிடந்தன எல்லாம் தமிழர்க்கு ஒளிக்கும் என்பது தோன்ற, 'வெளிபெற' என்றும். விரும்பினும் தமிழ் கொடாத விதிகளைத் தானே கொடுக்கும் என்பது தோன்ற 'வழங்கும்' என்றும்.

[வி-ரை: பலகாலும் தமிழ் நூல்களோடு பழகிய பின்னரும் தெரியாத செய்திகள் உளவாயின் அவை தொல்காப்பியம், திருக்குறள், திருக்கோவையார் என்ற மூன்று நூல்களிலும் பரந்து காணப்படும். அவற்றுள் தமிழ் விதிக்கு அடங்கா வடமொழி வழக்குக்கள் சில உள. தமிழ் ஒன்றே வல்லவர் அவற்றைப் பிரித்து உணர்தல் இயலாது. அரிதின் முயலினும் தமிழ் விதி கொண்டு அறிதல் இயலாத அவற்றை வடமொழி மிக எளிதாக விளக்கிக் கூறும் என்றவாறு.

'ஒருகுறி கேட்போன் இருகால் கேட்பின்
பெருக நூலில் பிழைபாடு இலனே' –ந 42

'முக்கால் கேட்பின் முறைஅறிந்து உரைக்கும்' –ந.43

'ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்
கால்கூறு அல்லது பற்றலன் ஆகும்' –ந.44

'அவ்வினை யாளரொடு பயில்வகை ஒருகால்
செவ்விதின் உரைப்ப அவ்விரு காலும்
மையறு புலமை மாண்பு உடைத்து ஆகும்' –ந.45

என்ற நூற்பாக்களில் புலமை நிரம்புதற்குரிய கருவிகல் கூறப்பட்டுள்ளன.

திருக்கோவையாரின் பெருமையும் சைவ நூல்களின் பெருமையும் பரக்கக் கூறப்பட்டுள்ளன. இங்ஙனம் வரைவதற்கு ஆசிரியருடைய சைவசமயப்பற்றே காரணம் என்பது கொள்க

இவர் காலத்தில் வாழ்ந்து இவர் நூல் வரைவதன் முன் பிரயோகவிவேகம் என்ற சொல்லிலக்கண நூலை உரையுடன் வரைந்த சுப்பிரமணிய தீக்கிதர் தம் நூலுரையில் தொல்காப்பியம், திருக்குறள், திருக்கோவையார் என்ற மூன்றனையுமே பலகாலும் எடுத்துக்காட்டாகத் தந்ததைக் கண்ணுற்று இவ்வாசிரியரும் 'பல்கால்......முழங்கும்' என்று குறிப்பிடுகிறார்.]

இக்கருவி பத்தனுள் ஒன்றே குறையினும், இந்நூல் பார்த்தார்க்குச் சிறிதாயினும் பயன்படாது; வாணாள் வீணாள் கழித்தலேயன்றி இந்நூற்குக் குறைகூறிச் சூத்திரம் உதாரணம் அரும்பதவுரை எல்லாவற்றையும் திருத்தி வரம்புஅழித்துப் புறன் பழிப்பர்.

ஆகையால் தொல்காப்பியம் திருவள்ளுவர் முதலிய நூல்களைக் குறைபடாமல் முழுதும் உணர்ந்து அவைகளில் தடைபட்ட இடத்து அத்தடை தீர்க்கும் கருத்து உண்டாயின், இது பயன்படும். ஆகையால் அவர் மாத்திரத்திற்கே இது நூல், மற்றையோர்க்கு இது நூல் அன்று என்னும் கருத்தான் அவை-யடக்கத்துள் 'ஈது ஒரு நூல் அன்றே' என்றும்.

உரை கொள்ளுதற்கருவியாகிய இச்சூத்திரமும் முற் சூத்திரமும் உபலக்கணம். அஃது எங்ஙனமெனின், 'உடம்பினுள் உயிர் கூடின் கண்காணும், நீங்கின் காணாது' இத்தொடர் ஒழிந்த தொண்ணூற்றைந்தும் அதுவே என்று தானே பொருள்தரும் அதுபோல, எழுத்து முப்பத்துமூன்று முப்பது என்று கூறுதல், மாறுபட்டுள்ள விதிகட்கு எல்லாம் பொதுவாய் நின்று பல பொருள் தருதல் என்க.

'நூல்செய் தவன்அந் நூற்குஉரை எழுதல்
முறையோ எனினே அறையக் கேள்நீ
முன்பின் பலரே என்கண் காணத்
திருவா ரூரில் திருக்கூட் டத்தில்

தமிழ்க்குஇலக்கு ஆகிய வைத்திய நாதன்
இலக்கண விளக்கம் வகுத்துஉரை எழுதினன்;
அன்றியும் தென்திசை ஆழ்வார் திருநகர்
அப்பதி வாழும் சுப்பிர மணிய
வேதியன் தமிழ்ப்பிர யோக விவேகம்
உரைத்துஉரை எழுதினன் ஒன்றே பலவே'

இஃது உரைச்சூத்திரம். இந்நூல் முழுதினுள்ளும் இடையிடையே இங்ஙனம் உரைச்சூத்திரமும் உதாரணச் சூத்திரமும் வேண்டிய வேண்டிய இடத்துச் செய்தனம் என்க.

(வி-ரை: இந்நூற்பாவில் கூறப்பட்ட கருவிகள் பத்தும் குறைவின்றிப் போற்றப்படவேண்டும் என்பது. இந்நூல் கற்றற்கு அதிகாரிகள் ஆவார் யாவார் என்பது குறிப்பிடப்பட்டது. உபலக்கணம்-மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழி யாததனை முட்டின்றி முடித்தலாம். கண்காணும் என்றால், காது கேட்கும், வாய் பேசும் முதலியனவும் கோடல் அதற்கு எடுத்துக் காட்டு. உடம்பில் உறுப்புக்கள் 96 என்பது சான்றோர் கொள்கை. எழுத்தின் எண் பற்றி 33, 30 என்ற மாறுபட்ட கருத்து இருப்பதுபோல, ஏனைய இலக்கணச் செய்திகளிலும் மாறுபட்ட கருத்துக்கள் ஏற்படும் என்பது கொள்க.

இவ்வாசிரியர் இந்நூல் யாப்பதனுக்கு முன்பே திருவாரூர் வைத்தியநாத தேசிகரும், திருக்குருகூர்ச் சுப்பிரமணிய தீக்கிதரும் முறையே இலக்கணவிளக்கம், பிரயோகவிவேகம் என்னும் நூல்களை யாத்துத் தாமே உரையும் வரைந்தனர் என்பது. அவர்கள் செய்த செயலே இவ்வாசிரியரும் தம் நூலுக்குத் தாமே உரை வரைவதற்கு முன்னோடியாக அமைந்தது.

உரையில் இடையிடையே உரைச்சூத்திரங்கள் பலவற்றைப் பிரயோகவிவேக நூலார் யாத்துள்ளார். அவர் முறையைப் பின்பற்றி இவ்வாசிரியர் உரைச்சூத்திரங்களை வரையக்கருதித் தம் நூல் உரையுள் அருகியே வரைந்துள்ளார்.] 7

## எந்நூல் நோக்குதற்கும் பொதுவான கருவிகள்

8. சூத்திரம் சிலசில நோக்குதற்கு அரிதேல்
முன்பின் பார்த்துப் பின்பே நோக்குக[1];
விதிகளில் சிலசில வெளிப்படா ஆயின்,
உபலக் கணத்தினை ஓர்ந்தே உணர்க[2];
தாம்முன் அறிந்ததற்கு ஈதுமா றுயின்
எந்நூல் விதியோ எனவே எண்ணுக[3];
சிலநாள் பழகின் சிலவும் பலியா,
பலநாள் பழகின் பலிக்கும் என்க[4];
விரைவால் பார்க்கின் தெரியாது ஒன்றும்,
விரையாது ஏற்கின் கருகாது என்க[5];
வருவதில் கருத்தினை மட்டுப் படுத்தி'
வந்ததில் சிந்தையைச் சிந்தாது இறக்குக[6];
நூலினை மீளவும் நோக்க வேண்டா,
சூத்திரம் பல்கால் பார்க்கவே துணிக[7];
மாரிபோல் கொடுப்பினும் மந்தனைவிட்டுக்
கூரிய னுடனே கொத்தும் பழகுக[8];
வேறுஒரு கருமத் தினைமனத்து எண்ணின்,
ஆரியன் ஆயினும் அப்பொழுது ஒழிக[9];
சொல்பயில் விப்பவன எபபடிச் சொற்றனன்'
அப்படி ஒழுகி, அரும்பொருள் பெறுக[10].

*இதுவும் அது! வியங்கோள் பத்தும் கருவியாகலின். ஆயின் அக் கருவியோடு சேர்க்காது பிரித்தது என்னெனின், அவை இந்நூற்கே. இவை இந்நூற்கும் எந்நூற்குமே; அன்றியும் அத்துணை நுட்பமன்று என்க.*

1. சூத்திரம் சிலசில நோக்குதற்கு அரிதேல்
முன்பின் பார்த்துப் பின்பே நோக்குக

*சில சூத்திரவிதி கருகிற்றுயின், அப்பொழுது அழுந்தற்க. அந் நூலின் முன்பின்னுவது, தாம் முன்பே கண்ட நூற்கண்ணுவது, பின்பு கற்கும் நூற்கண்ணுவது அவ்விதி வெளிறிக் கிடக்கும். அதுகண்டு தெளிந்து பின்பு அழுந்துக.*

[வி-ரை: சில நூற்பாக்கள் அவற்றை வாசித்த அளவில் பொருள் புலனாகாவாயின், முன்னும் பின்னும் உள்ள நூற்பாக்களைப் பார்த்து அவற்றின் துணைகொண்டு அந்நூற்பா உரையினைத் தெளிவாக அறிக. எடுத்துக்காட்டாக,

'ணனமுன்னும் வஃகான் மிசையும்-ம குறுகும்'. -ந.96

என்ற நூற்பாவினை

'லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றும் செய்யு ளுள்ளே' -ந.120

என்ற நூற்பாத் துணைகொண்டு தெளிய அறிகிறோம்.]

2: விதிகளில் சிலசில வெளிப்படா வாயின்
உபலக் கணத்தினை ஓர்ந்தே உணர்க

உபலக்கணமாவது-'அஇ உம்முதல் தனிவரின் சுட்டே' -ந.66 என்புழி, முதல் கூடிவரின் சுட்டே என்றும் பொருள் கொள்ளுதல் இவ்விலக்கணம் நோக்காது, 'தனித்து நிற்பின் சுட்டோ, கூடிநிற்பின் சுட்டு அன்றோ' என்று கருதி, நன்னூலார்க்குப் பின்னூலார் இச்சூத்திரத்திற்கு அளவிறந்த குற்றம் கூறினர். அது நிற்க, அவர் எழுத்திற்குப் பெயரிடுதல் நோக்கியும்,

'எகர வினா முச்சுட்டின் முன்னர்' -ந 163

எனச் சந்தி நோக்கியும்,

'இவை அடை சுட்டு வினா' -ந 276

எனப் பெயரிடுதல் நோக்கியும்,

'நூரக்கின் சுட்டு நீளின்' -ந.163

என யாப்பு நோக்கியும் இங்ஙனம் கூறி, பின்,

'சுட்டுயா எகர வினாவழி' -ந.106
'வினைத்தொகை சுட்டுஈறு ஆகும் உகரம்' -ந.179
'சுட்டு வகரம் மூவினம் உற' -ந.235
'வ-இறு சுட்டிற்கு அற்று உறல் வழியே' -ந.250
'சுட்டின்முன் ஆய்தம் அன்வரின் கெடுமே' -ந.251
'அதுமுன் வரும் அன்று' -ந 180

என்று, கூடி நிற்பினும் சுட்டு என்று கூறினர். இவ்விலக்கணங் களையும் நோக்கிலர். அது நிற்க, 'தனிவரின் சுட்டு' – ந. 66 என்னும் சூத்திரம் 'இன்னென வரூஉம்' – தொ. எ. 131 என்னும் சூத்திரம் போல விகாரப்பட்டது என்று யாப்பு விதியை யும் நோக்கிலர். அது நிற்க,

'ஒரு மொழி ஒழிதன் இனங்கொளற்கு உரித்தே' –ந. 358
என்னும் சூத்திரப் பொருளையும் நோக்கிலர். அது நிற்க,

ஒன்றினம் முடித்தல் தன்னினம் முடித்தல்,

முதலிய உத்தியையும் நோக்கிலர். அது நிற்க, 'வரின்' என்னும் எச்சம் பெரும்பான்மையும் கூடி நின்று சுட்டுப்பெயராம் என்று பொருள் தருதலையும் நோக்கிலர். அது நிற்க, 'முதல்வரின் சுட்டே தனிவரின் சுட்டே' எனப் பொருள்கோள் இலக்கணமும் நோக்கிலர். அது பற்றித் தமக்கு என ஒன்று இலரும் அதுவே. உரைப்பார்உரைப்பவைக்கெல்லாம யாம் என் செய்வோம் என்க. சேற்று நிலத்தில் கவிழ்ந்த பால் தேன் நெய் முதலியனவும் சேரு றற்போல நன்னூல் சூத்திரமும் அவ்வுரையுடனே கலந்து குற்றப் பட்டது என்க.

'முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினும்
நன்னூலார்தமக்கு எந்நூ லாரும்
இணையோ என்னும் துணிவே மன்னுக'
முன்னோர் ஒழியப் பின்னோர் பலரினும்'

என்றலும் ஒன்று.

'செய் என் வினை வழி' –ந.138

'செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்'
–தொ.சொ.450

'ழகர உகரம் நீடுஇடன் உடைத்தே' –தொ.எ.261

'கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை'. –கு.9

'காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்'

இவை போல்வன எல்லாம் உபலக்கணம் என்க.

[விரை: வெளிப்படாத விதிகளை, கூறியது கொண்டு அதனோடு தொடர்புடைய கூறுதனையும் கொள்ளும் வாய்ப்பாகிய உபலக்கணத்தால் ஆராய்ந்து உணர்தல்வேண்டும். 'முதல் தனிவரின்சுட்டே' என்பதனுக்கு, முதல் கூடிவரினும் சுட்டு என்றும் பொருள் கொள்ளுதல் இதற்கு எடுத்துக்காட்டு. எழுத்திற்குப் பெயரிடுமிடத்தும் சந்திநோக்கியும் யாப்பு நோக்கியும் வரைந்த நூற்பாக்களில் நன்னூலார் சுட்டு தனித்தும் நிற்கும் என்பதனையும், 'சுட்டியா எகரவினாவழி' முதலிய ஆறு நூற்பாக்களில் சுட்டு கூடியும் வரும் என்பதனையும் விளக்கியுள்ளார்.

'இன்னென வரூஉம் வேற்றுமை உருபிற்கு
இன்னென் சாரியை இன்மை(யும்) வேண்டும்'

என்னும் நூற்பாப்போலத் 'தனிவரினும்' என்பது உம்மை தொக்குத் 'தனிவரின்' என நின்றது எனலாம்.

'தனிவரின்' — தனித்து வந்தால் — என்பதனால் தனித்து வருதல் சிறுபான்மை என்பதும் கூடிவருதலே பெரும்பான்மை என்பதும் புலனாகின்றன. 'முதல்தனிவரின்' என்ற தொடரை மு த ல் வ ரின் எனப்பிரித்துத் தாப்பிசையாய்ப் பொருள் செய்தலும்ஆம்.

தம் அறிவைச் செலுத்தி நூற்பாப் பொருளை ஆராயாது பிறர் கூறியவற்றையே ஏற்று முடிவு செய்பவரும் உளர்.

தொல்காப்பியத்திற்குப் பிறது நன்னூலுக்கு இணையான நூல் எதுவும் இல்லை.

செய், செய்யாய் என்னும் வினைகள் அவ்வாய்பாடுபற்றி வரும் ஏனைய வினைகள் பலவற்றையும் சுட்டும். 'ழகர உகரம் நீடிடன் உடைத்து' என்ற குற்றெழுத்து அளபெடை, ஏனைய உயிர்மெய் உ க ர ங் க ள் கெடுப்பதூஉம், துன்புறூஉம் என்றாற்போலக் குற்றெழுத்தளபெடையாதலையும் சுட்டும். தாளை வணங்காத் தலை என்பது சீர்கேளாத செவி, தாள்காணாத கண், புகழ்பேசாத வாய் முதலியவற்றையும் குறிக்கும். காணும் கண்-கேட்கும் செவி, பேசும் வாய் முதலியவற்றையும் குறிக்கும். இவை எல்லாம் உபலக்கணத்துக்கு எடுத்துக்காட்டு.

3 தாம்முன் அறிந்ததற்கு ஈதுமாறு ஆயின்
எந்நூல் விதியோ எனவே எண்ணுக

'புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை' -கு.59
'கடிக்கமலத் திருந்தயனுங் காணான்'

இவைகட்கு இலக்கணம் அமைப்போர் இறந்தகாலப் பெயரெச்சத் தகரஒற்றின்மேல் ஏறிநின்ற அகரம் திரிந்தது என்றும், கு-உருபிற்கும் கமலத்திற்கும் ககரஒற்றுத் திரிந்தது என்றும் அமைப்பர். இவற்றைச் சிற்றதிகாரங்களைக் குற்றமறக் கற்றவர், கெடுதலும் தோன்றலுமேயன்றிப் பொற்குடம் போலத் திரிந்தது அன்றே என்று கருதிப் பிழைபட்டது என்றே துணிவர். அன்றியும் சிலர், அகர உயிர் உகர உயிராய்த் திரிந்தது எனத் துணிவரேயன்றி, 'யாம் அறிந்தவற்றுள் இல்லை எங்குள்ளதோ' என்று கொள்ளமாட்டார். அதுபற்றி 'எனவே எண்ணுக' எனத் தேற்றம் கொடுத்தாம்.

[வி-ரை ஒருவன் இந்நூலில் சுட்டப்படும் விதி தான் கற்ற நூல்களில் காணப்படும் விதிக்கு மாறாக இருப்பின், இவ்விதி வேறொரு நூற்கருத்தை உட்கொண்டு சொல்லப்பட்டது என எண்ணுதல் வேண்டும்.

புணர்ச்சி, இயல்பு எனவும் திரிபு எனவும் இருவகைப்படும்; திரிபுபுணர்ச்சி - மெய்பிறிதாதல், மிகுதல், குன்றல் என மூவகைப்படும். இது தொல்காப்பியம் குறிப்பிடும் செய்தி.

புணர்ச்சி - இயல்பு, விகாரம் என இருவகைப்படும்; விகாரப் புணர்ச்சி-தோன்றல், திரிதல், கெடுதல் என மூவகைப்படும். இது நன்னூற்செய்தி.

ஆசிரியர் இருவரும் குறிப்பிட்ட செய்தி ஒன்றே; ஆனால் குறிப்பிடும் சொற்களிலேயே வேறுபாடுள்ளது. தொல்காப்பியர் திரிபு என்று குறிப்பிடுவதை நன்னூலார் விகாரம் என்று பெயரிடுகிறார். தொல்காப்பியர் மெய்பிறிதாதல் என்று குறிப்பிடுவதை நன்னூலார் திரிதல் என்கிறார்.

தொல்காப்பியனாருக்குத் தோன்றல்விகாரம், திரிதல்விகாரம், கெடுதல் விகாரம் மூன்றும் திரிதலாய் அடங்கும். நன்னூலாருக்கு ஓரெழுத்து வேறோரெழுத்தாய்த் திரிதல் ஒன்றே திரிதலாய் அடங்கும். எனவே, தொல்காப்பியனார் திரிதல் என்று கூறுவதை நன்னூலார் தோன்றல் என்றும், திரிதல் என்றும், கெடுதல் என்றும் மூவகையாகப் பெயரிடுவர். தொல்காப்பியனாருக்குத் தோன்றலும் திரிதலே; கெடுதலும் திரிதலே.

புகழ்புரிந்த இல்லிலோர்க்கு - புகழ்புரிந்தில்லிலோர்க்கு; அகரம்கெட நின்ற தகர ஒற்று வருமொழி உயிரோடு சேர்ந்தது. அகரம் கெட்டது என்பதனைத் தொல்காப்பியர் மதம் பற்றித் திரிந்தது எனலாம்.

இல்லிலோர்க்கு + இல்லை - இல்லிலோர்க்கில்லை; உகரம் கெட்டதனைத் தொல்காப்பியர் மதம் பற்றித் திரிந்தது என்பர்.

கடி + கமலம் - கடிக்கமலம்; ககரம் மிக்கது. இதனைத் தொல்காப்பியர் மதம் பற்றித் திரிந்தது என்பர். நன்னூல் பயின்றவர், புகழ் புரிந்த + இல் - இல்லிலோர்க்கு + இல்லை- இவை புணரும்வழித் திரிதல் ஏற்படவில்லை; அகரமும் உகரமும் கெட்டன எனவும், கடி + கமலம் - கடிக்கமலம்; கடிக்கமலம் என்பது தோன்றல் விகாரம்; திரிந்தது அன்று எனவும் கூறுவர்.

தொல்காப்பியர் கருத்தைப் பின்பற்றிச் சொல்லியதனை நன்னூல் ஒன்றே கற்றவர் பிழைபட்டது என்பர். அங்ஙனம் கூறுதல் கூடாது; இலக்கண ஆசிரியர் மற்றொருவர் கருத்து என்றே கொள்ளல் வேண்டும் என்பது விளக்கப்பட்டது.]

4. சிலநாள் பழகின் சிலவும் பலியா
பலநாள் பழகின் பலிக்கும் என்க

சிலநாள் பழகின் கூரியராயினும் பலியா; பலநாள் பழகின் மந்தராயினும்பலிக்கும் என்பது உம்மையானும் வியங்கோளானும் தெளிக.

[வி-ரை: உம்மை-சிலவும்; வியங்கோள்-என்க.]

5. விரைவால் பார்க்கின் தெரியாது ஒன்றும்
விரையாது ஏற்கின் கருகாது என்க

கூரியராயினும் தெரியா, மந்தராயினும் கருகா என்பது அவ் விரண்டானும் தெளிக.

[வி-ரை: விரைந்து வாசித்துக்கொண்டே போனல் செய்திகள் கூரியோருக்கும் தெளிவாகப் புலனுகா. விரையாது நிதானித்து வாசித்தால் செய்திகள் மந்தருக்கும் புலனுகாமல் போகா.]

6. வருவதில் கருத்தினை மட்டுப் படுத்தி
வந்ததில் சிந்தையைச் சிந்தாது இறக்குக

எல்லோருக்கும் கற்பதில் கருத்து இறங்கும், கற்றதில் இறங்காது; அது நன்மையன்று என்பது தோன்ற 'இறக்குக' என்றும்.

[வி-ரை: இனிக் கற்கவேண்டியதன்கண் உள்ளத்தை மிகச் செல்லவிடாது, கற்றதன்கண் உள்ளத்தை மிகச் செலுத்திச் செய்திகளை நன்கு உளம் கொள்க.]

7. நூலினை மீளவும் நோக்க வேண்டா
சூத்திரம் பலகால் பார்க்கவே துணிக

'முக்கால் கேட்பின் முறை அறிந்து உரைக்கும்' என்பதை மாத்திரம் உட்கொண்டு, சூத்திரப் பொருளை வரம்பு செய்யாது ஓடுவர். அங்ஙனம் ஓடியும் இளைப்பே பயன் அன்றி நூற்பயன் இல்லையே! ஒவ்வொரு சூத்திரத்தை முக்கால் பார்த்துப் பொருளை வரம்பு செய்து நடப்பாராயின் அவர்கட்கு ஒருகாலே அமையும்; இருகால் முக்கால் வேண்டுவதில்லை என்பது தோன்ற இழிவு சிறப்பு உம்மை கொடுத்தாம்: இறந்தது தழீஇய எச்சம் அன்று.

[வி-ரை: மூன்று முறை விரைவாகப் பாடம் கேட்பதனல் பயனில்லை. நூலினை உரையோடு பலகாலும் விரைந்து கற்பதனை விட நூற்பாவினைப் பலமுறை பார்த்துப் பொருளை வரம்பு செய்தல் மிகுந்த தெளிவைத் தரும் என்பது. மீளவும் என்பது இழிவு சிறப்பு உம்மை; முன்பு பார்த்ததற்கு மேலும் என்ற இறந்தது தழீஇயஎச்சஉம்மை அன்று.]

8. 'மாரிபோல் கொடுப்பினும் மந்தனை விட்டுக்
கூரிய னுடனே கொடுத்தும் பழகுக'

கொடுப்பினும் என்பதனை மந்தனிடத்தும் விடுவோனிடத்தும் ஏற்றுக இன்சொல் சொல்லுதல், பணிதல், உற்றுழி உதவுதல் முதலியன எல்லாம் அடங்கப் பொதுப்படக் 'கொடுத்து' என்றும்.

'அவ்வினை யாளரொடு பயில்வகை ஒருகால்' ந - 45

'பிறர்க்குஉரை இடத்தே நூல்கலப்பு ஆகும்'

நச் - பாயிரவுரை

என்பனவற்றை மாத்திரம் உட்கொண்டு யாவரோடாயினும் பழகற்க என்பது தோன்ற, உயர்வு சிறப்பு உம்மை கொடுத்தாம்.

[வி-ரை: மந்தனாகிய உடன் பயிலும் நண்பன், இன்சொல் சொல்லுதல், பணிதல், உற்றுழி உதவுதல், மாரிபோலக்கைம்மாறு கருதாமல் கொடுத்தல் முதலியன செய்வான் ஆயினும் அவனை விடுத்து, கூரிய அறிவினனாகிய நண்பனிடம் இன்சொற் கூறிப் பணிவுடன் நடந்து உற்றுழி உதவிக் கொடுத்தும் பழகு தலாலேயே கல்வி நிரம்பும்.]

9. 'வேறுஒரு கருமத் தினைமனத்து எண்ணின்
ஆரியன் ஆயினும் அப்பொழுது ஒழிக'

பசிமுதலிய வருத்தத்தாலாவது, சோறு முதலியவற்றின்கண் அவாவினாலாவது, யாதானும் வேறொரு நிமித்தத்தாலாவது கருதது மயங்கின், அக்கணமே பயிறல் ஒழிந்து தீர்ந்தபின்பு பயில்க. ஆரியனாயினும் எனவே, மாணாக்கர்க்குக் கூறவேண்டா ஆயிற்று.

[வி-ரை: வேற்றுச் செய்திகளில் மனம் ஈடுபட்டவிடத்து அது கல்விக்கண் அழுந்தாது ஆதலின், ஆசிரியன்கூட வேற்றுச் செய்தி யீடுபாடு ஏற்படுமிடத்துக் கல்விக்கண் ஈடுபடுதல் கூடாது. அச்செய்தியின் ஈடுபாடு தீர்ந்த பிறகே கல்விக்கண் ஈடுபடுதல் வேண்டும் என்பது. ஆரியன் - வணங்கத்தக்க ஆசிரியன்.

ஆசிரியனுக்கே இது வேண்டும் எனின், மாணுக்கருக்கு இது வேண்டும் என்பது சொல்லாமலேயே தெரிந்துகொள்ளப்பட வேண்டியதாம்.]

10. சொல்பயில் விப்பவன் எப்படிச் சொற்றனன்
அப்படி ஒழுகி அரும்பொருள் பெறுக.

பிணி வறுமை ஆதிகளது இன்மையும் பொருள் இளமை ஆதிகளது உடைமையும் கற்றற்குக் கருவியாயினும், மிகவும் சிறந்த கருவி ஆரியன் கருத்தில் அருள்வர நடத்தலே என்பது தோன்றக் கேட்டு என்னுது 'ஒழுகி' என்றும். பொருள் என்னும் பெயர் பொதுவாயினும், கல்விப் பொருளை மாத்திரம் அங்ஙனம் கூறுது, நற்பொருள், பெரும்பொருள், அரும்பொருள், குறையாப் பொருள், துணைப்பொருள், நீங்காப்பொருள், கேடில்பொருள், விளக்கும்பொருள், விழுமியபொருள் முதலாக யாதானும் ஓர் அடைகொடுத்தே கூறுவர்.

'கேடில் விழுச்செல்வம் கல்வி' கு.-400

எனச் சிறுபான்மை பலஅடை கொடுத்தும் கூறுவர். அக்கருத்துப் பண்டை நூல்கள் எல்லாவற்றினுள்ளும் காண்க. அந்நியமம் மறந்தும் தப்பார்கள் என்பது தோன்ற 'அரும்பொருள் பெறுக' என்றும்.

கலித்தொகையில் ஒரு காரணம் நோக்கி நிதிப்பொருளைக் 'கேடில் விழுச்செல்வம்' என்றுர். இவ்வடை கல்விக்கு உரித் தன்றிப் பிறவற்றிற்கும் உரித்தோ என்பாரை நோக்கி வழுவமைத்தார் நச்சினுர்க்கினியர். இதனுலும் அடை உரிமை காண்க.

[வி-ரை: கல்வியைப் பிணியும் வறுமையும் கெடுக்கும்; செல்வமும் இளமையும் வளர்க்கும். மாணுக்கனுக்கு மிகஇன்றி-யமையாதது ஆசிரியன் கருத்தின்வழி நடத்தல்.

'ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்(கு)
எழுமையும் ஏமாப்(பு) உடைத்து' கு.-398

எனவே, உடலோடு அழியும் சாதி உயர்ச்சியினும், உயிரோடு செல்லும் கல்வி உயர்ச்சி மேம்பட்டது என்பதனை உட்கொண்டு, பண்டைய ஆசிரியர்கள் கல்வியைப் பொருள் என்று குறிப்பிடு மிடத்து யாதானும் ஓர் அடை கொடுத்தே குறிப்பிடுவர் என்பது விளக்கப்பட்டது.

'நற்பொருள் செய்வார்க்கு இடம் பொருள் செய்வார்க்கும்
அஃதிடம்' -சீவக.77

முதலாக இலக்கியங்களில் கல்விப்பொருளுக்கு அடை கொடுக்கப் பட்டுள்ளது.

'வீதல் அறியா விழுப்பொருள் நச்சியார்க்கு
ஈதல்மாட்டு ஒத்தி; பெரும! மற்று ஒவ்வாதி' -கலி.86

தன்னை உடையார் கெடுதல் அன்றித் தான் கெடுதல் இல்லாத செல்வம் - என்பது நச்சினார்க்கினியர் உரை. இவ்வாசிரியரும் கல்வியை வாளா பொருள் என்று குறிப்பிடாது அடைபுணர்த்து அரும்பொருள்' என்றே குறிப்பிட்டுள்ளார்.]

## நூல் கற்றற்குரிய கருவிகள் பற்றிய புறனடை

9. இத்துணைச் சிறப்பில ஆகிய கருவிகள்
இன்னும் பலவே, சொல்லத் தொலையா;
அன்றியும் பலநூல் அறைந்தன சிலசில;
ஆகையால் இங்ஙனம் அடங்குதல் அழகே.

இன்னும் பலவாவன உரையில் பழகுதலைக்காட்டினும்சூத்திரத்தில் மிகவும் பழகுதலும், தனக்குரிய நாட்டைவிட்டுக் கற்றற்கு மறு நாட்டில் சேறலும் போல்வன. இடம் பொருள் ஏவலால் தன் நாட்டில் இருத்தலேயன்றி மறுநாட்டில் சேறல் என்னெனின், 'வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது' (தொ. பொ. 188) 'ஓதல் பகையே தூது இவை பிரிவே' (தொ. பொ. 25) 'ஓதல் பிரிவுஉடைத்து ஒருமூன்று யாண்டே' (ந. அ. 89), என முன் னூலாகும் பின்னூலாகும் கூறினர். அக்கருத்து இங்ஙனம் விரிக்கின் பெருகும்.

[வி-ரை: ஆசிரியர் கருத்தைப் பட்டாங்கு உணர்தற்கண் உரைகள் மயக்கம் தருதலும் கூடும் ஆதலின் நூற்பாக்களை நோக்குக என்றார். ஓதல்பிரிவு பற்றி இறையனார் அகப்பொருள்-உரை முதலியவற்றில் காண்க.] 9

## நல்லோர்க்கும் அல்லோர்க்கும் இந்நூல் நண்ணின் நிகழுவன.

10. நல்லோர் அல்லோர்க்கு இந்நூல் நண்ணின்
என்னினும் கடையார் உயர்ந்தார் இலர்என்று
இறுமாப்பு இன்றிஏற்று இகழாது இகழ்ந்து
நற்குலம் நற்குணம் நற்கலை நற்றவம்
உரையாரைப் பணிந்து பணியாது ஒழுகிப்
பழிபா வங்களைப் பயந்து தேடிப்
புண்ணியம் புகழ்களைப் போற்றிப் போக்கிப்
பிறப்புஇறப் புக்களில் பிழைத்துப் பிழைத்துப்
பசுவினைப் பாம்பினை இரைஅருத் தினர்க்குப்
பயன்கொடுப் பதுபோல் பயனகொடுத் திடுவார்
ஆகையா னல்லோாக்கு அளிக்குதல் அழகே.

இது நூல் உணர்த்துவோர்க்குச் சிலகருவி கூறுகின்றது. நல்லோர்க்கு அல்லோர்க்கு என்க. இந்நூல் - இதுபோலச் சிறப்புடைய நூல்கள். நண்ணில் - கைகூடில்.

'நல்லோர்க்கு இந்நூல் நண்ணில் என்னினும் கடையார் இலர் என்று இறுமாப்பு இன்றி ஏற்று இகழாது நற்குலம் நற்குணம நற்கலை நற்றவம் உடையாரைப் பணிந்து ஒழுகிப் பழிபாவங்களைப் பயந்து புண்ணியம் புகழ்களைப் போற்றிப் பிறப்பு இறப்புக்களில் பிழைத்துப் பசுவினை இரை அருத்தினர்க்கு பயன் கொடுப்பது போல் பயன் கொடுத்திடுவார் ஆகையால் நல்லோர்க்கு அளிக்குதல் வழக்கே.'

என்னினும் கடையார் இலர் என்று கருதி, இறுமாப்பு இன்றி, உடையாரை இகழாது பணிந்து, பயந்து, போற்றிப் பிழைத்துக் கொடுப்பார் என்க.

[வி-ரை: பயந்து - அஞ்சி; போற்றி - பாதுகாத்து; பிழைத்து - அஞ்சி ஓடித் தப்பி.]

**'அல்லோர்க்கு இந்நூல் நண்ணின் எம்மினும் உயர்ந்தார் இலர் என்று இறுமாப்பு ஏற்று இகழ்ந்து நற்குலம் நற்குணம் நற்கலை நற்றவம் உடையாரைப் பணியாது ஒழுகி, பழிபாவங்களைத் தேடிப் புண்ணியம் புகழ்களைப் போக்கிப் பிறப்பு இறப்புக்களில் பிழைத்துப் பாம்பினை இரையருத்தினர்க்குப் பயன் கொடுப்பது போல் பயன் கொடுத்திடுவார் ஆகையான் அல்லோர்க்கு அளிக்குதல் வழக்கே?**

எம்மினும் உயர்ந்தார் இலர் என்று கருதி, இறுமாப்பு மேற்கொண்டு, உடையாரை இகழ்ந்து, பணியாது, தேடி, போக்கி, பிழைத்துக் கொடுப்பர் என்க.

[வி-ரை: போக்கி - நீக்கி; பிழைத்து - தவறு செய்து, நல்லோர்க்குக் கற்பித்தல் பசுவுக்கு இரை அருத்துதல் போல்வது. அல்லோர்க்குக் கற்பித்தல் பாம்பிற்கு இரை அருத்துதல் போலும், நல்லோர் பிறப்பு இறப்புத் துன்பங்களிலிருந்து விடுபெற்று வீடுபேற்றை நாடுவர். அல்லோர் பிறப்பு இறப்புத் துன்பங்களுக்கான தவறுகளைச் செய்து உலகில் உழல்வர்.]

பணிதலே விரதம், பணியாமையே விரதம் என்பது தோன்ற 'ஒழுகி' என்று வேண்டா கூறினம். அவை பயன் கொடுப்பினும் கொடுக்கும், இவர் பயன் கொடுத்தே விடுவர் என்பது தோன்றக் கொடுப்பர் என்னாது 'இடுவர்' என்றும். ஈற்றடி ஒன்றும் இரட்டுறமொழிதல். இன்னும் பல கருவிகள் உள. அவை பலரும் விரித்தலின் விரித்திலம் என்க.

[வி-ரை: 'பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து' -கு.978

என்ப ஆதலின், நல்லோர்க்குப் பணிதலும் அல்லோர்க்குப் பணியாமையுமே விரதமாகும் என்பது 'ஒழுகி' என்ற சொல்லின் நயப்பொருள், பசு பால் கொடுப்பதும் பாம்பு விடம் கொடுப்பதும் தவறினும், நல்லோர் உதவி செய்தலினும் அல்லோர் தீங்கு செய்தலினும் தவறார் என்பது தோன்றக் கொடுத்திடுவர் என்றார்.

நல்லோர்க்குக் கல்வி கற்பித்தல் மரபாகும்; அல்லோர்க்குக் கல்வி கற்பித்தல் வழக்காகுமா? ஆகாது என்று பொருள் செய்க.

பலராவர் நன்னூலார், தொல்காப்பிய எழுத்ததிகார உரை யாசிரியர்கள், மாறனலங்கார ஆசிரியர், இலக்கண விளக்க ஆசிரியர் முதலாயினர்.]

## இந்நாலியற்றியதன் காரணமும் இதற்கு அதிகாரிகளும்

11. முற்கா லத்துப் போதகா சிரியர்
மொழிகுவர் மறையார் அருமையாம் விதிகளை
வழிவழி நின்று வழங்கற் பொருட்டே;
இக்கா லத்தார் என்பயன் நினைந்தோ
இசையார் தாமும், இசையார் பூமியில்;
இங்ஙனம் ஆதலின் இறக்கும்என்று எண்ணி
அவைகளைத் திரட்டி அமைத்தனன் அன்றி
நூல்இலை என்று நுவன்றனன் அன்றே;
ஆகையால் பலநூல் ஆய்ந்தார் நோக்குக;
ஏனையோர் நோக்கின்ஓர் எள்அளவு ஆயினும்
பயன்படல் இலையே பலியாது இடமே.

இஃது உணர்வோர்க்கும் உணர்த்துவோர்க்கும் பொதுவாக ஒரு கருவி கூறுகின்றது. கூரியராயின் எளிய விதிகளை ஒருவர் உணர்த்தாமலும் உணர்வர். அரியவிதி அங்ஙனம் அன்று என்பது தோன்ற, இறந்தது தழீஇய எச்சத்திற்கும் உயர்வு சிறப்பிற்கும் பொதுவாகிய உம்மையை விரித்து 'விதிகளையும்' என்றிலம். பேரறிவோர் தமக்கும் தம்மைப் பொருள் என்று கொண்ட மாணுக்கர்க்கும் பயன்படுதலைச் சிறிதாயினும்நோக்கார், இறவாது நிலைநிற்றல் ஒன்றனையே பயனாக நோக்குவர் என்பது தோன்றத் தேற்றம் கொடுத்துப் 'பொருட்டே' என்றாம்.

இழிகுணம் நோக்கிப் போதகாசிரியர் என்னாது 'இக் காலத்தார்' என்றும், தமக்கு யாதானும் ஒரு பொருளை நோக்கி ஓரோவழி உரைப்பினும் மனம் பொருந்தி உரையார் என்பது தோன்றக் கூறூர் என்னாது 'இசையார்' என்றும் பிறந்தவர் எல்லாம் இறப்பர், யாம்மாத்திரம் இருப்பேம் என்னும் கருத்தால் சொல்லார் என்பது தோன்றவும், பிறர்க்கும் விளம்பார், தாமும் அனுபவியார் என்பது தோன்றவும், இழிவு சிறப்பிற்கும் இறந்தது தழீஇய எச்சத்திற்கும் பொதுவாகிய உம்மை கொடுத்துத் 'தாமும்' என்றும். 'கூறூர் ஆயினும் குற்றமன்று, இருப்பாராயின் அனுபவிப்பாராயின்' என்பது தோன்றவும், வாயுறைவாழ்த்து, செவியறிவுறூஉ முதலியவற்றான் நூல்கள் அறிவுறுத்தினும் அதன்வழி இறங்கார் என்பது தோன்றவும், 'இசையார்' என முப்பொருள் தோன்றக் கூறினும், உயிர் நித்தியமாதலின் 'பூமி' என்றும். முற்கூறிய கொத்து என்னும் பொருளை வலியுறுத்தற் பொருட்டுத் 'திரட்டி' என்றும். நூல் என்னாது 'பல' என்றதனாலும், கற்றூர் என்னாது 'ஆய்ந்தார்' என்றதனாலும், கற்க என்னாது 'நோக்குக' என்றதனாலும் இந்நூல் விதிகள் எளிதில் அகப்படும் என்று எண்ணற்க. இக்கருவிகள் இல்லோர் வெறுக்கத்துணிதற்பொருட்டு ஈற்றடி இரண்டும் வேண்டா கூறினம். அதனால் வேண்டியது முடிக்க. அது என்னெனின், இக்கருவி இல்லோர்க்குச் சில விதிகள் அகப்படுமாயினும்,

'தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்' கு – 249

'மழைக் கை இலங்கு பொற்கிண்ணம்'

– திருவா. திருச்சதகம். 92

போலும் என்க.

[வி–ரை: பண்டைக்காலப் போதகாசிரியர் அரியவிதிகளும் வழக்கிறவாது நிலவல் வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடு பாடஞ் சொல்லினர். இக்காலத்துப் போதகாசிரியர்களோ பாடம் சொல்லும் தேவை ஏற்படும்போதும் மனம் பொருந்திப் பாடம் சொல்லார் 'மற்றவர் யாவரும் இறப்பர்; யாம் மாத்திரம் பலகாலும் வாழ்வோம்' என்னும் கருத்தாலும், பிறருக்கு விளம்பாமையோடு தாமும் அனுபவியார் என்னும் கருத்தாலும், வாயுறைவாழ்த்து செவியறிவுறூஉ முதலியவற்றால் நூல்கள்

அறிவுறுத்தினும் அவற்றின் வழி இறங்கார் என்னும் கருத்தாலும், முப்பொருள் தோன்றத் 'தாமும் இசையார்' எனப்பட்டது. ஆதலின் அரிய விதிகள் வழக்கிறந்துவிடும் என்னும் கருத்தான் அவைகளைத் திரட்டிப் பல நூல்களின் பல செய்திகளின் தொகுப்பாக இந்நூல் அமைக்கப்பட்டது என்க. எனவே, பல நூல்களையும் ஆராய்ந்தவர்களே இந்நூற்செய்திகளின் நுட்பங்களைக் காணும் வாய்ப்பு உடையோராவர். ஏனையோருக்கு இந்நூல் எள்ளளவேனும் பயன்படாது.

அருமையாம் விதிகளையும் என உம்மை விரித்தல் வேண்டா என்பது விளக்கப்பட்டது. 'பொருட்டே' என்ற தேற்றம் வழக்கொழிதல் கூடாது என்பதன் இன்றியமையாமையை வலியுறுத்துகிறது. பாடம் சொல்லுதலில் மனம் பொருந்தாத இக்காலத்துப் போதகாசிரியர்களை அவர்கள் சிறப்புப் பெயர்களை நீக்கி 'இக்காலத்தார்' என்றார். இக்காலத்தார் அருமையாம் விதிகளை இசையார், தாமும் இசையார் என்ற சொற்றொடரின் கருத்து நன்கு விளக்கப்பட்டுள்ளது. தாமும் - உம்மை எச்ச உம்மையும், இழிவு சிறப்பு உம்மையுமாம்.

> 'வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
> வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்
> தாங்குதல் இன்றி வழிநனி பயக்கும் என்று
> ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே' –தொ.பொ.424
>
> 'செவியுறை தானே
> பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
> அவிதல் கடன்எனச் செவியுறுத் தன்றே' –தொ.426

என்ற நூற்பாக்களான், சான்றோர் நல்லுரைகளாகிய வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ என்பனவற்றின் இலக்கணம் உணரப் படும்.

பல நூற்செய்திகளும் திரட்டிக் கூறப்பட்டுள்ள இந்நூல் ஒரு நூல் அன்று என்பதும் பல நூல்களையும் ஆய்ந்து ஐயந்திரிபு கொண்டவழி அவற்றைப் போக்குதற்கே இந்நூல் பயன்படும்

ஆதலின் பல நூல்களையும் ஆராய்ந்து ஐயம் திரிபு கொண் டார்க்கே இந்நூல் நோக்குதற்கு ஏற்றது என்பதும் சுட்டப் பட்டன. சிறிது கற்றாருடைய அறிவு இந்நூலின்கண் புகுந்து செய்திகளை முற்ற உணர்தல் இயலாது ஆதலின், இந்நூல் அவர் களுக்கு எள் அளவு கூடப் பயன்படாது என்பது உணர்த்தப் பட்டது. சிறிது கற்றார் இந்நூலுட் புகுதல், மனத்தெளிவு இல்லா தவன் மெய்ப்பொருளைக் காண்பது போல்வதாகும். மேலும் குழந்தை கையில் கொடுக்கப்பட்ட பொற்கிண்ணம் மதிப்பிழத்தல் போலச் சிறிது கற்றார் கையில் இந்நூல் அகப்படின் மதிப்பு இழக்கும்.] 11

## இந்நூல் எடுத்துக்காட்டுப்பற்றிய செய்தி

12. இந்நூற்கு உதாரணம் தொன்னூல் செய்யுளுள்
சிலவே எழுதினம்; பலவே எழுதினம்
உலக வழக்கினுள் உணரும் பொருட்டே.

ஆதன்தந்தை என்பது செய்யுளில் வருங்கால் அவ்வாறு வாராது ஆந்தை என்றே வரும், இச்சொல்லை வேற்றுமைத் தொகைக்கு உதாரணம் காட்டினமாயின், சிற்றதிகாரங்களைக் குற்றம் அற முற்றக்கற்ற சூரியரும் அவ்வாறு கொள்ளாது, 'நிலைமொழி ஏதோ, அவ்வீறு ஏதோ, வருமொழி ஏதோ, அம்முதல் ஏதோ, எவ்வுருபு தொக்கதோ, எங்ஙனம் தொக்கதோ ஈது ஒரு பறவைப் பெயரோ, பிழைபட்டதோ' எனப் பலவும் எண்ணி அலைவரே; அப்பொருள் பெறாரே.

பிணிக்கண் வருந்தினன், நேர்ந்தான், கொடுத்தான் என்பது உருபு தொக்குச் செய்யுளில் வருங்கால், இக்குச்சாரியை பெற்றுப் பிணிக்கு வருந்தினன் என்றே வரும். இச்சொல்லை வேற்றுமைத் தொகைக்கு உதாரணம் காட்டினமாயின், அவ்வாறு கொள்ளாது உருபு விரிந்தது என்றே துணிந்து, உரையையும் உதாரணத்தை யும் பிழை என்றே கருதுவர். அதுபற்றிச் 'சில' என்றும்.

நாலுகை வெட்டினன், அஞ்சு நாள் பயந்தான் - இச்சொல்லை உலகவழக்குப் பற்றி எண்ணுப் பெயருக்கு உதாரணம் காட்டின மாயின், பேரதிகாரங்களைப் பெரிதும் உணர்ந்த பெரியோர் அவ்வாறு கொள்ளாது, நான்ற கையை வெட்டினன்-அஞ்சத்தக்க காலத்து அஞ்சினன் என்று பொருள் துணிந்தே விடுவர், நான்கு ஐந்து என்பதே வழக்கம் ஆகையால். அது பற்றிப் 'பல' என்றும். எனவே, இருவழக்கும் ஒன்றற்கு ஒன்று பொருந்தாமை காண்க. இருவருக்கும் பொருந்தல் வேண்டும் என்னும் கருத்தான் பலவற்றையும் சிலவற்றையும் கழித்தனம் என்பது 'உணரும் பொருட்டே' என்பதனால் அறிக. யாம் கூறிய விதிகட்குச் செய்யுள் இல்லை என்று எண்ணற்க என்பது தாற்பரியம்.

வி-ரை: ஆதன் + தந்தை — ஆதனுக்குத்தந்தை, ஆந்தை. பிணி + இக்கு + வருந்தினன் — இக்கு சாரியை; பிணிக்கண் வருந்தினன் என்பது பொருள். பிணிக்கு வருந்தினன் என்பதன் கண் 'கு' வேற்றுமை உருபு அன்று. பிணிக்கு நேர்ந்தான், பிணிக்குக் கொடுத்தான் என்பனவும் அன்ன.

நாலுகை, அஞ்சுநாள் - நான்காகிய கை, ஐந்தாகிய நாள், இவை வினைத்தொகையுமாகித் தொங்குங் கை, அஞ்சும் நாள் எனவும் பொருள்படும்.

இந்நூற்குச் செய்யுள்வழக்கு எடுத்துக்காட்டுக்களை விட, உலக வழக்கு எடுத்துக்காட்டுக்களே மிகுதியாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன.

தாற்பரியம் - போந்த பொருள்.] 12

பாயிரவியல்-முற்றும்.

---

# வேற்றுமையியல்

## வேற்றுமையது தொகை

13. வினைமுதல் வினையே செயப்படு பொருளே
கருவி கொள்வோன் நீக்கம் குறையே
இடம்என எட்டும் வடமொழி வேற்றுமை;
ஏழ்ஆறு என்று இயம்பும் தமிழ்நூல்.

[வி-ரை: வினைமுதல் - முதல் வேற்றுமை; விளி - எட்டாம் வேற்றுமை; செயப்படுபொருள் - இரண்டாம் வேற்றுமை; கருவி-மூன்றும் வேற்றுமை; கொள்வோன் - நான்காம் வேற்றுமை; நீக்கம்-ஐந்தாம் வேற்றுமை; குறை-ஆறும் வேற்றுமை; இடம்-ஏழாம் வேற்றுமை.

'எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே' ஆதலின், அதனை விடுத்துப் பெயர்ப்பொருளை வேறுபடுக்கும் ஏனைய ஏழுமே வேற்றுமை என்பர். எழுவாயும் விளியும் பெயரும் பெயரது விகாரமும் ஆதலின், அவை தம் முடிக்குஞ்சொல்லொடு முடியும்வழி அல்வழித்தொடராதலின், அவற்றை விடுத்து ஏனை ஆறுமே வேற்றுமை என்பர். ஏழ், ஆறு என்ற கருத்து, தமிழ் நூலாரிடை நிலவுவதுபோல, வியாழன் மரபைச் சேர்ந்தவர் வேற்றுமை ஏழ் என்றும், இந்திரன் மரபைச் சேர்ந்தவர் வேற்றுமை எட்டு என்றும் கூறும் மரபு வடமொழியினும் உண்டு என்பது,

'ஏழியன் முறையது எதிர்முக வேற்றுமை
வேறுஎன விளம்பான் பெயரது விகாரம்என்று
ஓதிய புலவனும் உளன்ஒரு வகையான்
இந்திரன் எட்டாம் வேற்றுமை என்றனன்' அகத்தியம்

என்பதனான் உணரப்படும். புலவன் - வியாழன் என்பர் சண்முகனார்; பாணினி என்பார் ஏனையார்.]

## காரகம் என்பதன் இலக்கணம்

14. விளிகுறை இரண்டையும் விட்டவேற் றுமைகள்
வினையான் முடியின் காரகம் எனப்பெறும்;
குறையும் வினைகொளின் ஒரோவழிக் கூடும்

[வி-ரை: விளிவேற்றுமையும் ஆறும் வேற்றுமையும் நீங்கலான ஏனைய வேற்றுமைகள், வினையைக் கொண்டு முடிந்து பொருள் முற்றுப்பெறுமாயின், அவை காரகம் என்ற பெயரைப் பெறும். பெரும்பாலும் பெயரையே கொண்டு முடியும் ஆறும் வேற்றுமை சிறுபான்மை வினைகொண்டு முடிந்து காரகமாதலும் உண்டு.

எழுத்ததிகாரம்: அதிகாரம் - அதிகரித்தல்; எழுத்தினது அதிகரித்தலை உடையது என்புழி, ஆறுவது வினை முதற்பொருண்மையின்கண் வந்த காரகம் என்பது சூத்திரவிருத்தி.] 2

## காரகத்திற்கு எடுத்துக்காட்டு

15. நாரா யணப்பூ ஓரா யிரத்தைக்
கரத்தால் கொய்துஓர் அரற்கே கொடுத்துச்
சக்கரச் சிறுமையின் நீங்கி நற்சுவைப
பாற்கடல் கண்ணே பள்ளிகொண் டானெனக்
காரகம் முழுதும் வந்தன காண்க;
இவற்றினுள் ஒன்றே இயம்பினும் காரகம்.

[வி-ரை: இப்பாடலுள் ஆறும் வேற்றுமை நீங்கலான ஏனைய வேற்றுமைகள், நாராயணன் பள்ளிகொண்டான் - பூ ஓராயிரத்தைக் கொய்து - கரத்தால் கொய்து - அரற்கே கொடுத்து - சிறுமையின் நீங்கி - பாற்கடல்கண்ணே பள்ளி கொண்டான் என வினையொடு முடிதலான், இப்பாடல் காரகம் ஆறனுக்கும் எடுத்துக்காட்டு. இங்ஙனமே பிரயோக விவேக நூலாரும்,

'இந்திரன் தாமரையைக் கரத்தால் கொய்து இறைவனுக்குத்
தந்து இருங்குற்றத்தின் நீங்கி விண்மேல் இருந்தான் எனலுங்
வந்து அருங்காரகம் எல்லாம் பிறக்கும் ஓர்வாக்கியத்துள்'(10)

எனக் குறிப்பிட்டுள்ளார். வீரசோழிய நூலாரும் உபகாரகப் படலத்தின் இரண்டாம் காரிகையாக,

'வரைநின்று இழிந்து அங்கு ஓர்வேதியன் வாவியின்கண்மலிந்த
விரைநின்ற பூவைக் கரத்தால் பறித்து விமலனுக்குத்
துரைநின்ற தீவினை நீங்க விட்டான் என்று சொல்லுதலும்
உரைநின்ற காரகம் ஆறும் பிறக்கும் ஒளியிழையே'

என்றார்.

'நாராயணன்பூ' என்ற இப்பாடல் நன்னூல் 292 ஆம் நூற்பா உரையில் சிவஞான முனிவரால் எடுத்தாளப்பட்டுள்ளது. 3

## வேற்றுமை உருபின் மூவகை

16. உருபுவேறு உருபு சொல்உருபு என்ன
வேற்றுமை உருபு மூன்றுஎன விளம்புவர்.

எ-டு; வாளால் வெட்டினன்; வாளின் வெட்டினன்; வாள்கொண்டு வெட்டினன் எனவரும்.

[வி-ரை வாளால் என்புழி, மூன்றன்உருபு தனக்குரிய கருவிப்பொருளில் வந்தது. வாளின் என்புழி, ஐந்தன்உருபு தனக்கு உரிய ஏதுப்பொருளால் மூன்றுவதன் கருவிப்பொருளைச் சுட்டியது. வாள்கொண்டு என்புழி, கொண்டு என்னும் சொல் ஆல் என்ற உருபின் பொருளில் வந்தது. இவை உருபு-வேறு உருபு-சொல்லுருபு என்பனவற்றிற்கு எடுத்துக்காட்டாயின.] 4

## உருபுகள் நிற்கும் மூவகைநிலை

17. அவைதாம்,
உரிமையாய் நிற்றல் ஒப்பாய் நிற்றல்
மாறுபட நிற்றல் எனவழங் குவரே.

எ-டு: வாளால் வெட்டினன், 'ஆலத்தினல் அமிர்து ஆக்கியகோன்' (கோவை27)' காலத்தினல் செய்த நன்றி' (கு102) எனவரும்.

[வி-ரை: வாளால் - மூன்றன் உருபு தனக்குரிய கருவிப் பொருளில் வந்ததற்கு எடுத்துக்காட்டு.

ஆலத்தினல் என்பது மூன்ரும் வேற்றுமைக்குரிய கருவிப் பொருளில் வருதற்கும் இரண்டாவதன் செயப்படுபொருட்கண் வருதற்கும் ஒத்து நிற்கின்றது. ஆலத்தினல் அமிர்து ஆக்கிய- ஆலத்தினே அமிர்து ஆக்கிய; ஒரேபொருள் கருவியாகவும் செயப்படுபொருளாகவும் வந்த பொருள்மயக்கமாம்.

'காலத்தினல் செய்த நன்றி' 'காலத்தினல்' என்பது தனக்குரிய மூன்றன் பொருளை விடுத்துக் 'காலத்தின்கண்' எனத் தன்னின் வேருய ஏழன் பொருள்படுதலின் உருபு மயக்கமாம்]. 5

## இட உருபுக்குச் சிறப்புவிதி

18. உருபுவேறு உருபு சொல்லுருபு ஆகியும்
உருபினை ஏலாப் பெயரே ஆகியும்
உருபினை ஏற்ற பெயரே ஆகியும்
உருபு தொக்க பெயரே ஆகியும்
இரண்டுஉருபு இணைந்தால் ஒன்றுஉருபு ஆகியும்
மாறி நின்றும் வரும்இட உருபே.

எ-டு:

ஊர்க்கண் இருந்தான் - கண்: உருபு.
ஊரில் இருந்தான் - இல்: வேருேர் ஏழன் உருபு.
ஊர்த்திசை இருந்தான் - திசை: ஏழன் சொல்லுருபு.

கண் அகல் ஞாலம், கண் அகல் பரப்பு - இடம் அகன்ற உலகம், இடம் அகன்ற பரப்பு எனப் பொருள்படுதலின் இவற்றில் கண் என்பது உருபு ஏலாத பெயராம்,

கடையைக் காப்பான், இடையைக் காப்பான். தலையைக் காப்பான்-கடை இடை தலை என்பன உருபு ஏற்ற இடப்பெயர்.

முன் பிறந்தான் - முன்கண் பிறந்தான்.
பின் பிறந்தான் - பின்கண் பிறந்தான்.
தலைச்சென்றான் - தலைக்கண் சென்றான்.
தலைமழை - தலைக்கண் மழை.
கடைகாப்பான் - கடையைக் காப்பான்.
வலம்இரார் - வலத்தின்கண் இரார்.
மேலிருந்தான் - மேற்கண் இருந்தான்.
கீழிருந்தான் - கீழ்க்கண் இருந்தான்.

இவையாவும் உருபு தொக்க பெயராய் உள்ளன.

தலைக்கண் சென்றான் - தலை இடப்பொருட்டு; கண் உருபு.

இடைக்கண் முரிந்தார் (கு-423) - இடை இடப்பொருட்டு; கண் உருபு.

கடைக்கால் நின்றான் - கடை இடப்பொருளது; கால்உருபு.
மருங்கில் இருந்தான் - மருங்கு இடப்பொருளது; இல்உருபு.

[வி-ரை: இறுதி எடுத்துக்காட்டுக்களில் முதலில் வரும் ஏழன்உருபு பெயராகவும், அடுத்துவரும் ஏழன்உருபே உருபாகவும் வருதல் காணப்படும்].

உள்ளூர் மரம், கிணறு, தொழில், பிழைப்பு;
கீழ்நீர், மீன், முதலை, ஆமை;
மீகண், விழி, ஒளி, பாவை.

[வி-ரை: இவற்றுள் ஊருள் என்பது உள்ளூர் எனவும், நீர்க்கீழ் என்பது கீழ்நீர் எனவும், கண்மீ என்பது மீகண் எனவும் பின்னர் வரவேண்டிய உருபு சொல்லுக்கு முன்னே வந்தவாறு. இவையாவும் ஏழன்உருபுகளுக்குரிய சிறப்புச் செய்திகள்.

கண் கால் முதலியன ஏழன் உருபுகள் என்பது உரையாசிரியர், நன்னூலார், நச்சினார்க்கினியர் முதலாயினோர் கருத்து. ஏழன் பொருள்படும் பிறசொற்கள் என்பது சேனாவரையர் முதலாயினோர் கருத்து. இவ்வாசிரியர் இவற்றை உருபு என்றே கொள்ளும் கருத்தினர்.] 6

## வேற்றுமை உருபுகள்போல் வெளிப்படுவன

19. வேற்றுமை உருபுகள் அல்லா தனவும்
வேற்றுமை உருபுகள் போல்வெளிப் படுமே.

எ-டு: பெண்ணை வளர்த்தான் - பெண்ணை: பனை.

காலை வணங்கினான் - காலை: காலைநேரம்.

மாலை வென்றான் - மாலை: மாலைநேரம்.

மாலை விரும்பினான் - மாலை: பூமாலை.

மாலை மயங்கினான் - மாலை: இயல்பு.

கோட்டை இழைத்தான் - கோட்டை: அரண்.

கோட்டை இணங்கினான் - கோட்டை: அரண்.

எண்ணொடு நின்று பிரிந்தது - எண்ணொடு: எண்ணும் பொருளில் வந்த ஒடு என்னும் இடைச்சொல்.

தலையோடு தகர்ந்தது - தலையோடு: மண்டையோடு.

ஊரான் ஓர் தேவகுலம் - ஊரான்: ஊர்தொறும்.

குலத்தான் ஒருவன் - குலத்தான்: குலத்தின்கண் - ஆன் சாரியை.

வேலொடு நின்றான் - வேலொடு: வேல் கொண்டு.

வீட்டிற்கு நல்வினை விரும்பிச்செய்தான் - வீட்டிற்கு: விடுதலை பெறுவதற்கு என்னும் செயற்கு என்னும் வினையெச்சவாய்பாடு.

உணற்கு வந்தான் - உணற்கு: செயற்கு என்ற வினையெச்சம்.

சித்திரைக்குப் போனான் - சித்திரைக்கு: இக்குச்சாரியை. சித்திரைத்திங்களில் போனான் என்பது பொருள்.

ஆடிக்கு வந்தான்-ஆடிக்கு: இக்குச்சாரியை. ஆடித்திங்களின் கண் என்பது பொருள்.

சாரியையின் நீங்கிற்று, திரிந்தது, வேண்டும் - சாரியைஇன்: சாரியை ஆகிய 'இன்' என்பது.

அவனது செய்தான் - அவன் அது செய்தான். அது அதனை என்னும் பொருட்டு.

இவனது செய்தான் - இவன் அது செய்தான்.

அவன் கண் பதினைந்து - கண்: கண் என்னும் உறுப்பு.

நெற்றிக் கண் நெருப்பு - கண்: கண் என்னும் உறுப்பு.

அவன் தலை ஐந்து - தலை: தலை என்னும் உறுப்பு.

அவளிடை சிறிது - இடை: இடை என்னும் உறுப்பு.

இவன்கால் நெடிது - கால்: கால் என்னும் உறுப்பு.

அவன் கடை வெல்லம் - கடை: அங்காடி என்னும் பொருளது.

அவன் வாயுரை - வாய்: வாய் என்னும் உறுப்பு.

இவன் புடைகொடிது - புடை: புடைத்தல் தொழில்.

[வி-ரை, இங்ஙனம் வடிவினால் வேற்றுமை உருபுகள் போன்ற சொற்கள், வேற்றுமை உருபுகள் போலப் பெயரை யடுத்துவரினும், பொருளால் தாம் வேற்றுமை உருபுகள் அல்லவாதலை விளக்கிநிற்கும். செயற்கு என்பது அவ்வாய்பாட்டு வினையெச்சத்தினையும், நான்கன் உருபேற்ற செயல் என்ற தொழிற்பெயரையும் குறிக்கும். செயற்கு என்ற தொழிற்பெயரைப் பகுதியாகவும் குவ்வுருபாகவும் செயல் + கு எனப் பிரிக்கலாம்; வினையெச்சத்தைப் பிரித்தல் கூடாது என்பர் சேனாவரையர். தொல்-சொல். 40.] 7

## வேற்றுமை என்பதன் மூவகைப் பொருள்

20. உருபுஏற் றதனையும் உருபையும் உருபு
நோக்கிவந் ததனையும் வேற்றுமை என்பர்.

உருபு ஏற்ற சொல் வேறுபடுதலால் வேற்றுமையாம்; உருபு வேறுபடுத்தலால் வேற்றுமையாம்; உருபு நோக்கிய சொல் வேற்றுமையை முடித்தலால் வேற்றுமையாம் என்று பொருள் உரைப்பர்.

[வி-ரை: 'ஏற்கும் எவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை' -ந. 291

எனப் பொருள் வேற்றுமைப்படும் உருபு ஏற்ற பெயரையும் வேற்றுமை என்னுது, வேற்றுமை செய்யும் உருபை மாத்திரம் வேற்றுமை என்பர் நன்னூலார், தொல்காப்பியர்.

'உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைக் கிளவி'

-தொ-சொ. 102

என உருபு ஏற்ற பெயரையும்,

'ஐ எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி' -தொ-சொ. 71

என உருபையும் வேற்றுமைக் கிளவி என்பர். -பி வி.8. உரை.]

8

## பொருள் பற்றிய வேற்றுமையின் இரு கூறுகள்

21. உருபினை ஏற்றசொல் பலபொருள் படுதலும்
உருபுநோக் கியசொல் பலபொருள் படுதலும்
எனஇரு கூறும் வேற்றுமை எனபர்.

எ-டு :

'வினை செய் இடத்தின் நிலத்தின் காலத்தின்'

-தொ. சொ. 81

எனவும்,

'பொருண்மை சுட்டல் வியங்கோள் வருதல்' - தொ. சொ.66
எனவும் வரும்.

[வி-ரை: ஏழாம் வேற்றுமை உருபினை ஏற்ற சொற்கள் வினை செய் இடமாகிய சந்தர்ப்பம், நிலம், காலம் என்ற பொருள்களில் வரும். எழுவாய் வேற்றுமை கொண்டு முடியும் சொற்கள் பொருண்மை சுட்டல், வியங்கோள் வருதல், வினைநிலை உரைத்தல் வினாவிற்கு ஏற்றல், பண்பு கொள வருதல், பெயர் கொள வருதல் என்ற ஆறு பொருள்களில் வரும்.]

9

## வேற்றுமையும் உருபும்

22. ஒருவேற் றுமைக்குஓர் உருபே வருதலும்
ஒருவேற் றுமைக்குப் பலஉருபு வருதலும்
எனஇரு கூறுய் வரும்உரு புகளே;
ஐ – கு ஒன்றே; அல்லன பலவே.

[வி-ரை; இரண்டாம் வேற்றுமை ஐ என்ற ஒரே உருபினையும் நான்காம் வேற்றுமை கு - என்ற ஒரே உருபினையும் பெற்று வரும். ஏனைய வேற்றுமைகள் ஒன்றற்கு மேற்பட்ட உருபுகளைப் பெற்றுவரும். முதல் வேற்றுமைக்கு ஆயவன், ஆனவன், ஆவான், ஆகின்றவன் முதலியன உருபு என்பது. மூன்றும் வேற்றுமைக்கு ஆல் ஆன் ஒடு ஓடு என்பனவும், ஐந்தாவதற்கு இல்லும் இன்னும், ஆறுவதற்கு அது, ஆது அ என்பனவும், ஏழாம் வேற்றுமைக்குக் கண், கால், கடை, இடை முதலிய பலவும் உருபுகளாம். மூன்றும் வேற்றுமைக்கு உடன், கொண்டு முதலியனவும், நான்காவதற்கு ஆக, பொருட்டு நிமித்தம் முதலியனவும், ஐந்தாவதற்கு நின்று, இருந்து, விட்டு முதலியனவும் ஆறுவதற்கு உடைய என்பதும் சொல்லுருபுகளாம். இரண்டாவதற்கு ஐ என்பது ஒன்றனைத் தவிர வேறு உருபோ சொல்லுருபோ இல்லை.] 10

## உருபும் பொருளும்

23. ஓருரு பிற்கே பலபொருள் வருதலும்
ஒருபொருட் கேபல உருபுகள் வருதலும்
எனஇரண் டாகும் வேற்றுமை இயல்பே;
அவ்விரண் டனையும் முறையே அறைகுவன்.

[வி-ரை: ஓருருபிற்கே பல பொருள்கள் அமைதலும் உண்டு. ஒரு பொருளின்கண்ணேயே பல உருபுகள் வருதலும் உண்டு, ஓருருபிற்கே பலபொருள்கள் வருதலை 51-58ஆம் நூற்பாக்களிலும், ஒரே பொருளின்கண் பல உருபுகள் வருதலை 44-50ஆம் நூற்பாக்களிலும் ஆசிரியர் முறையாக விளக்கியுள்ளார்.] 11

## உருபுகள் தோன்றும் இடம்

24. பகுபதம் பகாப்பதம் இருவகைத் தொடர்ப்பதம்
வினைமுற் றுப்பெயர் குறிப்புமுற் றுப்பெயர்
தொழிற்பெயர் ஆதியின் தோன்றும்எட்டு உருபே.

உருபு ஆறே உள்ளன, எட்டு உருபு என்றது என்னை எனின்,
'ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும்ஈ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை' —ந. 291

எனத் தேற்றேகாரத்தானும்,

'இருநான்கு, உருபும் உறழ்தர நாற்பதாம் உருபே' —ந. 240

என இனைத்தென அறிந்த உம்மையானும் என்க. அன்றியும் விளியுருபு, தொல்காப்பிய விளி மரபினுள் காண்க.

[வி-ரை: பகுபதம், பகாப்பதம், இருமொழித்தொடர், பன்மொழித்தொடர், தெரிநிலை வினையாலணையும் பெயர், குறிப்பு வினையாலணையும்பெயர், தொழிற்பெயர் என்பனவற்றை எட்டுருபுகளும் அடுத்து வரும்.

பெயர்ச்சொல்லை முதல் வேற்றுமையாக்க முதல் வேற்றுமை உருபு ஏறி நீங்கும் என்பர் வடநூலார். பெயர்ச்சொல் தானே முதல் வேற்றுமையாம் என்பர் தமிழ் நூலார். பெயர்ச்சொல் ஈற்றின் ஓர் எழுத்து மிகுதலும், ஈறுதிரிதலும், ஈறுகெடுதலும், ஈற்றயல்திரிதலும் முதலாயின விளிவேற்றுமை உருபு என்பது கொள்ளப்படும்.

'விளிகொள் வதன்கண் விளியோடு எட்டே' என வேற்றுமை எட்டு என்றுகுறிப்பிட்ட தொல்காப்பியனார், எழுவாய் முதலிய ஏழு வேற்றுமைகளையும் வேற்றுமையியலில் கூறி, விளி வேற்றுமையை விளிமரபு என்ற இயலில் விளக்கியுள்ளார்.

நன்னூலார் 'எட்டே வேற்றுமை' எனத் தேற்றேகாரத்தால் உறுதிப்படுத்தியும், இரு நான்கு உருபும்' என இவ்வளவு என்று வரையறுக்கப்பட்டுள்ள பொருள்களுக்கு வழங்கப்படும் முற்றும்மையை வழங்கியும் வேற்றுமை எட்டே என்பதனை விளக்கியுள்ளார்.

இனி வரும் 19 நூற்பாக்களான் எட்டு வேற்றுமைகளையும் முறையே விளக்கி ஒவ்வொன்றற்கும் தனித்தனியே புறனடை நூற்பாவும் அமைத்துள்ளார்.] 12

## எழுவாய் வேற்றுமை உருபு பற்றிய பல கருத்துக்கள்

25. எழுவாய் வேற்றுமைக்கு உருபே இன்று;[1]
பெயரே,[2] பயனிலை கொள்ளும் தன்மையே,[3]
பயனிலை தன்னைக் கொண்ட தன்மையே,[4]
வினைமுதல் ஆதலே,[5] விகாரப் பெயரே,[6]
பெயர்ப்பின் விகுதி பெறுதலே,[7] ஆயவன்
ஆனவன் ஆவான் ஆகின் றவன்முதல்
ஐம்பால் சொல்லும் பெயர்ப்பின் அடைதலே[8]
உருபுஎன வெவ்வேறு உரைத்தார் பலரே.

எழுவாய்உருபு விதியை ஒரு சூத்திரத்தால் கூறுகின்றும். ஈற்றசை ஒழிந்த ஏகாரம் எட்டும் தேற்றம். முன் நின்றது ஒழிந்த ஏகாரம் ஏழன் பின்னும் உருபு என்பதனை ஒட்டி, என உரைத்தார் என்பதனை என்பொருளினும் ஒட்டுக. என என்பதற்கு உம்மைகொடுத்து எட்டுஅடுக்கி உரைத்தார் என முடித்தலும்ஆம்.

[வி-ரை: ஈற்றசை - பலரே என்பதன்கண் உள்ள ஏகாரம். ஏனைய எட்டும் - உருபே, பெயரே, தன்மையே, தன்மையே, ஆதலே, பெயரே, பெறுதலே, அடைதலே என்பன.

பெயரே உருபு என உரைத்தார், பயனிலை கொள்ளும் தன்மையே உருபு என உரைத்தார், பயனிலை தன்னை ..... உரைத்தார், வினைமுதல் ஆதலே —... உரைத்தார், விகாரப் பெயரே —உரைத்தார், பெயர்ப் பின்விகுதி — . உரைத்தார், ஆனவன் —... —அடைதலே — ......உரைத்தார் என்று பொருள் செய்க.

பெயரே எனவும், பயனிலை கொள்ளும் தன்மையே எனவும், பயனிலை தன்னைக்கொண்ட தன்மையே எனவும், வினைமுதல் ஆதலே எனவும், விகாரப்பெயரே எனவும், பெயர்ப்பின் விகுதி

பெறுதலை எனவும், ஆனவன் முதல் ஐம்பாற்சொல்லும் பெயர்ப் பின் அடைதலை எனவும் பலர் எழுவாய் வேற்றுமைக்கு உருபு வெவ்வேறு உரைத்தார் எனக்கூட்டியும் பொருள் செய்க ]

1-5. எழுவாய் வேற்றுமைக்கு உருபே இன்று.
பெயரே, பயனிலை கொள்ளும் தன்மையே,
பயனிலை தன்னைக்கொண்ட தன்மையே,
வினைமுதல் ஆதலே

இவற்றுள், முன்நின்ற ஐந்தும் பலர் நூல்களானும் பலர் உரைகளானும் தெளியக் கிடந்தன. ஏனை மூன்றும் விளக்கு கின்றாம்.

[வி-ரை: முன்நின்ற ஐந்தும் என்பன உருபே இன்று என்பது முதல் வினைமுதலாதல் ஈறாகக் கிடந்தன.

எழுவாய் வேற்றுமைக்கு உருபே இன்று என்பது தமிழ் நூலார் பலருக்கும் ஒப்ப முடிந்த கருத்தாம்.

எழுவாய் வேற்றுமை பெயரே என்பதனை-தொல்காப்பியனார்,

'எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே'

தொ-சொ. 65

என்பதனாலும், நன்னூலார்,

'எழுவாய் உருபு திரிபுஇல் பெயரே' - ந 295

என்பதனாலும், நேமிநாதநூலார்,

'பெயர் எழுவாய் வேற்றுமையாம், -நே. சொ. 17

என்பதனாலும், பிரயோகவிவேகநூலார்,

'தேற்றுந் தமிழுக்கு எழுவாய் வேற்றுமை திரிபில் பெயர்'

என்பதனாலும் குறிப்பிட்டுள்ளனர். இலக்கண விளக்கமும் நன்னூல் நுதலியதனையே நுதலிற்று.

உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் பெயர் தனித்து நின்ற காலை எழுவாய் வேற்றுமை ஆகாது; அது பயனிலை தோன்ற நிற்கும் நிலையாகிய அவசரத்தில் எழுவாய்வேற்றுமையாம் என்று குறிப்பிட்டமை கொண்டு, பெயர் பயனிலை கொண்ட தன்மையும், பயனிலை தன்னைக்கொண்ட தன்மையும் எழுவாய் வேற்றுமையாம் என்ற கருத்துண்மை போதருகிறது.

பெயர் தோன்றிய துணையாய் நின்று எழுவாயாதலின், வினைமுதலாதலே எழுவாய் வேற்றுமையாம் எனப் போந்த பொருளால் எல்லா இலக்கண ஆசிரியரும் உட்கொள்கின்றனர்.]

6. விகாரப் பெயரே

தன், தம், நம், என், எம், நின், நும் என்னும் திரிபுஇல் பெயர்கள் உருபுகளையும் உருபோடு வரும் மொழிகளையும் உருபின்றி வரும் மொழிகளையும் ஏற்று நிற்கும். இப்பெயர்கள் எழுவாயாங்கால் திரிந்தே நிற்கும். இத்திரிபே உருபு என்க.

[வி-ரை: **தன்** என்பது தன்னை என உருபினையும், தன் மைந்தனை என உருபு ஏற்ற பெயரினையும், தன்மைந்தன் என உருபின்றி வருமொழியையும் ஏற்றமைகாண்க. பிறவும் அன்ன, தன் என்பது எழுவாயாங்கால் தான் எனத்திரிந்தே நிற்கும். தன் என்பது தான் எனத் திரிதல் போல்வன எழுவாய் உருபுஎன்ப.

வடமொழியில் பிராதிபதிகமாகிய பெயர்ப்பகாப்பதம் வேறு; அது திரிந்து அமையும் முதல்வேற்றுமை ஆகிய பிரதமாவுபத்தி வேறு. வடமொழியில் முதல் வேற்றுமை இவ்வாறு இருக்கும் என்பதை அறிவித்தற்குத் தொல்காப்பியனார் நும் என்ற ஒரு சொல்லை மாத்திரம் பெயர் இயற்சொல்லாகக் காட்டி அதன் திரிபாகிய நீயிர் என்பது எழுவாய் வேற்றுமையாம் என்றார். அவர் நீயிர் என்பதனை இயற்கைச்சொல்லாகவே கொண்டு சொற் படலத்தில் ஈரிடத்துக் கூறுதலின், நும் என்பது நீயிர் எனத் திரிந்தது பிறன்கோள் கூறுதலாகவே கொள்ளப்படும். இவ் வடமொழிமரபைத் தமிழில் கொண்டு தன், தம் முதலியனவே இயற்கைச் சொற்கள்; அவற்றின் திரிபுகளாகிய தான் தாம் என்பன எழுவாய் வேற்றுமை என்று கூறும் கூற்றும் குறிப்பிடப் பட்டுள்ளது.]

7. பெயர்ப்பின் விகுதி பெறுதலே

இனி, இறைவன்கடியன், காக்கும்; தையலாள் வரும்; உமையாள் அமர்ந்து விளங்கும்; கோன் வந்தான்; கோக்கள் வந்தார்; மரமது வளர்ந்தது; மரங்கள் வளர்ந்தன — இவ்விகுதி களே உருபு என்க. இவ்வுருபுகளைத் தொகுத்தும் அறிக.

[வி-ரை: அன், ஆள், ன், கள், அது என்ற விகுதிகள் பெயருக்குப் பின்வருதலே முதல் வேற்றுமை உருபு என்பர்.

'கூறிய சொற்பின் பொருள்மாத்திரத்தில் குலவு எழுவாய்
வீறுடை வேற்றுமை எய்தும்; ஒருவன் ஒருத்திஒன்றில்
ஏறிய சு-பல வில்சு-வும் கள்ளும் எங்கும் அழியும்சு-'
— வீர. 33

என வீரசோழியம், ஒருமைப் பெயரின்பின் சு-என்ற உருபும், பன்மைப் பெயரின்பின் சு-கள் என்ற ஈர் உருபுகளும் வரும் எனவும், சு என்ற உருபு எப்பொழுதும் ஏறி நீங்கும் எனவும் குறிப்பிடும்; மேலும்

'முதல்சு, மருவும்அர் ஆர், அர்கள் ஆர்கள் மார்
முதல் வேற்றுமையின் உருவம்' — வீர. 30

என்பதனால், சு-அர்-ஆர்-அர்கள்-ஆர்கள்-மார் என்பனவும் முதல் வேற்றுமை உருபுகளாம் என்ற கருத்தையும் தெரிவிக்கும்.

பிரயோக விவேக நூலார் ஏழாம் காரிகையுரையில், 'இறை, உமை, தையல், கோ, வேள், பெண்டு, நாய், நரி, நிலம், நீர் என்னும் பெயர்ப் பகாப்பதங்களைப் பிராதிபதிகம் என்றும், அவை பிராதிபதிகம் ஆவதன்றி முதல் வேற்றுமை உருபு பெற்றன அல்ல என்றும், அவை எழுவாய் ஆகா என்றும், பின்னர் அன் அர், ஆள், ஆர், கள் என்னும் பிரதமா விபத்தியாகிய முதல் வேற்றுமை உருபோடு புணர்ந்து இறைவன், இறைவர், உமையாள் தையலாள், தையலார் எனநிற்கும் என்றும், இறைகடியன் இறை காக்கும் - உமையமர்ந்து விளங்கும் - தையல்வரும் என அன் ஈறும் ஆள் ஈறும் பெறாது நின்றவற்றை, அன் ஈறு ஆள் ஈறு என்னும் சுப்பிரத்தியயம் முதலாயின வந்து லோபமாயின என்றும் கூறுவர். அன்றியும், கோ-வேள்-பெண்டு என்னும்

உயர்திணை இயற்பெயரும், நாய்-நரி முதலிய அஃறிணை இயற் பெயரும், **அவன் - அவர் - அவள் - அது - அவை** என்பனபோல, ஒருமையீறும் பன்மையீறும் காட்டாது நின்று பின் கள் ஈறு பெற்றுக் கோக்கள்-வேள்கள்-பெண்டுகள்-நாய்கள்-நரிகள் என வெகுவசனம் ஆனாற்போல என்றும் கூறுவர். இவ்வாறு ஒருமைக்கும் பன்மைக்கும் அன்றி இருமைக்கும் வேறு விபத்தி வந்து பிரதமா விபத்தியாம் என்றும் கூறுவர்' என்று கூறியுள்ளார்.]

8. ஆயவன், ஆனவன் ஆவான் ஆகின் றவன்முதல்
ஐம்பால் சொல்லும் பெயர்ப்பின் அடைதலே
உருபு என வெவ்வேறு உரைத்தார் பலரே.

இனி, ஆயவன் முதல் நாற்சொல்லும் பாலால் இருபதாம். அவையே உருபு. சாத்தன் ஆனவன் வந்தான் - இதனுள் எழுவாயும் உருபும் பயனிலையும் காண்க. பிறவும் அன்ன. இவற்றைத் தொகுத்தும் அறிக.

[வி-ரை: ஆயவன், ஆயவள், ஆயவர், ஆயது, ஆயவை என்பனபோல ஆனவன், ஆவான், ஆகின்றவன், என்ற மூன்றற்கும் விரித்து எழுவாய் உருபு இருபது ஆமாறு அறிக.

சாத்தன் ஆனவன் வந்தான்-சாத்தன் எழுவாய்; ஆனவன் எழுவாய் உருபு; வந்தான் பயனிலை. ஆனவன் என்ற உருபு மறைந்து வருதலே பெரும்பான்மை.]

ஆயின், ஐ-குபோல ஒன்றே உருபு எனல் வேண்டும் எனின், மூன்று ஐந்து ஆறு ஏழன் உருபுகள் பொருத்தத்தானும் பொருளானும் பாலானும் பலவானாற் போலவும், உவம உருபுகள் பொருத்தத்தானும் பொருளானும் பலவானாற் போல வும் என்க. ஆயின், மரமானதை அறுத்தான், வாளானதால் வெட்டினான்-என ஐ முதலிய உருபுகளை ஏற்றலின் உருபு அன்று எனின், ஆறன் உருபு உருபுகளை ஏற்றாற்போல என்க. ஆயின், ஐ-கு-போல உருபு கொள்ளுதலன்றிச் சொற்கொண்டது என் எனின், கொண்டு-பொருட்டு-உடைய-உளி-மாறு-ஒடு-ஒடு-கண் முதலியனவும், உவம உருபுகளும் சொல்லே உருபானாற் போல என்க.

[வி-ரை: மூன்றன் உருபுகளுள் ஆல் ஆன் என்பனவும் ஒடு ஓடு என்பனவும் பொருத்தத்தானும் பொருளானும் பலவாயின ஐந்தன் உருபுகளாகிய இல், இன் என்பன பொருத்தத்தால் பலவாயின. ஏழன் உருபுகளாகிய புறம், அகம், கடை, இடை முதலியன பொருளால் பலவாயின. ஆறன் உருபுகளாகிய அது, அ-என்பன பாலால் பலவாயின.

உவம உருபுகளின் அன்ன - ஆங்க -என்ன - முதலியனவும், எள்ள - கள்ள - வெல்ல - முதலியனவும், ஒப்புப்பொருள் - உறழ் பொருள் என்ற பொருளானும், பொருத்தத்தானும் பலவாயின.

'பிறிது பிறிது ஏற்றலும்......வழிமருங்கு என்ப'.
-தொ.சொ. 104

'ஆறன் உருபும் ஏற்கும் அவ்வுருபே'. -ந. 293

என்ற நூற்பாக்களால் ஆறும் வேற்றுமை உருபு ஏனையஉருபுகளை ஏற்றல் பெறப்படும். ஆறும் வேற்றுமை உருபு பெயர்த்தன்மைப் பட்டு ஏனைய உருபுகளை ஏற்கும் என்பது தொல்காப்பியனார் நன்னூலார் இலக்கண விளக்க ஆசிரியர் முதலாயினாருக்கும், உரையாசிரியர், சேனாவரையர் நச்சினார்க்கினியர் மயிலைநாதர் முதலாயினாருக்கும் உடன்பாடு.

இனி மரமானதை அறுத்தான், வாளானதால் வெட்டினான் முதலாக முதல் வேற்றுமை உருபு ஏனைய உருபுகளை ஏற்பதனை உட்கொண்டு சிவஞான முனிவர் 'ஆறன் உருபும் ஏற்கும் அவ்வுருபே' என்ற நூற்பாவில் அன் என்பதனை வேண்டாவழிச் சாரியையாகக் கொண்டு எழுவாய்வேற்றுமை உருபு ஏனைய ஆறு உருபுகளையும் ஏற்கும் என்று பொருள் செய்துள்ளதும் நோக்குக. ஆறன் உருபு ஏனைய உருபுகளை ஏற்கும் என்பது முனிவருக்கு உடன்பாடன்று.

ஐ, கு, இல், இன் என்பன நீங்கலான உருபுகள் பலவும் சொல்லாக இருத்தல் விளக்கப்பட்டது.

சாத்தன் வெட்டினான், பொருதான், நீங்கினான், அடிமை, வந்தான் என்றும்,

மக்கள் சொன்னார். உவரி ஒரித்தல், ஆற்றல் சான்று, ஆயன் சாத்தன் என்றும்,

உருபின்றிப் பெயராகிய எழுவாய் உருபுதானே பயனிலை கொண்டது என்று கொள்ளின் குற்றம் என் எனின், யான் வந்தேன், நீ வந்தாய் என்றாற்போல எழுவாய்ப்பொருள் படுதலன்றி, சாத்தனை வெட்டினான், சாத்தனொடு பொருதான், சாத்தற்குக் கொடுத்தான், சாத்தனின் நீங்கினான், சாத்தனது அடிமை, சாத்தன்கண் வந்தான் என்றும், மக்களைச்சொன்னார் உயர்திணை என்று, உவரிபோல் ஒலித்த ஒலி, ஆற்றற்குச்சான்று இந்திரன், ஆயனாகிய சாத்தன் என்றும் எழுவாயாகாமல் வேறு பொருள்படுதலின் குற்றம் என்க. இனி இவற்றை எழுவாய் ஆக்கவேண்டின், சாத்தனானவன் வெட்டினான், மக்களானவர் சொன்னார், உவரியானது ஒலித்தல், ஆயனாகின்றவன் சாத்தன் என உருபு கொடுத்தாலே எழுவாயாம் என்க.

[வி-ரை: எழுவாய் உருபாகிய ஆனவன் முதலிய, பொருள் தெளிவு குறித்து இன்றியமையாதன என்பது இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது.]

இனி இவ்வுருபின் பொருள்படப் பிறசொற்கள் வருவனவும் உள. இல்வாழ்வான் என்பான்துணை (கு. 41). எழுத்து என்பது ஒலி, என்பன - இல்வாழ்வான் ஆனவன்துணை, எழுத்தாவது ஒலி எனப் பொருள்படுதல் காண்க. பிறவும் அன்ன.

[வி-ரை: ஆனவன் முதலிய உருபிற்குப் பரியாயச் சொற்களாக என்பான் முதலியனவும் கொள்ளப்படும்.]

பலர் நூல்களிலும் பலர் உரைகளிலும் இங்ஙனம் பிறந்த உருபுகள் உருபு என்று பெயர்பெறாமல், பொருளை முடிக்கவந்த வாசகம் என்றும் சொல் என்றும் பெயர் பெற்று, முற்காலத்தே அமைந்தன என்றே கொள்க. அஃது அன்றாயின், இவ்வுருபு இன்றியமையாதது, ஆதலால், 'கடிசொல் இல்லை' (தொ. சொ. 452) 'புதியன புகுதலும்' (ந. 462) என்பனவற்றாலும், தேஙகாய் முதலிய சொற்களைப் புதிதாக விதித்தலானும், தமிழிற்கு

இன்றாகிய வடமொழி இலக்கணம் தமிழில் வருதலானும், எழுவாயுருபும் வடமொழியிற்கண்டு இன்று கொண்டுவந்தது என்றலும் ஒன்று. இக்கருத்து,

'தரங்கக்கும் வண்ணகக்கும் தரவாவது' (யா. கா. 56) என்றும், வாழ்வாவது மாயம்' (சு. தே.) என்றும், 'அறமாவது ஈதல்' என்றும், மூவகைச் செய்யுளாலும் அறிக.

'வடமொழி எழுவாய்க்கு உருபுமூன்று அவைதாம்
விரியவும் தொகவும் விரும்பும் என்ப'

இஃது உரைச்சூத்திரம்.

இவ்வெண்விதியோடு எழுந்த சூத்திரம் பிறர்மதம் கூறலே யாம்; தன் துணிபு உரைத்ததன்று. இவ்வெண்மரும் தம்முள் மறுப்பர்; அவை விரிக்கின் பெருகும்.

[வி-ரை: ஆனவன் முதலிய சொற்கள் எழுவாய் உருபு எனப் பெயர் பெறுவிடினும் பண்டுதொட்டே வழக்கத்தில் இருக்கும் சொற்களேயாம். அதனால் அவை ஏற்றுக்கொள்ளத் தக்கன. மேனும்

'கடிசொல் இல்லை காலத்துப் படினே'

'பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே'

என்ற நூற்பாக்களான், புதிய சொற்களைப் படைத்துக் கோடலும் ஏற்புடைத்தாகின்றது.

'தெங்குநீண்டு ஈற்றுஉயிர் மெய்கெடும் காய்வரின்'

என்ற நூற்பாவினால் தெங்கு+காய்=தேங்காய் எனவும் அமைதல் கொள்ளப்பட்டமை புதியது புகுதலாம். தெங்கின்காய், தெங்கங்காய் என்பனவே பழைய முடிபு.

வடமொழியில் எழுவாய் உருபு இருப்பதுகொண்டு, தமிழிலும் வடமொழி இலக்கணம் கலந்து வருதலின் தமிழிற்கும் எழுவாய்உருபு கொள்ளுதலும் அமையும்.

மூவகைச்செய்யுள், நூற்செய்யுள், பாட்டுச்செய்யுள், உரைச் செய்யுள் என்பன. எழுவகைப்பட்ட செய்யுளுள் பாட்டுச் செய்யுள் அடிவரையறை உடையது என்பதும், ஏனைய உரை, நூல், வாய்மொழி, பிசி, முதுசொல், குறிப்பு என்பன அடி வரையறை இல என்பதும் கொள்க. வடமொழியில் எழுவாய்க்கு ஒருமை, இருமை, பன்மை என்ற மூவகை உருபுகள் உள. இவ் வாசிரியர் பலர் மதங்களைத் தொகுத்துக் கூறுவாரன்றி முடிந்த முடிபு கூறுவார் அல்லர்.]

இனி, முற்கூறிய பொது இலக்கணங்களுள், உரிமையாய் நிற்கும் உருபுகளும், உருபினை ஏற்ற சொல் பல பொருள்படுவன வும், ஓருருபிற்குப் பல பொருள் வருவனவுமாகி மூவிலக்கணமும் ஒருங்கே தோன்ற வினைமுதல் முதலாகச் சிறப்புச் சூத்திரம் செய்கின்றாம். 13

## வினைமுதல் தோன்றும் இடம்

26. இருவகைச் செயப்படு பொருளே ஏது
தன்வசம் தெரியா நிலைதடு மாற்றம்
தொழிற்பெயர் ஏழில் தோன்றும் வினைமுதல்;
கருவி இடம்கொள் வானினும் கருதுவர்.

[வி-ரை: தேற்றத்தோடு கூடிய செயப்படுபொருள், தேற்றத்தோடு கூடாச் செயப்படுபொருள், ஏது, தன்வசம், தெரியாநிலை, தடுமாற்றம், தொழிற்பெயர் என்ற ஏழனையும் நிலைக்களனாகக்கொண்டு வினைமுதல் என்னும் கருத்தா தோன்றும் கருவி, இடம், கொள்வான் ஆகியவற்றை நிலைக்களனாகக் கொண்டு கருத்தா தோன்றும் என்று கருதுவாரும் உளராயினும், அங்ஙனம் கூறுதல் இலக்கணமன்று.

தெரிநிலைக்கருத்தா - செயப்படுபொருள், தன்வசம், ஏது என்ற பொருண்மைகளில் வரும்; 'ஏயும்' என்ற மிகையால் பாவத்திலும் தடுமாற்றத்திலும் வரும் தெரியாநிலைக் கருத்தா விற்குப் பிரிவுகள் இல்லை என்னும் பிரயோகவிவேகம். (11)

கருத்தா - கருத்தன், ஏதுக்கருத்தன், கருவிக்கருத்தன், கருமக்கருத்தன் என நால்வகைப்படும்-என்னும் இறையனார் அகப் பொருள் உரை.

காரணக் கருத்தா, தான்தெரி கருத்தா, தான்தெரியாக் கருத்தா, கருமக் கருத்தா, தலைமைக் கருத்தா எனக் கருத்தா என்னும் வினைமுதல் ஐவகைப்படும் என்று வீரசோழியம் (41) கூறும்.

எனவே, வினைமுதல் வகைகள் 4, 5, 6, 7, என இலக்கண ஆசிரியர்களிடை கருத்து வேறுபாடுண்மை காண்க.]

எ-டு:

'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்' -கு. 193

'பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும் - வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு' - நாலடி. 125

என்பனவற்றுள், 'இன்னா தாமே வரும்' 'கேண்மை தானே நந்தும்' 'தொடர்பு தானே தேயும்' எனச் செயப்படுபொருள் தேற்றத்தொடு வினைமுதலாய்ச் செயப்படுபொருள் குன்றிய வினை கொண்டது.

திண்ணை மெழுகிற்று எனச் செயப்படுபொருள் தேற்றமின்றி வினைமுதலாய்ச் செயப்படுபொருள் குன்றாத வினை கொண்டது. இவ்விருவகையும் வடமொழி விதியாகலின் விரிக்கின் பெருகும்.

ஆதித்தன் கல் தீப்பிறப்பித்தான்.

காற்றுப் பழம் உதிர்த்தது.

- இவை ஏதுக் கருத்தா.

சாத்தான் உண்டான்.

- இது தன் வசக் கருத்தா.

மாடம் செய்யப்பட்டது.

– இது தெரியா நிலை. தெரியா நிலையாவது வினைமுதல் என்று தெரியப்படாமல் வினைமுதலாயே நிற்பது. இது தெரியா நிலை எனவே, ஏனைய தெரிநிலை என்க.

'ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' – தொ.பொ. 93

– இது தடுமாற்றம். தடுமாற்றமாவது ஒரு பொருளே ஒருகால் வினைமுதலாயும், ஒருகால் செயப்படுபொருளாயும் நிற்றல்.

'கொல்லாமை அறவினை எல்லாம் வரும்' – கு. 321

'கோறல் பிறவினை எல்லாம் வரும்' – கு. 321

'தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை வரும்' – கு. 510

– இவை தொழிற்பெயர்க் கருத்தா. கண்காணும் – கருவி, குன்று குவட்டைத் தாங்கும்; தூண்போதிகையைத் தொட்டது– இவை இடம். 'இரப்பவர் என்பெறினும் கொள்வர்' –இது கொள்வோன். கருதுவர் எனவே இலக்கணமன்று.

[வி–ரை: இச்சூத்திரச் செய்திகள் நன்னூல் 295ஆம் நூற்பா உரையுள் முனிவரால் எடுத்தாளப்பட்டுள்ளன. செயப்படு பொருள் தானே தாமே முதலிய தேற்றச் சொற்களோடு சேர்ந்து எழுவாயாகும்போது, வரும், நந்தும், தேயும் முதலான செயப்படு-பொருள் குன்றியவினை கொள்ளும். தேற்றமின்றி எழுவாயாகும் போது மெழுகுதல் முதலாகிய செயப்படுபொருள் குன்றாத வினையையே கொண்டுமுடியும்.

இனி, பிரயோகவிவேக நூலார் 11ஆம் காரிகையுரையுள், 'கூரைமேய்ந்தது, கன்றுவிட்டுக்கொண்டது, பசுக்கறந்தது, திண்ணைமெழுகிற்று, சோறு அட்டது, கறி பொரித்தது' எனக் கர்த்திருவற்பாவம் என்னும் கருமகருத்தா வரும்.

'செயப்படு பொருளைச் செய்தது போல' – தொ.சொ. 246 என்னும் சூத்திரத்துள், சேனாவரையர் 'அரிசிதானே அட்டது' என உதாரணம் காட்டி அத்துணை எளிதின் அடப்படும் என்றும் கூறுவர். இனிக் குணிவிருத்திகாரர்,

'பிறர்க்கின்று ... ... — ...வரும்'
'பெரியவர் ... ... ... ... தொடர்பு'

என்னும் இவற்றுள் தாமே, தானே என்னும் சுயமேவபதம் தொடர்ந்த-வரும் நந்தும், தேயும் என்னும் அகன்மக பரஸ்மை பதம் என்னும் செயப்படுபொருள் குன்றிய வினைமுற்றுச்சொல் லோடு வரும் கருமத்தைக் கருமகருத்தா என்பர். இவை சகன்மக பரஸ்மைபதம் என்னும் செயப்படுபொருள் குன்றாத வினைமுற்றுச் சொல்லோடு முடியாமையின். பாடியகாரர் கருமகருத்தா ஆகா என்பர்' என்று குறிப்பிட்டதும் காண்க.

ஆதித்தன் ... பிறப்பித்தான் - உயர்திணையில் ஏதுக்கருத்தா.

காற்று — உதிர்த்தது - அஃறிணையில் ஏதுக்கருத்தா.

தெரியாநிலைக்கருத்தா நீங்கலான ஆறும் தெரிநிலைக்கருத்தாவின் வகை என்க.

சாத்தன் உண்டான் - இது மற்றும் சிலரால் இயற்றப்படும் தன்மை இன்றித் தானே கருத்தாத்தன்மை எய்தினமையின் தன்வசக் கருத்தாவாயிற்று. இதனை வீரசோழியம் தலைமைக் கருத்தா என்னும். பிரயோகவிவேகம் சுதந்திரக் கருத்தா என்னும்.

மாடம் செய்யப்பட்டது என்பது தெரியாநிலைக்கருத்தாவுக்கு எடுத்துக்காட்டு. இது பொருள் அளவில் செயப்படு பொருளாமேனும் இவ் வாக்கியத்தில் சொல் அளவில் மாடம் என்பது எழுவாயாய் இருத்தல் நோக்கித் தெரியாநிலைக் கருத்தா எனப்பட்டது. பிரயோகவிவேகமும் மாடம் தச்சனால் எடுக்கப் பட்டது என்ற எடுத்துக்காட்டினைத் தந்துள்ளது. ஆனால் வீரசோழியத்தில் தெரிநிலை தெரியாநிலை என்பன மாற்றிக் கூறப்பட்டுள்ளன.

'கொற்றனால் கொள்ளப்பட்டது வீடு'

என்புழிக்கருத்தா இடம் தெரிந்து நிற்றலால், தான்தெரி கருத்தா வாயிற்று.

'தேவதத்தன் சோற்றை அடுகிறான்'

என்புழித் தேவதத்தன் என்னும் சொல் தானே கருத்தா என்னும் இடம் தெரிந்து நில்லாமையானும், சோற்றை என்னும் காரக-

பதத்தானும் அடுகின்றான் என்னும் கிரியா பதத்தானும் கருத்தா என்று அறியப்படுதலானும், தான் தெரியாக் கருத்தாவாயிற்று. 'வறியோர் சுற்றம் உவப்பர்' என்பதும் அது.—வீரசோழியம். 41 உரை.

'ஒத்தகிழவனும் கிழத்தியும் காண்ப' கிழவனைக் கிழத்தி காண்பாள்; கிழத்தியைக் கிழவன் காண்பான் எனக் கிழவன் கிழத்தி என்ற இரு சொற்களும் ஒருகால் வினைமுதலாயும் ஒருகால் செயப்படுபொருளாயும் நிற்றல் த டு மா ற் ற ம் எனப்பட்டது.

கொல்லாமை, கோறல், தெளிவு, ஐயுறவு என்ற தொழிற் பெ ய ர் க ள் எழுவாயாயினமை காண்க. இவையெல்லாம் பிரயோகவிவேகத்திலும் விளக்கப்பட்டுள்ளன.

கருவிகருத்தா, இடக்கருத்தா, கொள்வோன் கருத்தா- என்பன இலக்கண ஆசிரியர் பலருக்கும் உடன்பாடல்ல. இதுபற்றிப் பிரயோகவிவேகம் 11ஆம் காரிகை உரையில்,

''இனி, எழுத்தாணி எழுதும்,

'கண்ணவனை யல்லது காணாச் செவியவன(து)
எண்ணருஞ்சீ ரல்ல(து) இசைகேளா - அண்ணல்
கழலடி யல்லது கைதொழா அஃதால்
அழலங்கைக் கொண்டான்மாட் டன்பு.'

'கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.' -கு. 9

எனக் கருவிகருத்தாவாகியும்,

'இரப்பவர் என்பெறினும் கொள்வர்' -தனிப் பாடல்.

எனச் சம்பிரதானம் கருத்தாவாகியும்,

'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல' -கு. 151

'அறம்நோக்கி ஆற்றுங்கொல் வையம்' -கு. 189

'வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்' -கு. 239

என அதிகரணங்கருத்தாவாகியும் வந்தன அல்லவோ எனின், அல்ல என்க. என்னை? அபிகித கருத்தாவும் அபிகித கருமமும் பிரதமையோடேவரும் எனவும், ஒழிந்த கரணமும் சம்பிரதானமும் அவதியும் அதிகரணமும் பிரதமையோடு வாரா எனவும் விதித்தமையான் என்க" என்று குறிப்பிட்ட கருத்து இவ்வாசிரியருக்கும் உடன்பாடாயிற்று.] 14

## இருவினைமுதல் வினை

27 †இருவினை முதலால் ஒருவினையும் உள.

எ-டு: தாய் மகவுக்கு ஊட்டினாள்; ஆரியன் மாணாக்கனுக்குப் படிப்பித்தான்; தலைவன் தலைவியைப் புல்லினான்-எனவரும்.

[வி-ரை: சில வினை நிகழ்ச்சிக்கு வினைமுதல் இரண்டு தேவைப்படும். ஊட்டுதல் தொழில்நிகழ்ச்சிக்குத் தாயோடு மகவு இருத்தலும், படிப்பித்தல் தொழில்நிகழ்ச்சிக்கு ஆசிரியனோடு மாணாக்கன் இருத்தலும், புலலுதல் தொழில் நிகழ்ச்சிக்குத் தலைவனோடு தலைவி இருத்தலும் இன்றியமையாதன ஆகலின், இத்தொழில்கள் எழுவாய் ஒன்றனான் நிகழ்வன அல்ல என்பதனை உட்கொண்டு இருவினைகளால் நிகழும் வினை என்றார். மகவு-மாணாக்கன் - தலைவி என்ற சொற்கள் மகவுக்கு - மாணாக்கனை - தலைவிக்கு - என முறையே நான்கன் உருபு இரண்டன் உருபு நான்கன் உருபு என்பனவற்றை ஏற்ற சொற்களாக அமையினும் முறையே ஊட்டுதல் - படிப்பித்தல் - புல்லுதல் என்ற தொழில் நிகழ்ச்சிக்கு இவையும் எழுவாய்த்தன்மைப்பட்டு நிற்றல் உணரப்படும்.] 15

## மூவகை வினைமுதல்கள்

28. *ஏவுதல் இயற்றுதல் இவையின்வேறு ஆதல்
எனவினை முதல்மூ வகையாம் என்ப.

---

† நன்னூல் 295 - முனிவர் உரை.

* நன்னூல் 295 - முனிவர் உரை.

எ-டு:

அரசன் தேர் செய்தான் - ஏவுதல்வினை.

தச்சன் தேர் செய்தான் - இயற்றுதல்வினை.

சாத்தன் உறங்கினன்-இவையின் வேறாயவினை - எனவரும்.

[வி-ரை: உறங்குதல் என்ற வினை ஒருவன் மற்றவனை ஏவுதலாலோ, ஒருவன் தானே முயன்று இயற்றுவதாலோ நிகழாமல் இயற்கையாக நிகழுமொருவினையாதலின் அஃது ஏவுதல் இயற்றுதல் என்ற இரண்டின் வேறாயிற்று.] 16

## வினைமுதற்குப் புறநடை

29. வினைமுதல் இன்னும் விரிக்கின் பெருகும்.

[வி-ரை: சுருக்கமாக நூல் இயற்றப்புக்க ஆசிரியர் பெரிதும் விரித்தலை விரும்பாமையானும், வினைமுதல் பற்றிய செய்தி இவ்வளவிற்றே என்று அறுதியிட்டுக்கொள்வார் திரிபுணர்வை அகற்றவேண்டுவது இன்றியமையாதது ஆதலானும் இந்நூற்பாவை வேண்டாகூறி வேண்டியது முடித்தார். இனிவரும் வேற்றுமைப் புறநடை நூற்பாக்களும் அன்ன. 17

## விளி வேற்றுமை

30. அழைத்தல் என்றுஒன்று அன்றிவேறு இன்மையின்
விளிக்குச் சூத்திரம் விளம்பிலம் என்க.

[வி-ரை: விளிவேற்றுமை படர்க்கையோரை முன்னிலைப் படுத்தி அழைத்தல் என்ற ஒரே பொருளை உடையது ஆதலின், அதுபற்றி ஆசிரியர் எதனையும் விளக்கவில்லை.

வடநூலார் ஒருமைவிளியைச் சம்போதனம் என்றும் பன்மை விளியைச் சம்புத்தி என்றும் கூறுவர். தமிழில் அத்தகைய குறியீடு இன்மையின் அப்பாகுபாட்டினை இவ்வாசிரியர் குறிப்பிட வில்லை.] 18

## செயப்படுபொருள் விரி

31. *கருத்துண் டாதல், கருத்தின் றாதல்,
இருமையும் ஆதல், ஈருருபு இணைதல்,
கருத்தா ஆதல், அகநிலை ஆதல்,
தெரிநிலை ஆதியாய் வரும்செயப் படுபொருள்;
இயற்றப் படுதல், எய்தப் படுதல்,
வேறு படுக்கப் படுதல் ஆதியும்,
அவ்வெழு வகையுள் அடங்கும் என்ப.

[வி-ரை: வாக்கியபதீயத்துள்ளும் கையடத்துள்ளும் செயப்படுபொருள் நிருவர்த்தியம்-விகாரியம்-பிராப்பியம் என்று பகுக்கப்பட்டிருத்தலை உட்கொண்டு, சேனாவரையர் முதலாயினோர் செயப்படுபொருளை, இயற்றப்படுதல்-வேறுபடுக்கப்படுதல்-எய்தப் படுதல் என மூன்றாகப் பகுத்தனர். வீரசோழிய நூலார் 41 ஆம் காரிகையில் செயப்படுபொருளைப் பற்றுக்கருமம், வீட்டுக்கருமம் இருபுறக் கருமம், தான்தெரி கருமம், தான்தெரியாக் கருமம், கருத்தாகக்கருமம் தீபகக்கருமம் என ஏழுவகையாக விளக்கினார். பிரயோக விவேக நூலார் தெரிநிலைச் செயப்படுபொருள்-தெரியா நிலைச் செயப்படுபொருள் என இரண்டாகப் பகுத்துத் தெரிநிலைக்கு உட்பிரிவுகள் இல்லை என்று கூறித் தெரியாநிலையைக் கருத்துண்மை - கருத்து இன்மை - இருமை-ஈருருபு இணைதல்- கருத்தாவாதல் என ஐவகையாகப் பகுத்து, மிகைச் சொல்லால் அகநிலையும் கொண்டார். ஆகவே இவ்வாசிரியர் குறிப்பிடும் எழுவகைச் செயப்படுபொருள் பிரயோகவிவேகம் குறிப்பிடு வனவே. வீரசோழியத்துள் சிறிது வேறுபாடுள்ளது.]

எ-டு:

சோற்றை உண்டான் - கருத்து உண்டாதல்.

சோற்றைக் குழைத்தான் - கருத்து இன்றாதல்.

எறும்பை மிதித்து வழியைச் சென்றான்.

பசும்புல்லை மிதித்துப் பலவூரை அடைந்தான்.

துகளொடு கூழை உண்டான்.

* நன்னூல் 296. முனிவர் உரை.

நஞ்சினைக்கலந்த பாலைக் குடித்தான்.

கத்தரிக்காயையும் புழுவையும் கறித்தான்.

பதரையும் நெல்லையும் பணத்திற்குக் கொண்டான்.

- இவை கருத்துடைமை, கருத்தின்மை என்ற இருமையும் ஆயின.

ஆரியனை ஐயுற்ற பொருளை வினவினன்.

பசுவினைப் பாலினைக் கறந்தான்.

யானையைக் கோட்டைக் குறைத்தான்.

-இவை ஈருருபு இணைந்தன. பசுவினது பாலினை - யானையது கோட்டை - என்பனபோல, ஆரியனது ஐயுற்ற பொருளை என வாராமையின், ஈருருபு இணைதலில் இருவகை உண்மை தோன்ற இருவகைப்பட்டு ஈருருபு இணைதல் என்றும்.

தன்னைப் புகழ்ந்தான்.

தன்னைக் குத்தினன்.

தன்னைப் பேணினன்.

தன்னைக் காதலித்தான் - கருத்தாவாதல்.

வருதலைச் செய்தான் - அகநிலைச் செயப்படுபொருள்.

மாடம் செய்யப்பட்டது - தெரிநிலைச் செயப்படுபொருள்.

தெரிநிலையாவது வினைமுதல் உருபு ஏற்றும் செயப்படு பொருளே எனத் தெரியநிற்றல். இது தெரிநிலை எனவே ஏனைய தெரியாநிலை என்க. தெரிநிலை, தெரியாநிலை - வடமொழி வழக்கு.

எயிலை இழைத்தான் - இயற்றப்படுதல்.

பொருளைப்பெற்றான் - எய்தப்படுதல்.

கயிற்றை அறுத்தான் - வேறுபடுக்கப்படுதல்—முதலியன அவற்றுள் அடங்கும்.

'ஆதி என்றதனால்,

ஆரியன் மாணுக்கனை ஊர்க்குப் போக்கினான்.

தாய் மகளை ஊர்க்குப் போக்கினாள்.

என்புழி, மாணுக்கன் மகள் என்னும் இருவரும் போதலாலே வினைமுதலாயும், ஏவப்படுதலால் செயப்படுபொருளாயும் ஆரியனும் தாயும் ஏவுவித்துக் கொள்ளுதலால் ஏவுதற்கருத்தா-வாயும் மாணுக்கனும் மகளும் ஏவப்போதலால் இயற்றுதல் கருத்தாவாயும் வந்தன.

'ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' - தொ.பொ. 93

என்புழிக் கிழவனும் கிழத்தியும் தனித்தனி வினைமுதலாயும் செயப்படுபொருளாயும் வருதல் காண்க.

[வி-ரை: எடுத்துக்காட்டுக்களில் வழியைச் சேறல், ஊரை அடைதல், கூழை உண்டல், பாலைக் குடித்தல், கத்தரிக்காயைக் கறித்தல், நெல்லைக்கோடல் என்பன கருத்துண்டாதல்; எறும்பை மிதித்தல், பசும்புல்லை மிதித்தல், துகளை உண்ணுதல், நஞ்சினைக் குடித்தல், புழுவைக் கறித்தல், பதரைக் கோடல் என்பன கருத்து இன்றாதல்.

ஈருருபு இணைதல் என்பதன்கண் இருவகைகள் உண்மை விளக்கப்பட்டது.

எழுவாகிய செயப்படுபொருளாதல் கருத்தாவாதலாம்.

வந்தான் - வருதலைச்செய்தான். வருதல் வினை; செய்தல் தொழில்.

எந்த வினைச்சொல்லும் அகநிலைச் செயப்படுபொருள் ஒன்று காணப்படும்; கண்டான் - காணுதலைச் செய்தான் என்பதுபோல எனக்கொள்க.

மாடம் செய்யப்பட்டது - மாடம் என்பது எழுவாயாய் அமைந்தும் நோக்குவார்க்குச் செயப்படுபொருளே என்பது தெரிய நிற்றலின் தெரிநிலைச் செயப்படு பொருளாயிற்று. இங்ஙனமே பிரயோகவிவேக நூலாரும் மாடம் தச்சனால் இயற்றப் பட்டது என்பது அபிகித கருமம் என்று குறிப்பிட்டுள்ளார்.

வீரசோழியத்துள்,

"வீட்டை எடுத்தான் தச்சன்

என்புழி, கருமமாய் நின்ற வீடு மற்றொரு சொல்லான் அன்றித் தானே கருமம் என்னும் இடம் தெரிந்து நின்றலான் தான்தெரி கருமமாயிற்று. (41)

வீடு தச்சன் கட்டினான்.

என்புழி, கருமமாய் நின்ற வீடு கருமம் என்னும் இடம் தானே தெரியாமையாலும், தச்சன் என்னும் காரக பதத்தாலும், கட்டினான் என்னும் கிரியா பதத்தாலும் கருமம் என்று அறியப் படுதலானும் தான்தெரியாக் கருமம் ஆயிற்று. 'வாய்ச்சி கொல்லன் செய்தான்', 'தாலி தட்டான் செய்தான்' என்பனவும் அது" — என்று தெரிநிலை தெரியாநிலைகள் வேறு வகையாக விளக்கப்பட்டுள்ளன. (41)

இயற்றப்படுதல் - முன் இல்லதனை உண்டாக்குதல்.

வேறுபடுத்தல் - முன் உள்ளதனை வேறாக்குதல்.

எய்தப்படுதல் - இயற்றுதலும், வேறுபடுத்தலுமன்றிச் செயப்படுபொருள் வினைமுதலின் தொழிற்பயன் உறும் துணையாய் நிற்றல்.

ஆரியன் மாணாக்கனை ஊர்க்குப் போக்கினான், தாய் மகளை ஊர்க்குப் போக்கினாள் - இத்தொடர்களில், மாணாக்கன் - மகள் - போதற்றொழிலுக்கு வினைமுதல்; போக்குதல் தொழிலுக்குச் செயப்படுபொருள்.

ஆரியனும் தாயும் போகும்வினைக்கு ஏவுதல் கருத்தா; போக்கும்வினைக்கு இயற்றுதல் கருத்தா.

ஆரியனும்தாயும் போதற்கு ஏவுதலால் ஏவுதல் கருத்தா.

மாணாக்கனும் மகளும் போதலை இயற்றுதலால் இயற்றுதல் கருத்தா.

பிரயோகவிவேகம் 'மாணாக்கனை.........ஆசிரியன், மகட் போக்கியதாய் என்புழி, மாணாக்கன் மகள் என்னும் இருவரும் தனித்தனியே போவாரும் போக்கப்படுவாரும் ஆகலின் கர்த்திரு கருமமாம்' (12 உரை.) என்று கூறும் தொடருக்கு இலக்கணக் கொத்துரை விளக்கமாக அமைந்துள்ளது.

'ஒத்தகிழவனும் கிழத்தியும் காண்ப' என்பது 26ஆம் நூற்பா உரையுள் விளக்கப்பட்டது.] 19

## செயப்படுபொருளுக்குப் புறனடை

32. செயப்படு பொருள்இனும் செப்பின் பெருகும் 20

## கருவியின் வகைகள்

33. *அகம்புறம் ஒற்றுமை ஆகும் கருவி

[வி-ரை: கருவி, அகக்கருவி, புறக்கருவி, ஒற்றுமைக்கருவி என மூவகைப்படும். 'நண்ணிய காலை அகம்புறம் ஆகும் காரணங்களே' எனக்கருவியை அகக்கருவி புறக்கருவி என இரண்டாகவே பகுத்த பிரயோகவிவேகம், அறிவான் அறிந்தான் என்பதனை ஏதுவின்கண் வந்த மூன்றும் வேற்றுமை என்றே கூறும். (12 உரை) வீரசோழியமும் இரண்டே கூறும் (41).]

எ-டு: மனத்தான்நினைத்தான் - மனம் - அகக்கருவி.

வாளால்வெட்டினன் - வாள் - புறக்கருவி.

அறிவான்அறிந்தான் - அறிவு அறிதலுக்கு ஒற்றுமைக்கருவி. 21

* நன்னூல் 297. முனிவர் உரை.

## மூன்றனுள் கருதப்படுவன

34. முதல்துணை ஞாபகம் காரகம் ஏது
வினையே நிமித்தம் வேற்றுமை வினைமுதல்
காலம்ஆ திகளீ இம் மூன்றனுள் கருதுவர்.

[வி-ரை: முதற்காரணம், துணைக்காரணம். ஞாபகஏது, காரகஏது, வினைக்காரணம், நிமித்தகாரணம், வேற்றுமைக் காரணம், வினைமுதற்காரணம், காலக்காரணம் முதலியன மூன்றும் வேற்றுமைக் கருவிக்கண் அடங்கும்.

மண்ணான் இயன்றகுடம் – மண்முதற்காரணம்; முதற்காரண மாவது காரியத்தோடு தொடர்பு உடையது.

திரிகையான் இயன்றகுடம் – திரிகை துணைக்காரணம்.

முயற்சியிற்பிறத்தலான் ஒலி நிலையாது – பிறத்தல் ஞாபக ஏது; பிறந்த பொருள் எதுவும் நிலைபெறாது என்பது அறிவான் அறிதலின் இது ஞாபகஏது ஆயிற்று.

வாணிகத்தான் ஆயினான் – வாணிகம் காரகஏது; வாணிகம் என்ற தொழில் செல்வத்திற்குக் காரணமாயிற்று. 'ஆகூழால் தோன்றும் அசைவின்மை'. ஆகூழ் வினைஏது; அசைவின்மைக்கு நல்வினை காரணமாதலின். இனி, சாத்தன் கைஎழுதுமாறு வல்லன்; அதனால் தந்தை உவக்கும் என்புழி, தந்தை உவத்தற்குச் சாத்தன் கை எழுதுமாறு வல்லனும் வினை காரணமாதலின், சாத்தன் கையெழுதுமாறு வல்லனாதல் வினைக்காரணம் என்பதும் ஆம்.

'நாணால் உயிரைத் துறப்பர்' – உயிர் துறத்தல் நாணைக் காத்தற்பொருட்டாதலின், உயிர் துறத்தலுக்கு நாண் நிமித்த காரணம் ஆயிற்று.

குயவனால் குடம் செய்யப்பட்டது என்பதும் அது.

நெய்யால் எரியை அவித்தல்.

கௌவையால் காமத்தை அவித்தல்.

- இத்தொடர்களில் எரியை வளர்க்கும் நெய்யையும் காமத்தை வளர்க்கும் அலரையும் அவற்றை அவித்தற்குக் கருவியாகக் கோடல் வேற்றுமைக் காரணமாம்.

இறைவனால் உலகம் உள்ளது - உலகத்தின் உண்மைக்கு இறைவனாகிய வினைமுதல் காரணமாதல் காண்க.

இப்பருவம் காரத்தின் வெய்ய எந்தோள் - முன்புச் சந்தனச் சாந்துபோலக் குளிர்ச்சி தந்த என் தோள்கள் இப்பொழுது காரமருந்தைப்போல எரிச்சலைத் தருகின்றன என்பதனால் தோள் வெய்யவாதலுக்குக் காரணம் இப்பருவம் எனல் காலக் காரணம்.

'வனைந்தான் என்புழிக் குடமாகிய மண் முதற்காரணம்.

தண்டசக்கரம் முதலிய கருவிகள் துணைக்காரணம்.

அறிவாலாகிய காட்சி - அறிவு - ஞாபகஏது.

மண்ணாலாகியகுடம் - மண் - காரகஏது.

நடந்தான் என்பது நடத்தலைச்செய்தான் என்பதாகலின், பலவேறு வினைகளிலும் பொதுமையின் நிற்கும் புடைபெயர்ச்சி யாகிய தொழில் நடத்தற்கு முதற்காரணம் ஆதலின் அதனை வினைக்காரணம் என்க.

நடந்தான் சாத்தன் என்புழி, நடத்தல் தொழிலுக்குச் சாத்தன் நிமித்தகாரணம்'. -இவை நன்னூல் விருத்தியில் காணப்படும் செய்திகள். ந-297.] 22

## கருவிக்குப் புறனடை

35. கருவியை இன்னும் கழறின் பெருகும். 23

## கொள்வோனின் வகைகள்

36. †கேளாது ஏற்றல் கேட்டே ஏற்றல்
ஏலாது ஏற்றல் ஈவோன் ஏற்றல்
உயர்ந்தோன் ஏற்றல் இழிந்தோன் ஏற்றல்
ஒப்போன் ஏற்றல் உணர்வுஇன்று ஏற்றல்
விருப்பாய் ஏற்றல் வெறுப்பாய் ஏற்றல்
ஆதியாப் பலவும் அறைந்தனர் கொள்வோன்.

[வி-ரை: இவ்வாசிரியர் கொள்வோனுக்கு வகைகள் பத்துக்கூறி, 'ஆதி' என்ற மிகையால் நான்கனைக் கூட்டிக் கொள்வோன் விரி பதினான்காக்கினர். வீரசோழிய நூலார் ஆர்வக்கோளி, கிடப்புக்கோளி, இரப்புக்கோளி (விருப்பாய் ஏற்றல், கேளாது ஏற்றல், கேட்டே ஏற்றல்) என்ற மூவகையே குறிப்பிட்டார் (40). பிரயோக விவேக நூலார் தம் 13ஆம் காரிகையுரையுள் கேளாது ஏற்றல், கேட்டே ஏற்றல், விருப்பாய் ஏற்றல், ஈவோன் ஏற்றல் என்ற நான்கனையே குறிப்பிட்டுள்ளார்.]

எ-டு:

ஆவிற்கு நீர் விட்டான் - கேளாது ஏற்றல்.
வறியார்க்கு ஈந்தான் - கேட்டே ஏற்றல்.
மாணாக்கனுக்கு அறிவைக் கொடுத்தான் - ஏலாது ஏற்றல்.
தனக்குச் சோறு இட்டான்.
தனக்கு அரிசி கொடுத்தான்.
'அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு'. -கு. 847
-இவை ஈவோன் ஏற்றல்.

அரனுக்குக் கண் அலர் கொடுத்தான் அரி - உயர்ந்தோன் ஏற்றல்.
அரிக்குச் சக்கரம் கொடுத்தான் அரன்-இழிந்தோன் ஏற்றல்.
சோழற்கு விருந்து கொடுத்தான் சேரன்-ஒப்போன் ஏற்றல்.

---

† நன்னூல் 298 முனிவர் உரை.

சோற்றிற்கு நெய் விட்டான்.

நீர்க்கு வாசம் ஊட்டினன்.

வாளிற்கு உறை வழங்கினன்.

தண்டிற்குத் தங்கம் கட்டினன்.

சுவர்க்குச் சித்திரம் எழுதினன்.

- இவை உணர்வு இன்றி ஏற்றல்.

மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தான் ஆரியன்.

- விருப்பாய் ஏற்றல்.

கள்ளனுக்குக் கசையடி கொடுத்தான் அரசன்.

- வெறுப்பாய் ஏற்றல்.

'ஆதி' என்றதனால்,

மருகனுக்கு மகட் கொடுத்தான் - வழக்கு;

மகனுக்கு அரசு கொடுத்தான் - உரிமை;

அரசற்குத் திறை கொடுத்தான் - அச்சம்;

தந்தை தாய்க்குத் திதி கொடுத்தான் - பாவனை;

-எனவும் வரும்.

[வி-ரை: ஆ தனக்கு நீர் வேண்டும் என்று கேளாமலே, விட்ட நீரைத் தான் ஏற்றல் கேளாது ஏற்றலாம்.

முக்கண் மூர்த்திக்குப் பூ இட்டான் முதலியன பிரயோக விவேக எடுத்துக்காட்டுக்கள். (13)

'தேவர்க்குப் பூ இட்டான் என்புழி, தேவர் தமக்குப் பூ வேண்டும் என்று இரந்திலாமையானும், இல்வாழ்வானுக்கு இயல்பு ஆதலானும் கிடப்புக்கோளி ஆயிற்று. செய்க்கு நீர் பாய்ச்சினன், ஆவுக்கு நீர் கொடுத்தான் என்பனவும் அது' -வீரசோழியம் 40 உரை.

வறியார்க்கு ஈந்தான் - வறியார் இரந்தே பெறுதலின் கேட்டே ஏற்றலாயிற்று. 'வறியார்க்கு ஒன்று ஈதலே ஈகை' (கு. 221) இரப்பார்க்கு ஒன்று ஈதல் - என்றே பிரயோக விவேகமும் எடுத்துக்காட்டுத் தந்துள்ளது (13). 'அந்தணர்க்குப் பொன் கொடுத்தான் அரசன் என்புழி, அந்தணர் வேண்டும் என்று இரந்து பெறுதலின் இரப்புக்கோளி ஆயிற்று. இரவலர்க்குப் பிச்சையிட்டான் என்பதும் அது'-வீரசோழியம் 40 உரை.

மாணாக்கனுக்கு அறிவைக் கொடுத்தான் என்புழி, ஏனைய கொடை கொடுப்பானைவிட்டுக் கொள்வான் கண்ணேயே செல்வது போல, அறிவு ஆசிரியனை விடுத்து மாணாக்கன்கண்ணேயே சென்றுவிடாமையின், இஃது ஏனைய ஏற்றல் போலாத ஏலாது ஏற்றல் எனப்பட்டது. இச்செய்தியைச் சேனாவரையர் முதலாயி னாரும் 'நான்காகுவதே' என்னும் நூற்பா (75) உரையுள் குறிப்பிட் டுள்ளனர்.

தனக்குச் சோறிட்டான் முதலியன கொடுப்பானும் கொள்வா னும் ஒருவனேயாதலின் ஈவோன் ஏற்றல் என்றார்.

'அருமறை – ... – தனக்கு' என்பது அபேதத்தில் வந்த நான்காவது' என்று பிரயோகவிவேகமும் (13) குறிப்பிடும்.

ஆசிரியர் சிவனடி பரவும் செம்மையர் ஆதலின், அவர் கருத்தான் உயர்ந்தோன் ஏற்றல், இழிந்தோன் ஏற்றல் என்பன கொள்ளப்படும்.

சோழற்கு விருந்து கொடுத்தான் சேரன் - கொடுப்பானும் கொள்வானும் ஒத்த தகுதியினர் என்பது.

நீர்க்கு வாசம் ஊட்டினன் முதலியவற்றில் ஏற்கும் பொருள் இது வேண்டும் என்று கேட்கும் உணர்வு அற்ற அஃறிணைப் பொருளாய் இருத்தலானும், கொடைப் பொருளைத் தான் ஏற்றுச் சிறப்புறுதலானும் உணர்வின்றி ஏற்றல் எனப்பட்டது.

மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தான் ஆரியன் - இவ்வாசிரியர் காலத்தில் மாணாக்கர்மாட்டுத் தவறு காணின் அவரை ஒறுத்தும் நல்வழிப்படுத்தலை ஆசிரியர் விரும்பினர் ஆதலானும், ஆசிரியர் தரும் ஒறுப்புக்களையும் மாணாக்கர்கள் விருப்போடு ஏற்றுத் திருந்தினர் ஆதலானும் இவ்வெடுத்துக் காட்டு விருப்பாய் ஏற்றலுக்குத் தரப்பட்டது. பிரயோக விவேகத்தின்கண்ணும் (13) இவ்வெடுத்துக்காட்டே உள்ளது.

'அருந்தவர்க்கு ஊண் கொடுத்தான் என்புழி, அருந்தவர் ஆர்வத்தோடு கொண்டமையானும், கருத்தா ஆர்வத்தோடு கொடுத்தமையானும், ஆர்வக்கோளி ஆயிற்று. விருந்தினர்க்கு இடம் கொடுத்தான் என்பதும் அது' - வீரசோழியம் 40 உரை.

கள்ளன் வேறுவழியின்றிக் கசையடியை வெறுப்போடு ஏற்பான்.

உடன் பிறந்தாள் மகனுக்குத்தன் மகளை மணம் செய்து கொடுத்தல் அக்கால வழக்குப்பற்றி அமைந்தது. மகன் தந்தையின் அரசைத் தன் பிறப்பு உரிமையால் கொள்ளும் மரபு இருந்தது. அரசர்க்குத் திறை கொடுத்தல், தாராக்கால் ஒறுப்பர் என்ற அச்சத்தால் நிகழ்வது. பெற்றோருக்குத் திதி கொடுக்குங்கால், வேறு ஒருவனைத் தன் தந்தையாகவும் தாயாகவும் அந்நேரத்தில் மந்திர விதியால் கற்பனை செய்துகொண்டு கொடுப்பதாகலின், பாவனையாற் கொடுத்தல் எனப்பட்டது. 24

## கொள்வோனது புறனடை

37. கொள்வோனை இன்னும் கூறின் பெருகும். 25

## நீக்கத்தின் வகைகள்

38. *நிலைத்திணை இயங்கு திணைபண்பு ஆதியின்
நீக்கம் வருமென நிகழ்த்தினர் புலவர்.

[வி-ரை: ஐந்தாவதன் நீக்கப் பொருண்மை நிலைத்திணை, இயங்குதிணை, பண்பு என்பனவற்றை நிலைக்களமாகக் கொண்டு

* நன்னூல் 299 முனிவர் உரை.

தோன்றும். அவதி (எல்லை) சலம், அசலம் என்ற இரண்டனையே அடிப்படையாகக் கொண்டு தோன்றும் என்று வீரசோழியம் (40) கூறும். சலம், அசலம், எல்லை, என்பனவற்றின்கண் ஐந்தாவது வரும் என 11ஆம் காரிகையிலும், உவமை, சீமை ஏது என்பன வற்றின்கண்ணும் பஞ்சமி வரும் என 15ஆம் காரிகையிலும் பிரயோக விவேக உரை குறிப்பிடும்.]

எ-டு:

மலையின் இழிந்தான் - மலை - நிலைத்திணை.
யானையின் இழிந்தான் - யானை - இயங்குதிணை.
சிறுமையின் நீங்கிய (கு-98) - சிறுமை - பண்பு.

'ஆதி' என்றதனால் 'குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி' (கு-502) 'ஐயத்தின் நீங்கி' (கு-353) எனவும் வரும்.

[வி-ரை: குற்றத்தின் நீங்கி - குற்றத்தின் எல்லையிலிருந்து புறத்தே நீங்கி, ஐயத்தின் நீங்கி - ஐயத்தின் எல்லையிலிருந்து புறத்தேநீங்கி எனப் பொருள்பட்டு ஐந்தாவது எல்லைப் பொருளில் வந்தவாறு. சிறுமையின் நீங்கிய என்பதும் எல்லைப் பொருளோடு கூடிய நீக்கம் என்னும் பிரயோக விவேகம் (11 உரை).] 26

## நீக்கத்திற்குப் புறனடை

39. நீக்கம் இன்னும் நினைக்கின் பெருகும். 27

## குறை என்பதன் வகைகள்

40. ஒற்றுமை வேற்றுமை உரைக்கப் படும்குறை
ஒற்றுமை ஆவதுஓர் பொருளே யாகும்;
ஒன்றுப் தோன்றல் உரிமையாய்த் தோன்றல்
வேறாய்த் தோன்றல் எனவேற் றுமையாம்;
ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் சினைகுணம் தொழில்என
ஓர்அறு வகையாம் ஒன்றாய்த் தோன்றல்;
பொருள்இடம் காலம் இருவகை நூல்என
உரிமையாய்த் தோன்றல் உரைக்கப் படுமே;
வேறாய்த் தோன்றல் வேறுஇடத் தும்செலும்
நிலைமையில் உடைமைகள் பலவும் ஆகும்.

[வி-ரை : ஒற்றுமைக்குறை, வேற்றுமைக்குறை என ஆறுவது இரு பெரிய பகுப்புக்களை உடையது. ஒற்றுமைக்குறைக்கண் உட்பகுப்புக்கள் இல்லை. வேற்றுமைக்குறை ஒன்றாய்த் தோன்றல்-உரிமையாய்த் தோன்றல் - வேறாய்த்தோன்றல் என்ற மூன்று உட்பிரிவுகளை உடையது. அவற்றுள், ஒன்றாய்த் தோன்றல் ஒன்றன்கூட்டத் தற்கிழமை - பலவின்ஈட்டத் தற்கிழமை - திரிபின்ஆக்கத் தற்கிழமை - சினைத் தற்கிழமை - குணத்தற்கிழமை - தொழில்தற்கிழமை என அறுவகைப்படும். உரிமையாய்த் தோன்றும் பிறிதின்கிழமை - பொருட் பிறிதின் கிழமை - இடப் பிறிதின் கிழமை - காலப் பிறிதின் கிழமை ஒருவர் இயற்றிய நூல் பற்றிய பிறிதின் கிழமை - ஒருவரைப்பற்றி இயற்றிய நூல் பற்றிய பிறிதின் கிழமை என ஐவகைப்படும். வேறாய்த் தோன்றும் பிறிதின் கிழமை கை மாறும் பொருள்கள் பலவும் பற்றிப் பல வகைப்படும். வீரசோழியத்துள் ஆறாம் வேற்றுமை பற்றிய விரிவான செய்தி எதுவும் இல்லை. பிரயோக விவேகம் 'சம்பந்த சட்டியிலே அபேதம் ஒருவகையேயாம், பேதசட்டி - சமவாய சம்பந்தம், சையோக சம்பந்தம், சரு சம்பந்தம் என மூவகையாம். சமவாய சம்பந்தம் சினைகுணம் தொழில் சாதி விகாரம் என ஐந்தாகும். சையோக சம்பந்தம் பொருள் இடம் காலம் என மூவகைப்படும். இவை இரண்டும் அல்லாச் சருபம் யாதாயினும் ஒரு நிமித்தமாகும்' என்று 17ஆம் காரிகையுரையுள் குறிப்பிட்டுள்ளது பெரும்பாலும் இலக்கணக் கொத்தின் கருத்தை ஒத்ததாகும்.]

எ-டு: என்உயிர், இராகுத்தலை - இவை ஒற்றுமை. (தானும் உயிரும் வேறல்ல; இராகுவும் தலையும் ஒரே பொருளைக் குறிப்பன. இரு சொற்களும் ஒரே பொருளைக் குறித்தலின் ஒற்றுமைக்கிழமை எனப்பட்டன.)

எள்ளது குப்பை - ஒன்றன் கூட்டம்;
படையது குழாம் - பலவின் ஈட்டம்;
கோட்டது நூறு - திரிபின் ஆக்கம்;
சாத்தனது கண் - உறுப்பு;
நிலத்தது அகலம் - பண்பு;
சாத்தனது வரவு - தொழில்;

-என ஒன்றாய்த் தோன்றல் வகை ஆறும் முறையே காண்க.

முருகனது வேல் - பொருள்;
முருகனது குறிஞ்சி - இடம்;
வெள்ளியது ஆட்சி - காலம்;
சம்பந்தனது தமிழ் - இயற்றிய நூல்;

சம்பந்தனது பிள்ளைத்தமிழ்-சம்பந்தன் பெயரால் இயற்றப் பட்ட நூல்.

-என உரிமையாய்த் தோன்றல் வகை ஐந்தும் முறையே காண்க.

சாத்தனது பசு, சாத்தனதுசெறு, சாத்தனதுபொன் என வேறாய்த்தோன்றல் வந்தமை காண்க. இவை முன் ஒருவர்க்கு உடைமையாயும், பின்வேறு ஒருவர்க்கு உடைமையாயும் வருதலின் 'நிலைமையில் உடைமை' என்றும்.

இம்மூவகை வேற்றுமையை வடநூலார் நாற்பெரு பேதமாக்குவர்.* 28

## குறைக்குப் புறனடை

41. குறையை இன்னும் கூறின் பெருகும். 29

## இடத்தின் வகைகள்

42. உரிமை இருவகை ஓரிடம் எங்கும்
எனநான்கு என்றே இயம்புவர் இடனே;
காலம் திக்குஆ காயம் வெயில்இருள்
நிலம்அரு உருமுதல் நிகழ்த்தப்படும்இடம்:
கூட்டிப் பிரித்தல் பிரித்துக் கூட்டல்
இருவரின் முடியும் ஒருவினைத் தொழிற்பெயர்
எனமூ வகைப்படும் இடம்அல் லாஇடம்;
இடத்தின் நிகழ்பொருள் இருவகை: அரு,உரு.

[வி-ரை: உரிமை, ஒற்றுமையிடம், கூட்டஇடம், எங்கும் பரத்தல் என இடம் நான்கு வகைப்படும். இடம், காலம், திக்கு, ஆகாயம், வெயில், இருள், நிலம், அரு, உரு முதலிய நிலைக் களமாகும் இடங்களாம். இடம் அல்லா இடம்- கூட்டிப்பிரித்தல்.

* நன்னூல் 300. முனிவர் உரையுள் இந்நூற்பா உரைச் செய்தி உளது.

பிரித்துக்கூட்டல், இருவரின் முடியும் ஒருவினையின் தொழிற்-பெயர் என மூவகைப்படும். இடத்தில் நிகழும் பொருள் உருவுடையதாகவும் உருவற்றதாகவும் இருக்கும்.

வீரசோழியம் இடத்தை இவ்வாறே நான்கு வகையாகப் பகுத்து உரிமையைப் புலன் ஆதாரம் என்றும், ஒற்றுமை யிடத்தைச் சேர்வு ஆதாரம் என்றும், கூட்டஇடத்தை அயல் ஆதாரம் என்றும், எங்கும் பரந்தலைக் கலப்பு ஆதாரம் என்றும் கூறும் (41). உரையுள் சேர்வு ஆதாரம் அயல ஆதாரம் இவற்றின் விளக்கத்தில் உள்ள திரிபு குறிந்துணரத்தக்கது. பிரயோகவிவேகம், 13ஆம் காரிகை உரையில் இடத்தை இந்நூல் போலவே விடயம், சமவாய உபச்சிலேடம், சையோக உபச்சி-லேடம், அபிவியாபகம் என்று பிரித்து விளக்கி, ஆதார ஆதேயங்கள் அருவாகவும் உருவாகவும் வருதலைக்குறிப்பிட்டு, இடமல்லாவிடத்தைக் கூட்டிப்பிரித்தல், பிரித்துக்கூட்டல் எனப் பகுத்து, 16ஆம் காரிகை உரையில் இருவரின் முடியும் ஒரு வினையை விளக்கியுள்ளது.

எ-டு:

நிலத்தின்கண் தேர் ஓடுகின்றது;
கடற்கண் நாவாய் ஓடுகின்றது;
ஆகாயத்தின்கண் பருந்து பறந்தது;
காட்டின்கண் புலி வாழ்ந்தது;

-என உரிமையும்,

[தேருக்கு நிலமும், நாவாய்க்குக் கடலும், பருந்துக்கு ஆகாயமும், புலிக்குக் காடும் உரிமையாதல் காண்க.]

மதிக்கண் மறு;
கையின்கண் விரல்;
குன்றின்கண் குவடு;
நெற்றின்கண் விழி;
ஆண்டின்கண் இருது;
நாளின்கண் வைகறை;

-என ஒற்றுமை இடமும்,

[மதியிடத்து மறுவும், கையிடத்து விரலும், குன்றிடத்துக் குவடும், நெற்றியிடத்து விழியும், ஆண்டிடத்து இருதுவும், நாளிடத்து வைகறையும் பிரிக்கமுடியாத தொடர்பு கொண்டுள்ளமை காண்க.

ஊர்க்கண் இருந்தான்;

தேர்க்கண் இருந்தான்;

-எனக் கூட்ட இடமும்,

[ஊரின்கண்ணும் தேரின்கண்ணும் இருப்பவன் ஊரைவிட்டும் தேரைவிட்டும் பிரிந்து நீங்குதல் கூடுமாதலின், அவன் ஊரோடும் தேரோடும் பிரிக்கக்கூடிய தொடர்பு கொண்டுள்ளமை காண்க.]

மணியின்கண் ஒளி;

உயிரின்கண் உணர்வு;

பாலின்கண் சுவை;

பாலின்கண் நெய்;

தீயின்கண் சூடு;

நீரின்கண் சீதம்;

-என எங்கும் பரத்தலும்,

[மணியிடத்து ஒளி, உயிரிடத்து உணர்வு, பாலிடத்துச் சுவை, நெய், தீயிடத்துச் சூடு, நீரிடத்துக் குளிர்ச்சி இவை அவ்வப் பொருளுள் யாண்டும் கலந்துள்ளமை காண்க.]

'உடையான் அரசருள் ஏறு' - கு. 381

'அவற்றுள், அஇஉ எ ஒக்குறில் ஐந்தே' - ந 64

-எனக் கூட்டிப் பிரித்தலும்,

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்' -கு. 50

'ஒத்த(து) அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும்' -கு. 214

-எனப் பிரித்துக் கூட்டலும்,

'புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்' -கு. 124

தட்டுப்புடைக்கண் வந்தான்;

புல்லுதற்கண் வேர்வை வந்தது;

பொருதற்கண் மழை வந்தது;

சூதாடற்கண் தூக்கம் வந்தது;

-என இருவரின் முடியும் ஒருவினைத்தொழிற் பெயரும் வரும்.†

[வி-ரை: ஒருவனை அரசரோடு கூட்டிப் பின் அவர்களுள் ஏறு என்று பிரித்தலும், அஇஉஒ என்பனவற்றை உயிர்களோடு கூட்டிக் கணக்கிட்டுப் பின் குறில் எனப் பிரித்தலும் கூட்டிப் பிரித்தல் ஆமாறு காண்க. 'அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை, நின்றாரின் பேதையார் இல்' -கு. 142 என்ற எடுத்துக்காட்டினையும் பிரயோக விவேகத்துள் (13) காணலாம்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவனை மக்களிடமிருந்து பிரித்துத் தெய்வத்தோடு சேர்த்தலும், ஒத்தது அறியாதானை உயிருடையாரிடமிருந்து பிரித்துச் செத்தாரோடு சேர்த்தலும் பிரித்துக் கூட்டல் ஆமாறு காண்க.

தட்டுப்புடை -இருவர் செய்யும் போர்.

புல்லுதல் - இருவர் தொழிற்படும் செயல்.

பொருதல், சூதாடல் - ஒருவருக்கு மேற்பட்டவர் தொழிற்படும் செயல்.

புலவி - தலைவன், தலைவியரிடையே நிகழும் நிலாம், புலவி, தட்டுப்புடை, புல்லுதல், பொருதல், சூதாடுதல் என்பன இருவரின் முடியும் ஒருவினைத் தொழிற் பெயராமாறு காண்க.] 30

## இடத்திற்குரி புறனடை

43\. இடத்தின் இலக்கணம் இன்னும் பலவாம். 31

---

†நன்னூல்301. முனிவர் உரையில் இந்நூற்பாச் செய்திகள் உள.

இனி, முற்கூறிய பொது இலக்கணங்களுள் ஒப்பாய் நிற்கும் உருபுகளும், ஒரு பொருட்கே பல உருபுகள் வருவனவும், வேறு உருபுகள் வருவனவும் ஆகிய மூவிலக்கணமும் ஒருங்கே தோன்ற வினைமுதல் முதலாகச் சிறப்புச் சூத்திரம் செய்கின்றும்.

உருபு நோக்கிய சொல் பல பொருள்படுதலைத் தொல்காப்பியர் 'பொருண்மை சுட்டல்' (சொ. 67) என்னும் சூத்திராதிகளானும், நன்னூலார் 'வினைபெயர் விளுக்கொளல்' (ந. 295) என்னும் சூத்திராதிகளானும் விரித்தனர். அதனுல் விரித்திலம் எங்க.

## வினைமுதற்கண் பல உருபு வருதல்

44. †ஒன்று மூன்றுநான்கு ஆறுஎனும் உருபொடு
வருமே வினைமுதல் எனவகுத் தனரே.

எ-டு:

அவர் செய்தார்-முதல் வேற்றுமை;

அவரால் செய்யத்தகும் அக்காரியம்-மூன்றுவது;

அவர்க்குச் செய்யத்தகும் அக்காரியம்-நான்காவது;

'இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்' -(தொ.சொ 33)

'இன்னென வரூஉம் வேற்றுமை உருபிற்கு
இன்என் சாரியை இன்மை வேண்டும்' -(தொ.எ. 131)

- இவையும் நான்காவது;

அவரது வரவு - ஆறுவது;

- என முறையே காண்க.

[வி-ரை: உருபு ஏற்ற சொற்கள் மூன்றுவது நான்காவது ஆறுவது வேற்றுமைகளைச் சுட்டி நிற்பினும், போந்த பொருளால் வினைமுதல் ஆமாறு காண்க; காரியம் செய்வார் அவர் ஆகலானும், வேண்டுவது கிளவி ஆகலானும், வேண்டுவது உருபு

†நன்னூல் 317. முனிவர் உரை.

ஆகலானும், வருவார் அவராகலானும், செய்வாரும் ஏனையும் உருபும் வருவாரும் வினைமுதற் பொருளுடையவாதல் உணரப்படும்.] 32

## செயப்படுபொருட்கண் பல உருபு வருதல்

45. †எல்லா உருபொடும் செயப்படு பொருள்எழும்.

எ-டு:

சோறு அடப்பட்டது - முதலாவது;

சோற்றை அட்டான் - இரண்டாவது;

அரிசியால் சோறாக்கினான் மூன்றாவது;

அவட்குக் கொள்ளும் இவ்வணிகலம் - நான்காவது;

பழியின் அஞ்சும் - ஐந்தாவது;

நூலது குற்றங் கூறினான் - ஆறாவது;

தூணின்கட் சார்ந்தான் - ஏழாவது;

- என முறையே காண்க.

[வி-ரை: சோறு அடப்பட்டது என்பது தெரிநிலைச் செயப்படுபொருளாம். அரிசியைச் சோறாக்கினான், அவளைக் கொள்ளும் இவ்வணிகலம், பழியை அஞ்சும், நூலைக்குற்றம் கூறினான், தூணைச் சார்ந்தான் என ஏனையவற்றிற்கு இரண்டன் உருபு புணர்த்து அவை செயப்படுபொருளாதல் கண்டு செயப்படு பொருள் எல்லா உருபொடும் வருமாறு உணரப்படும்.] 33

எ-டு:

## கருவிக்கண் பல உருபு வருதல்

46. *ஒன்று மூன்றுநான்கு ஐந்துஆறு உருபொடு
கருவி வரும்எனக் கருதினர் புலவர்.

கண்காணும் - முதல்;

கண்ணாற் காண்பன் - மூன்றாவது;

---

†நன்னூல் 317. முனிவர் உரை.

* நன்னூல் 317. முனிவர் உரை.

கண்ணிற்குக் காணலாம் - நான்காவது;

கண்ணிற் காணலாம் - ஐந்தாவது;

கண்ணது காட்சி - ஆறாவது;

-என முறையே காண்க.

[வி-ரை: இவ்வெடுத்துக்காட்டுக்கள் கண்ணால் என்பதனை நிலைமொழியாகக் கொள்ளினும் அமையுமாறு நோக்கிக் கருவிக் கண் ஏனைய உருபுகள் வருமாறு உணரப்படும்.] 34

## கொள்வோன்கண் பலஉருபு வருதல்

47. †எல்லா உருபொடும் கொள்வோன் எழுமே.

எ-டு:

'இரப்பவர் என்பெறினும் கொள்வர்' -முதல்;

'செய்யவள் தவ்வையைக் காட்டி விடும்' -(கு. 167)

- இரண்டாவது

நாகரால் பலி - மூன்றாவது;

நாகர்க்குப் பலி - நான்காவது;

நாகரின் அன்பு செய்தான் - ஐந்தாவது;

நாகரது பலி - ஆறாவது;

நாகர்கண் அன்பு செய்தான் - ஏழாவது;

-என முறையே வரும்.

[வி-ரை: இரப்பவர் நான்காவதற்குரிய கோடற்றொழிலை ஏற்றலானும், தவ்வைக்குக் காட்டிவிடும் என இரண்டாவது நான்காவதாதலானும், நாகர்க்குப் பலி என மூன்றாவதும் ஆறாவதும் நான்காவது ஆதலானும், நாகர்க்கு அன்பு செய்தான் என ஐந்தாவதும் ஏழாவதும் நான்காவது ஆதலானும் நான்காவதன் பொருட்கண் ஏனைய உருபுகளும் வருமாறு உணரப்படும்.] 35

---

†நன்னூல் 317. முனிவர் உரை.

## நீக்கத்தின்கண் உருபு பல வருதல்

48. †இரண்டுநான்கு ஐந்தொடும் ஏழுமே நீக்கும்.

எ-டு:

மதுரையை நீங்கினான் - இரண்டாவது;

மதுரைக்கு வடக்கு சிதம்பரம் - நான்காவது;

மதுரையின் வடக்கு சிதம்பரம் - ஐந்தாவது;

-என வரும்.

[வி-ரை: மதுரையின் நீங்கினான், மதுரையின் வடக்கு என இரண்டாவதும் நான்காவதும் ஐந்தாவது ஆதல் கொண்டு ஐந்தாவதன் பொருட்கண் ஏனைய இரு வேற்றுமையும் வருமாறு உணரப்படும்.] 36

## குறையின்கண் பல உருபு வருதல்

49. *நான்குஐந்து ஆறுஏ ழொடுகுறை நடக்கும்.

எ-டு:

சாத்தனுக்கு மகன் - நான்காவது;

மரத்தின் நீங்கின கொம்பு - ஐந்தாவது;

சாத்தனது கை - ஆறாவது;

உயிரின்கண் உணர்வு - ஏழாவது;

-என முறையே வரும்.

[வி-ரை: சாத்தனுடைய மகன், மரத்தினது நீங்கின கொம்பு, உயிரினது உணர்வு என ஆறாவது விரித்துநோக்கி ஆறாவதன் பொருட்கண் ஏனைய நான்கு ஐந்து ஏழு ஆம் வேற்றுமைகள் வருமாறு காண்க.] 37

---

†நன்னூல் 317 முனிவர் உரை

*நன்னூல் 317. முனிவர் உரை

## இடத்தின்கண் பல உருபு வருதல்

50. †ஒன்றுஇ ரண்டுநான்கு ஏழொடு இடம்எழும்.

எ-டு:

தூண் போதிகை தொட்டது - முதல்;

தூணைச் சார்ந்தான் - இரண்டாவது;

இன்றைக்கு, நாளைக்கு, பகலைக்கு, அந்திக்கு, சந்திக்கு, மாலைக்கு, காலைக்கு, ஊர்க்கு, வீட்டிற்கு வருவன் - நான்காவது;

தூணின்கண் சார்ந்தான் - ஏழாவது;

என முறையே காண்க.

[வி-ரை: தூணின்கண் போதிகை தொட்டது, துணின்கண் சார்ந்தான், இன்றைக்கண், நாளைக்கண், பகற்கண், அந்திக்கண், சந்திக்கண், மாலைக்கண், காலைக்கண், ஊர்க்கண், வீட்டின்கண் வருவன் என ஏழாவது விரித்துநோக்கி, ஏழாவதன் பொருட்கண் ஏனைய முதல் இரண்டு நான்குஆம் வேற்றுமைகள் வருமாறு காண்க. பகலை என்பது-பகல் என்பதன் வழக்குச்சொல்.] 38

இனி, முற்கூறிய பொது இலக்கணங்களுள் உருபும் உரிமையாய் நிற்றலும் ஆகிய ஈரிலக்கணமும் ஒருங்கேதோன்றவும்,உருபுகள் தமக்கு உரிய பொருள் அல்லனவற்றையும் உணர்த்தல் தோன்றவும், வினைமுதல் முதலாகச் சிறப்புச்சூத்திரம் செய்கின்றாம்.

## உருபு பொருள்தரும் வரையறை

51. ஓர்உரு பிற்குஓர் பொருளே உரிமை
வேறு பொருளையும் விளம்பும் என்க.

இவ்விரு விதியும் தத்தம் சிறப்புச்சூத்திரத்துட் காண்க.

---

†நன்னூல் 317. முனிவர் உரை.

[வி-ரை: ஓர் உருபிற்கு ஓரே பொருளே உரிமையான பொருளெனினும், நாளடைவில் அது வேறு பொருளையும் கொடுத்தல் மொழிவளர்ச்சியால் ஏற்பட்ட பெருக்கமாம் என்பது.]

## எழுவாய் பிறிதுபொருளும் தருதல்

52. வினைமுதல் அன்றியும் விளம்பும் எழுவாய்.

எ-டு:

மாடம் செய்யப்பட்டது - (இது செரிநிலைச் செயப்படு பொருள்.) 40

## செயப்படுபொருள் பிறிது பொருள்தருதல்

53. செயப்படு பொருளைத் தெளித்தலும் அன்றி
வேறு பொருளையும் விளக்கும் ஐயே.

எ-டு:

வீட்டை விரும்பினன்,

[வி-ரை: செயப்படுபொருளாவது வினைமுதல் தொழிற் பயன் உறுவதாம். வினைமுதல் சாத்தன்; அவன் தொழில் விரும்புதல்; அதன் பயனை உறுதல் வீடு. வீடாவது நல்வினை தீவினையாகிய தொழில்களிலிருந்து விடுதலை பெறுதலாம். வீடு செயலற்றநிலை; புடைபெயர்ச்சி ஆகிய தொழிலையும் நீக்குதலே வீடாதலின் வீட்டை விரும்பினன் என்ற தொடரில் ஐ உருபு செயப்படுபொருளைச்சுட்டாது, செயலற்ற ஒன்றைச் சுட்டுவது காண்க.] 41

## மூன்றும் உருபு பிறபொருளும் தருதல்

54. கருவி கருத்தா உடன்நிகழ்வு அன்றியும்
மூன்றும் உருபுகள் தோன்றும் பலவினும்.

எ-டு:

மலையொடு பொருத மால்யானை - வினையின்மை; (பொருதல் யானைக்கு அல்லது மலைக்கு இன்மையின்.)

தொடியொடு தொல்கவின் வாடினதோள் (கு. 1235) – வேறு வினை; (தொடிக்குத் தோள்போல வாடுதல்தொழில் இன்றி நெகிழ்தல் தொழிலே உண்மையின்).

'பாலொடு தேன்கலந் தற்றே' (கு. 1121) – மயக்கம்; (இரண்டும் ஒன்றோடொன்று பின் பிரித்தல் இயலாதவாறு கலத்தலின்.)

மதியொடு ஒக்கும் முகம் – ஒப்பு;

விலங்கொடு மக்கள் அனையர் (கு. 410) – ஒப்பு அல்ஒப்பு; (ஒப்புமை கூறத்தகாத விலங்கையும்மக்களையும் ஒப்பிட்டமையின்.)

'எழுத்தொடு புணர்ந்த சொல் ஆகும்மே' (தொ.சொ. 401)– ஒற்றுமை; (சொல் எனத் தனித்த ஒன்று இன்றி எழுத்தொடு கூடியே சொல் அமைதலின்.)

[வி–ரை: இச்செய்திகள் பிரயோகவிவேகத்து 16ஆம் காரிகை உரையிலும் உள.] 42

## நான்காம் உருபு பிறபொருளும் தருதல்

55. கொள்வோனை விட்டும் கு–பல பொருளாம்.

எ–டு:

சோற்றிற்கு அரிசி – ஆதி காரணகாரியம்;

கூழிற்குக் குற்றேவல் – நிமித்த காரணகாரியம்;

பூவிற்குப் போனான் – பொருட்பெயரின் பின் வினையெச்சப் பொருட்டாயிற்று. பூ வாங்குதற்கு என்பது பொருள்.)

உணற்கு வந்தான் – தொழிற்பெயரின் பின் வினையெச்சப் பொருட்டாயிற்று.

பிணிக்கு மருந்து – பொருட்பெயரின் பின் பெயரெச்சப் பொருட்டு.

உணற்குக் கருவி – தொழிற்பெயரின் பின் பெயரெச்சப் பொருட்டு

[வி-ரை: வினையெச்சப் பொருட்டு, பெயரெச்சப் பொருட்டு எனவே, சொல்பற்றி. நான்கன் உருபு ஏற்ற சொல் பெயராம் தன்மை மாறி வினையெச்சமோ பெயரெச்சமோ ஆகாது என்பது.

ஆதிகாரணம் - காரியத்தோடு தொடர்புடையது.

சோறாகிய காரியத்தோடு அரிசியாகிய காரணம் தொடர்பு கொண்டமையின் சோற்றுக்கு அரிசி என்பது ஆதிகாரண காரியமாயிற்று.

நிமித்தகாரணம் - காரியத்துக்கு நேரிடையாகக் காரண மாகாது ஏதோ ஒரு வகையான காரணமாவது.

அரிசியே சோறானாற்போலக் குற்றேவலே கூழாகாது. குற்றேவலால் கிட்டும் கூலியைக்கொண்டு கூழிற்கு வேண்டிய பண்டம் வாங்கப்படவேண்டுதலின், கூழிற்குக் குற்றேவல் என்பது நிமித்த காரணகாரியமாயிற்று.

பூவிற்கு - பூ என்ற பொருட்பெயர் இன்சாரியையும் நான்கன் உருபும் ஏற்றுப் 'பூவாங்குவதற்கு' என்னும் பொருள் பட்டுச் செயற்கு என்ற வாய்பாட்டு வினையெச்சம் போலப் போனான் என்ற வினைகொண்டு முடிதலின், நான்கன் உருபு பொருட் பெயரின் பின் வினையெச்சப் பொருட்டாயிற்று என்றார்.

உணற்கு - உணல் என்ற தொழிற்பெயர் நான்கன் உருபு ஏற்று உண்ணும் பொருட்டு என்ற பொருளில் உணற்கு என்றாகிச் செயற்கு என்னும் வாய்பாட்டு வினையெச்சம் போல வந்தான் என்று வினைகொண்டு முடிதலின், நான்கன் உருபு தொழிற் பெயரின் பின் வினையெச்சப் பொருட்டாயிற்று என்றார்.

அங்ஙனமே பிணி என்னும் பொருட்பெயரும், உணல் என்னும் தொழிற்பெயரும், குவ்வுருபு ஏற்று, பிணிக்கு வழங்கும், உணற்குப் பயன்படும் என்ற பெயரெச்சப் பொருளில், முறையே மருந்து, கருவி என்ற சொற்களைக்கொண்டு முடிந்தவாற்றைக் குறிப்பிட்டுள்ளார்.]

## இன் உருபு பிறபொருளும் தருதல்

56. நீக்கம் அன்றியும் நிகழ்த்தும் இன்னே.

எ-டு:

பித்தரின் பேதையார் இல் - இன் - ஒப்புப் பொருட்டு,
வேங்கடத்தின் தெற்கு }
குமரியின் வடக்கு } இன் - எல்லைப்பொருட்டு;
வாணிகத்தின் ஆயினான் - இன் - ஏதுப் பொருட்டு;

காக்கையின் கரிது களம்பழம் - இன் ஒப்பின்மையாகிய உறழ்ச்சிப் பொருட்டு.

[வி-ரை: ஐந்தாவதன் சிறப்பான பொருள் நீக்கமே; ஏனைய ஒப்பு, ஒப்பின்மை, எல்லை, ஏது என்பன நீக்கம்போல அத்துணைச் சிறப்புடையன அல்ல என்க. காக்கையின் கரிது - காக்கையை விடக் கரிது.]

## ஆறன் உருபு பிறிது பொருளும் தருதல்

57 குறையே அன்றியும் கூறும்ஆ றுவது.

எ-டு: வாளது வெட்டு. (இது வாளால் வெட்டிய வெட்டு எனக் கருவிப் பொருட்டாயவாறு காண்க.) 45

## ஏழன் உருபு பிறிது பொருளும் தருதல்

58. இடமே அன்றியும் இயம்புமஏ ழாவது.

எ-டு: அறிவின்கண் திரிவு. (இது அறிவினது திரிவு என ஆறுவதன் திரிபின்ஆக்கத் தற்கிழமைப் பொருட்டாயவாறு.) 46

## உருபு மயக்கம்

59. மாறுபட நிற்றல் வரம்பில என்ப.

[வி-ரை: உருபை ஏற்ற சொல்லும் உருபு நோக்கிய சொல்லும் தம்முள் பொருள் பொருத்தம்உறக் கூடாமல் மாறுபட

நிற்றல் பலவகையாக வரும், அங்ஙனம் வரும் இடங்களில் பொருள்படும் முறைமையை ஓர்ந்து உருபினை மாற்றிப் பொருள் கோடல் வேண்டும்.]

எ-டு:

'கிழங்கு மணற்கு ஈன்றமுளை' (அகநா. 212) - மணற்கண்,

'காலத்தினால் செய்த நன்றி' (கு. 102) - காலத்தின்கண்.

[வி-ரை இவற்றில் நான்கன் உருபும் மூன்றன் உருபும் கண் உருபாகப் பொருள் படுமாறு காண்க.] 47

## உருபும் பொருளும் மயக்கம்

60. உரிமைமுதல் மூன்றும் ஒருங்கே தோன்ற
நிற்கும் உருபுகள் சிலஉள நினைக்கின்.

எ-டு: பழியின் அஞ்சும், பழியை அஞ்சும், பழியால் அஞ்சும்.

'நினைக்கின்' என்றதனால் இரண்டு ஒருங்கே தோன்றலுமுள. மலையில் வீழருவி, மலையிலிருந்தான் என முறையே காண்க.

[வி-ரை: உரிமை முதல் மூன்றும் -இ.கொ. 17.

ஒருவன் வாழ்க்கையில் பழி ஏற்படாமல் வாழ்கிறான் என்ற கருத்தை இரண்டாம் உருபு, மூன்றாம் உருபு ஐந்தாம் உருபு என்பன தத்தம் பொருளைக்கொண்டு விளங்குகின்றன.

பழியை அஞ்சும் - அச்சத்திற்குப் பழி செயப்படுபொருள்.

பழியால் அஞ்சும் - அச்சத்திற்கு பழி கருவியாகிய ஏது.

பழியின் அஞ்சும் - அச்சத்திற்குப் பழி ஐந்தன் பொருளாகிய ஏது.

இவ்வாறு ஒரே கருத்தைப் பல வேற்றுமைகளும் தத்தம் வேற்றுமைப் பொருள் அமைய விளக்குதலும் உண்டு என்பது.

இல் என்பது ஐந்தன் உருபு; அது இல் என்ற ஏழன் உருபின் வேறுபட்டது. இரண்டும் வடிவில் ஒன்று; பொருளில் வேறு.

மலையில் வீழ் அருவி-இல்-ஐந்தன் உருபு நீக்கப் பொருளில் வந்தது.

மலையில் இருந்தான் - இல் - ஏழன் உருபு இடப்பொருளில் வந்தது.

ஒவ்வொரு வேற்றுமைக்கும் சிறப்பான உரிமைப் பொருள் கூறப்பட்டது. ஐந்தன் உருபும் ஏழன் உருபும் ஆகிய இல் - வடிவால் ஒன்று; பொருளால் வேறு. மூன்றுவதற்கும் ஐந்தாவ தற்கும் வரும் ஏது பொருளால் ஒன்று; உருபால் வேறு - எனக் கொள்க.]

## தடுமாறு உருபுகள்

61. தடுமாறு உருபுகள் தாம்சில உளவே.

எ-டு:

அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். -கு. 167

என்புழி ஒவ்வொரு நிலைக்களத்தும் ஐயுங் குவ்வும் பொருந்தும்.

[வி-ரை: உடையானைத் தவ்வைக்குக் காட்டிவிடும்;
உடையானுக்குத் தவ்வையைக் காட்டிவிடும்;

என்று உருபுகள் இடம் மாறி வருதல் காண்க.] 49

## உருபு நோக்கிய சொல் பற்றிய வரையறை

62. ஒன்றே வந்தும் இரண்டே வந்தும்
ஒன்றும் இரண்டும் உறழ்ந்தே வந்தும்
உருபுநோக் கியசொல் ஒருமூ வகையாம்.

எ-டு:

பாலைக் குடித்தான் (ஒன்றே வந்தது);

பாலைத் தயிராக்கினான்;

குடும்பத்தைக் குற்றம் மறைத்தான்;

அரிசியால் சோறாக்கினான்;

மருகனுக்கு மகட் கொடுத்தான்;

- எனவரும்.

இவற்றின்கண் உருபு நோக்கிய சொல் இரண்டாகியவாறு

ஆகாயத்தின்கண் பருந்து, ஆகாயத்தின்கண் பறந்த பருந்து;

குன்றின்கண் குவடு, குன்றின்கண் இருந்த குவடு;

மெத்தைக்கண் அரசன், மெத்தைக்கண் கிடந்த அரசன்;

வழிக்கண் தூதன், வழிக்கண் நடந்த தூதன்;

-என வரும். இவற்றின்கண் ஒரு கால் ஒன்றும் ஒரு கால் இரண்டும் முடிக்கும் சொல்லாக வந்தவாறு. 50

## உருபு நோக்கிய சொல் பல பொருள் படுதல்

63. உருபுநோக் கியசொல் பலபொருள் படுதலை
முன்னோர் பலரும் மொழிந்தனர் விரியா;
இந்நூ லிற்சிறி தாயினும் இயம்பிலன்.

[வி-ரை: உருபை முடிக்கும் சொல் பற்றித் தொல்காப்பியனார் நன்னூலார் முதலாயினார் விரித்துக் கூறினமையின், அவற்றைப் பற்றி இந்நூலுள் குறிப்பிடவில்லை என்பது.

'காப்பின் ஒப்பின்' தொ.சொ. 72. 'இரண்டாவதன் உருபு ஐ' ந. 296 முதலியன காண்க.] 51

## வேற்றுமை இயலுக்குப் புறனடை

64. வேற்றுமை பலபல வாகத் தோன்றினும்
வினைமுதல் முதலா விளம்பும்எண் பொருளின்
ஒவ்வொரு பொருளே வெவ்வேறு ஆதலும்
ஒவ்வொரு பொருளின் பலஉருபு வருதலும்
உருபுகள் தமக்குஉரிப் பொருளையும் உதவி
வேறு பொருளையும் சில விரும் புதலும்
எனமூன் றுள்ளே எல்லா மடங்கும்.

[வி-ரை: எண்பொருளுள் ஒவ்வொருபொருளேவெவ்வேறுதல் 25 ஆம் நூற்பா முதல் 43 ஆம் நூற்பா முடியக் கூறப்பட்டது. ஒவ்வொரு பொருளில் பலஉருபு வருதல் 44ஆம் நூற்பா முதல் 50 ஆம் நூற்பா முடியக் கூறப்பட்டது. உருபுகள் தமக்கு உரிய பொருளையும் உதவி வேறுபொருளையும் சில விரும்புதல் 51ஆம் நூற்பா முதல் 58ஆம் நூற்பா முடியக் கூறப்பட்டது.]

தொல்காப்பியர் வேற்றுமைக்குப் பலபல விதிவிலக்கு வருதல் நோக்கி ஓரியல்கொள்ளாது வேற்றுமையியல் வேற்றுமை மயங்கியல் விளிமரபு என மூவியல் கொண்டும் முழுதும் உரைத்திலர்.

வடநூல் வழியோ வரம்பின்றி ஓடும் என்பது தோன்றப் பல என்னாது, பலபல என்னாது, 'பலபல எல்லாம்' என்றும். அங்ஙனமாயினும் இங்ஙனம் கூறிய மூன்றனுள்ளே மடங்கி அடங்கும் என்பது தோன்ற இரட்டுற மொழிந்தாம்.

[வி-ரை: நூற்பா முதலடியிலுள்ள பலபல என்ற தொடரோடு ஈற்றடியிலுள்ள எல்லாம் என்பதையும் கூட்டிப் பலபல எல்லாம் எனக்கொள்க. ஈற்றடிக் கடையீருசீரை 'எல்லாம் மடங்கும்' எனவும், 'எல்லாம் அடங்கும்' எனவும் இரு வகையாகப் பிரித்துப் பொருள் செய்க.] 52

வேற்றுமையியல் முற்றும்

—O○O—

# வினையியல்

## தனிவினை - தொடர்வினை

65. தனிவினை தொடர்வினை எனஇரு வினையினும்
நடவா முதலிய முதல்நிலைத் தனிவினை;
விகுதிமுத லானவை கூடின தொடர்வினை.

என்பது வெளி;

[*வினை என்றது முதல்நிலையை; இஃது ஆகுபெயராய்த் தன்னால் பிறக்கின்ற சொல்லை உணர்த்திற்று. வினை பலவாறு இயலுமாற்றை உணர்த்தலின் வினையியல் எனப்பட்டது. வினை தனிவினை, தொடர்வினை என இருவகைத்து. நட, வா முதலிய முதல்நிலைகள் தனிவினை. முதல்நிலையோடு விகுதி முதலியவை கூடின் தொடர்வினை எனப்படும்.*] 1

## முதல்நிலைத் தனிவினைப் பாகுபாடுகள்

66. முதல்நிலைத் தனிவினைக் குணம்மொழி குறினே
முதல்நிலைத் தொழிற்பெயர்[1], முன்னிலை ஏவல்
ஒருமைமுற்று[2], அன்றியும் வேறுவினை முற்றோடு[3],
இருவகை எச்சம்[4], அவ் வெச்சம்முற் றுக்களுள்
முதல்நிலை பிரிந்தஅம் முதல்நிலைத் தொழிற்பெயர்
வினைமுதல் ஆதியா வெவ்வேறு ஆதல்[5],
எட்டுஉருபு ஏற்றே எண்பொருள் ஆதல்[6],
செயப்படு பொருள்குன் றுமையும், குன்றலும்,
பொதுவும் இடம்குன் றுமையும், ஆதல்[7],
பலபொருட்டு ஒன்றும்ஓர் பொருட்கே பலவும்,
ஆதலும்[8], பகாப்பதம் ஆகலும்[9] அன்றி
இயல்பினும் திரிபினும் பகுதிஎன்று ஆதல்[10]
ஆதியாப் பலவே ஆகும் என்ப.

1. முதல்நிலைத் தனிவினை முதல்நிலைத் தொழிற்பெயராதல்

'அறிகொன்று அறியான்' (கு. 638) – [அறி – அறிதல்]

'கெடுவாக வையாது உலகம்' (கு. 117) – [கெடு – கெடுதல்]

'அங்கா முயற்சி' (ந. 87) – [அங்கா – அங்காத்தல்]

– இவற்றுள் முதல்நிலை தானே தொழிற்பெயராய் நின்றவாறு காண்க.

2. முதல்நிலைத் தனிவினை முன்னிலைஏவல் ஒருமைமுற்றுதல்

'செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.' – (கு. 1151)

'என்னைக்கு மாரற்கு இயம்பு.'

– இவற்றுள் உரை, இயம்பு என முதல்நிலைத் தொழிற்பெயர் முன்னிலை முற்றுதல் காண்க.

3. *முதல்நிலைத் தனிவினை வேறுவினை முற்றுதல்

'உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர்'. –(கு. 813)

'ஏ ஏ நிகர்அவற் றுள்ளே ஏகமும்
ஓ ஓ நிகர்அவற் றுள்ளே ஒன்றும்
புள்ளி கொள்ளலைத் தள்ளா வாகும்'

–இவற்றுள், நேர், நிகர் என்னும் முதல்நிலைத் தனிவினைகள் நேர்வர், நிகர்க்கும் என வேறுவினை முற்றாய் வந்தமை காண்க. [நேர்வர் – பலர்பால் வினைமுற்று; நிகர்க்கும் – செய்யும் என் முற்று. 'உறுவது...நேர்'. நேர் – நேர்வர் – நன். 351 விரு.]

4. அ. முதல்நிலைத் தனிவினை பெயரெச்சமாதல்

பொருபடை, கொல்களிறு – இவை பொருகின்ற படை, கொல்கின்ற களிறு எனப் பெயரெச்சமானது காண்க.

---

*நன்னூல் 351. முனிவர் உரையில் எடுத்தாளப்பட்டுள்ளன.

4. ஆ. †முதல்நிலைத் தனிவினை வினையெச்சமாதல்

வரிப்புனைபந்து (முருகு. 68) - [வரி - வரிந்து]

அறுவேறு வகையின் (முருகு. 58) - [அறு - அற்று]

பாலறிவந்த (தொ.சொ. 162) - [அறி - அறிய]

சாக்குத்தினான் - சா - சாவ]

'செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.' - கு. 466

[செய்தக்க - செய்யத்தக்க]

'மண்மாண்புனை பாவை அற்று'. - கு. 407

[மாண்புனை - மாட்சிமைப்படப்புனை]

- இவை வரிந்து அற்று அறிய சாவ செய்ய மாட்சிமைப்பட என்று பொருள்பட்டு வினையெச்சமானது காண்க.

[வி-ரை: வரிப்புனைபந்து - வரிந்து புனை பந்து, அறுவேறு வகையின் - அற்று வேறு வகையின், பாலறிவந்த-பாலறிய வந்த, சாக்குத்தினான் - சாவக்குத்தினான், பொருநகர் - பொருத தகர், அடுபுலி-அட்டபுலி, சொற்பால்-சொல்லும் பகுதி, அறிகொன்று-அறிதலைக் கொன்று, கெடுவாகவையாது - கெடுதலாக வையாது எனப் பொருள்படுதல் காண்க. (பி.வி. 35 உரை).]

5. அவ் வெச்சம் முற்றுக்களுள்,
முதல்நிலை பிரிந்தஅம் முதல்நிலைத் தொழிற்பெயர்
வினைமுதல் ஆதியா வெவ்வேறு ஆதல்

'கால காலனைக் காண்கின்ற போது
காலனைத் துரத்தும்அக் காட்சி தானே.'

'கால காலனைக் கரிகஅறக் காண்கின்
காலனைத் துரத்தும் அக் காட்சி தானே.'

'கால காலனைக் காண்கின் றூர்தமக்கு
ஓர்வீடு அளிக்கும்அக் காட்சிஈது உண்மை.'

-இவற்றுள் மூன்றினும் நின்ற (காட்சி என்ற சொல்) முதல்நிலை பிரிந்து தொழிற்பெயராய் வினைமுதலானது காண்க.

† நன்னூல் 351 முனிவர் உரை.

'ஆதி' என்றதனால்,

அக் காட்சியால் பயன் உண்டு;

அக் காட்சிக்கு இணை இல்லை;

இவை போல்வன (காட்சியால், காட்சிக்கு என்றாற் போலத் தொழிற்பெயர் உருபு ஏற்றல்) எல்லாம் கொள்க. முதல்நிலையு-மன்றித் தொழிற்பெயர் பிரிந்து வினை முதலாதலும் கொள்க. அது,

'இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.' - கு. 352

- என்புழி மாசறு காட்சியவர்க்கு அக்காட்சி இன்பம் பயக்கும் என்பதனால் காண்க.

[வி-ரை: "இன்னும், 'இருள் —... காட்சியவர்க்கு' என் புழிக் காட்சியவர் என்னும் சாமானிய தத்திதனிற் காட்சி என்னும் பதம் பிரிந்து எழுவாயாய் நிற்பதும் கொள்க." பி-வி. 35 உரை. பயக்கும் என்ற பயனிலைக்குக் காட்சி என்பதே எழுவாயாதல் காண்க.]

6. முதல்நிலைத்தனிவினை,
எட்டுருபு ஏற்றே எண்பொரு ளாதல்

| | |
|---|---|
| இவ்வுரை பெருகிற்று | -உரை. |
| சொல்லைச் சேர்த்தான் | -சொல். |
| ஆயிரம் முடியை அவிழ்த்துநட்டான் | -முடி. |
| உரையால் அறிவித்தான் | -உரை. |
| இச்சொற்குப் பொருள் இது | -சொல். |
| இவ்வுரைக்குச் சொல் இது | -உரை. |
| மடியின் நீங்கி வாணிபம் செய்தான் | -மடி. |
| இச்சொல்லின் அறியலாம் இப்பொருள் | -சொல். |

இவ்வுரையது பெருமைக்கு ஒப்பில்லை -உரை.

இச்சொற்கண் இருக்கும் இப்பொருள் -சொல்.

களி ! வாராய் -களி.

மடி ! போவாய் -மடி.

இவ்வாறு முதல்நிலைத் தனிவினை எட்டு உருபு ஏற்றே எண் பொருளானது காண்க.

7. முதல்நிலைத் தனிவினை,
செயப்படு பொருள்குன் றுமையும் குன்றலும்
பொதுவும் இடங்குன் றுமையும் ஆதல்

விடு, ஏ, வை, வெள, உண், தின், பார், கேள்

இவற்றுள் முதல்நிலைத் தனிவினை செயப்படுபொருள் குன்றுமை காண்க.

நட, வா, போ, வாழ் - இவற்றுள் முதல்நிலைத் தனிவினை செயப்படுபொருள் குன்றுதல் காண்க.

முடி, மடி, கெடு, தேய், தபு, பிரி-இவற்றுள் பொதுக்காண்க.

[வி-ரை: நீ முடி, நீ மடி, நீ கெடு, நீ தேய், நீ தபு, நீ பிரி எனச் செயப்படுபொருள் குன்றி வருதலும், துணியை முடி, துணியை மடி, பொருளைக் கெடு, பொன்னைத் தேய், அவனைத் தபு, நண்பனைப் பிரி எனச் செயப்படுபொருள் குன்றுமையும் இம்முதல்-நிலை ஒவ்வொன்றும் பெறுதலின், இவை செயப்படுபொருள் குன்றுதலும் குன்றுமையுமாகிய பொதுநிலை உடையன.]

உரிஞ், செல் - இவற்றுள் இடம் குன்றுமை காண்க.

[வி-ரை: இவை ஒருமை ஏவல் வினையாதலின் முன்னிலை யாயின.]

8. அ. முதல்நிலைத் தனிவினை பலபொருட்கு ஒன்றுதல்

ஒருவனை வைதான் } வை
சுமையை வைத்தான் }

படையின் மடிந்தான்
சீலையை மடித்தான்
இத்தொழிற்கு மடிந்தான் } மடி

பணத்தை முடிந்தான்
படையில் முடிந்தான் } முடி

-இவற்றுள் பலபொருட்கு ஒரு முதல்நிலை காண்க.

[வி-ரை: வை - இழித்துப்பேசு, இறக்கிவை; மடி - இற, மடித்துவை, சோம்பி இரு; முடி-கட்டிவை, இறந்துபோ]

8. ஆ. முதல்நிலைத்தனிவினை ஒருபொருட்கே பல ஆதலும்

9. பகாப்பதம் ஆதலும்

சொல், உரை, அறை, கூறு, விளம்பு, பகர்;
ஈ, தா, கொடு.

இவை ஒரு பொருட்கே பல முதல்நிலை காண்க. பகாப்பதமும் அது. [முதல்நிலைத் தனிவினை யாவும் பகாப்பதமாம்]

10. முதல்நிலைத் தனிவினை,
இயல்பினும் திரிபினும் பகுதி என்றுதல்

நடந்தான், பொருதான், வாழ்ந்தான்.

[இவற்றுள் நட, பொரு, வாழ் என்னும் இயல்பு பகுதி காண்க]

வந்தான், வருகின்றான், தந்தான், தருகின்றான், கண்டான், செத்தான்.

[இவற்றுள் வா, தா, காண், சா என்ற திரிபு பகுதி காண்க.]

முதல்நிலைத் தனிவினை, ஆதியாப் பலவே ஆகும் என்ப

'ஆதி' என்றதனால்,

நாற்றை நடு-[நடு-ஏவல்வினை]

சாத்தற்கும் கொற்றற்கும் வழக்கறுத்தலுக்குப் பூதனே நடு; [நடு-நடுவன்]

திருச்சிராப்பள்ளிக்கும் திருநெல்வேலிக்கும் மதுரை நடு.

[நடு-இடை]

கொற்ற நட [நட-ஏவல்வினை]

கன்று நட வந்தான்-[நட-வினையெச்சம்]

என முதல்நிலைகள் ஏவல் முற்றுநிலையன்றி, நடுவன் என்னும் பெயராயும், இடை என்னும் பெயராயும், செய என் எச்சமாயும் வந்தன காண்க.

இச்சூத்திரம் பிறர்மதம் கூறலே; தன் துணிபு உரைத்தலன்று; பிறர் தம்முள் மறுப்பர். அவை விரிக்கின் பெருகும் ஆயினும், ஒருவர் மதத்தை மாத்திரம் சிறிது கூறுகின்றாம்.

முதல்நிலைகள் முன்னிலை ஏவல் ஒருமை எதிர்கால வினைமுற்று என்பையாயின், அது பொருந்தாது; என்னை? இவை ஆறும் மாறுதலின். அஃது எங்ஙனம் எனின், முதல்நிலை தனியே நின்று முன்னிலைக்கண் சென்றதாயின், அவ்வாறு ஏனை ஈரிடத்தினும் சேறல் வேண்டும்; செல்லாதாகலின் முன்னிலையன்று.

ஏவலாயின், முதல்நிலைக்கண் வி-பி இணைந்து வேறு பொருள் பட்டாற்போல, ஐ ஆய் இகரவிகுதி கூடின் வேறு பொருள் படவேண்டும்; அஃது இன்று. முதல்நிலை தானே ஏவலாய் இருக்கவே, அதன்மேல் மூன்று விகுதியும் விதித்தல் நின்று பயன் இன்மையாம். ஆகையால் ஏவல் அன்று.

நடந்தார் என்புழி நட என்னும் வினை பன்மைப்பாற் பொருள் படலின் ஒருமையன்று.

நடந்தான் என்புழி நட என்னும் சொல் இறந்த கால வினை ஆதலின் எதிர்காலம் அன்று.

நடத்தல் என்புழி நட என்னும் சொல் பெயராகியே நிற்றலின் வினை அன்று.

செய் குன்று, செய்தக்க அல்ல, அறி கொன்று, இச்சொல் நன்று, வழுவற்றது, இவ்வயலுக்கு ஆயிரம் முடி நட்டான். என்புழி, ஈரெச்சம் தொழிற்பெயர் பொருட்பெயர் முதலானவற் றிற்குப் பொது ஆதலின் முற்று அன்று.

[வி-ரை:

செய்குன்று-செய்த குன்று-பெயரெச்சம்.

செய்தக்க-செய்யத்தக்க-வினையெச்சம்.

அறிகொன்று-அறிதலைக் கொன்று-தொழிற் பெயர்.

சொல், முடி என்பன பொருட்பெயர்.

இவ்வாறு முதல்நிலைவினை பெயரெச்சம் முதலியனவாய் வருதல் காண்க.]

அன்றியும் நடந்தேன் நடந்தான் முதலிய வழுவற்ற சொற்க ளெல்லாம் இடவழுவாயே விடும்.

விதியும் மறையும் ஒரு சொற்கண்ணே உள்ளதே வினை. அக்குணம் இவற்றிற்கு இன்று. முதல்நிலை புடைபெயர்தலே வினையாதலின், எல்லா வினைச்சொற்களும் பிறத்தற்கு மூலமாகிய பொது முதல்நிலைத் தனிவினைப்பெயர் என்றே கொள்க.

எல்லா வினைச்சொற்களாவன - திணை பால் இடம் காலம் விதி மறை பொது சிறப்பு ஆதியோடு கூடின முற்று எச்சங்களும் தொழிற்பெயர்களும் என்க.

[வி-ரை: இவை ஆறும் மாறுதலின் - ஆறு என்றது முன்னிலை, ஏவல், ஒருமை, எதிர்காலம், வினை, முற்று என்பன. இவையல்லவாதல் தனித்தனியே எடுத்து மறுக்கப்பட்டது. பிரயோக விவேகம் 35 ஆம் காரிகை உரையில் "முன்னிலை ஏவல் ஒருமைச் சொல்லாவது நடவாய் - வாராய் என்பன ஆய் என்னும் ஈறு குன்றி நட - வா என முன்னிலை ஏவல் ஒருமைச் சொல்லாவதன்றி, நட - வா என்பன தாமே முன்னிலை ஏவல்

ஒருமைச்சொல் ஆகா என்க. அம்முன்னிலைச் சொற்கள் எல்லாம் ஏவல் வினையாயின், முன்னிலை விகுதி ஒழியத் தன்மை விகுதியோடும் படர்க்கை விகுதியோடும் கூடி, நடந்தேன் நடந்தான் என வருதல் இடவழு ஆதலின், பொருந்தா என்க.''

''முதல்நிலை வினை முன்னிலை ஏவல் வினைமாத்திரையாய் நில்லாது வினையெச்சப் பொருட்டாயும், பெயரெச்சப்பொருட்டாயும், புடை பரந்து வினை தன்னைச் சொல்லும் பெயர்ப் பொருட்டாயும், முற்றுச் சொல்லாய் நின்றவிடத்து அம்முதல்நிலை பிரிந்து நின்று வினை தன்னைச் சொல்லும் பெயர்ப் பொருட்டாயும் நிற்கும்; இன்னும் முதல்நிலைத் தாது முற்றாய் முடிவனவும் உள'' என்று விளக்கப்பட்டு எடுத்துக்காட்டுக்களும் தரப்பட்டுள்ளன. இவை பெரும்பாலும் இலக்கணக் கொத்துள் எடுத்தாளப்பட்டுள்ளன.] 2

## தொடர்வினைப் பகுப்புக்கள்

67. †தொடர்வினைக் குணமே தொகுக்குங் காலை
முதல்நிலைத் தனிவினைப் பகுதி முன்னர்
விகுதிமுதல் ஐந்தனுள் வேண்டுவ பொருந்தியும்[1],
அவையினுள் ஒன்றுஅணை யாதே திரிந்தும்[2],
திணையே பால்இடம் பொழுதுஇவை தீண்டித்
தொழிற்பெயர் முற்றுஎ ரெச்சமாய்த் தோன்றிச்
சிறப்புப் பொதுஎனச் சேறலும்[3], அன்றியும்
தன்வினை பிறவினை அவ்விரு வினைப்பொது[4],
விதிவினை மறைவினை இவைஇரு வினைப்பொது[5],
செய்வினை செயப்பாட் டு–வினை இப்பொது[6],
முதல்வினை சினைவினை இவைஇரு வினைப்பொது[7],
இருவகை எச்சத் தினுக்கும் பொதுவினை[8],
தெரிநிலை வினையே[9] தெரியா நிலைவினை[10]
வினைக்குறிப்பு அன்றியும்[11] வினைவினைக் குறிப்பு[12]
பொதுச்சிறப் பினுக்கே பொதுவாய் நிற்றல்[13]
வினைபெயர் தமக்கு வேறுஇன்று ஆதல்[14]
முற்றுஎ ரெச்சம் விதிமறை வினைபெயர்
இயல்பா கியசொல் திரிபா கியசொல்
ஒருமொழி பலமொழிக்கு ஒப்பாய் நிற்றல்[15]
ஆதியாப் பலவே ஆகும் என்ப.

1. தொடர்வினை, முதல்நிலைத் தனிவினைப் பகுதி முன்னர்
விகுதிமுதல் ஐந்தனுள் வேண்டுவ பொருந்தியும் ஆகும்

எ-டு: ஆடுதல், ஆடல், சொல்லு, அருளு, வாரு, செய்து, செய்பு - இவைபோல்வன எல்லாம் (தல்-அல்-உ-து-பு முதலிய) விகுதி பொருந்தின.

உண்டான் - தின்றான் போல்வன விகுதியும் இடை நிலையும் பொருந்தின.

உண்டனன் - உண்கின்றனன் போல்வன விகுதியும் இடை நிலையும் சாரியையும் பொருந்தின.

நடக்கின்றனன் - விடுக்கின்றனன் போல்வன விகுதியும் இடைநிலையும் சாரியையும் சந்தியும் பொருந்தின.

நடந்தனன் - முடிந்தனன் போல்வன ஐந்தும் பொருந்தின.

'வேண்டும்' என்றதனால், நடந்து (நட + ந் + த் + உ)

போனான் (போ + (இ)ன் + ஆன்) என முறையின்றியும் பொருந்தும்.

[வி-ரை:

ஆடுதல் - ஆடு + தல்; ஆடல் - ஆடு + அல்; அருளு- அருள் + உ;

வாரு - வார் + உ; செய்து - செய் + து; செய்பு - செய் + பு;

உண்டான் - உண் + ட் + ஆன்;

தின்றான் - தின் + ற் + ஆன்;

உண்டனன் - உண் + ட் + அன் + அன்;

உண்கின்றனன் - உண் + கின்று + அன் + அன்;

நடக்கின்றனன் - நட + க் + கின்று + அன் + அன்;

விடுக்கின்றனன் - விடு + க் + கின்று + அன் + அன்;
நடந்தனன் - நட + த்(ந்) + த் + அன் + அன்;
முடிந்தனன் - முடி + த்(ந்) + த் + அன் + அன்;

2. தொடர்வினை,
அவையினுள் ஒன்று அணையாதே திரிந்தும் வரும்

கேடு, பாடு, வீடு போல்வன அவ்வைந்தனுள் ஒன்றும் அணையாதே திரிந்து வினையாயின.

[வி-ரை: ஐந்து - விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் என்பன. கெடு, படு, விடு என்பன கேடு, பாடு, வீடு எனத் திரிந்தன. இவை முதல்நிலை திரிந்த தொழிற்பெயர்களாம்.

3. தொடர்வினை,
திணையே பால்இடம் பொழுதுஇவை தீண்டித்
தொழிற்பெயர் முற்றுஎ ரெச்சமாய்த் தோன்றிச்
சிறப்புப் பொதுஎனச் சேறலும் அன்றியும்

அவ்வளவும் வெளி.

[வி-ரை: திணை, பால், இடம், காலம் இவற்றைக் காட்டித் தொழிற்பெயர், முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்பன வாகத் தோன்றிச் சிறப்பு வினையாகவும் பொது வினையாகவும் தொடர்வினை அமையும் என்பது. திணை, பால், இடம், காலம் காட்டும் 'வந்தான்' போன்ற முற்றுக்கள் சிறப்புவினை. இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாக அமையும் 'நடத்தல் முதலிய தொழிற்பெயர், 'நடந்து' முதலிய வினையெச்சம், 'நடந்த' முதலிய பெயரெச்சம் போல்வன பொதுவினை எனக் கொள்க.]

4. தொடர்வினை,
தன்வினை பிறவினை அவ்விரு வினைப்பொது ஆகும்.

பிரிவர், ஆடுவர் - தன்வினை.
பிரிப்பர், ஆட்டுவர் - பிறவினை.

'தேற்று ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்' -நாலடி 75

'நட்பாடல் தேற்றுதவர்' -கு. 187

என்றும்,

அவனைத் தேற்றிப் பிரித்தான்.

அவனைத் தேற்றிக் கெடுத்தான்.

என்றும், இவை சொல் ஒன்றே தன்வினையும் பிறவினையும் ஆயின.

'தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றி'-தொ. சிறப்புப் பாயிரம்.

'பொருள்முதல் ஆறினும் தோற்றி' -ந. 321

'தொடர்ந்து தொழில் அல காலம் தோற்று' -ந. 275

இவன் வெளுத்தான்;

-இவை போல்வனவும் அது.

[வி-ரை: தேற்றுஒழுக்கம் - தேறுஒழுக்கம் - தன்வினை. நட்பாடல் தேற்றுதவர் - தேறுதவர்-தன்வினை. ஏனைய இரண்டும் பிறவினை. தேற்று என்பதே தன்வினையும் பிறவினையும் ஆகும்.

ஆறினும் தோற்றி - ஆறினும் தோன்றி - தன்வினை. காலம் தோற்று - காலம் தோற்றுவிக்கமாட்டா - பிறவினை. பெயர் தோற்றி - பெயரைத் தோற்றுவித்து - பிறவினை. இவன் வெளுத்தான் - தன்வினை. இவன் (துணியை) வெளுத்தான் - பிறவினை.

தோற்று, வெளு என்பன தன்வினையும் பிறவினையும் ஆயின. பிரயோகவிவேகம் 35ஆம் காரிகை உரையில்,

"தேற்று ஒழுக்கம் ஒருவன் கண் உண்டாயின்" (நாலடி. 75) 'நட்பாடல் தேற்றுதவர்' (கு. 187) என்புழித் தேறுஒழுக்கம் தேறுதவர் எனப்பொருள்படுமால் எனின், இதனைப் பகுதிப் பொருள்விகுதி என்றும் சுவார்த்தத்தில் வந்த காரிதம் என்பர்" என்று கூறுதல் காண்க.]

5. தொடர்வினை, விதிவினை மறைவினை
இவை இருவினைப் பொது ஆகும்

உண்பான் - விதிவினை;

உண்ணான் - மறைவினை;

செய்யாய், செய்யீர்,

'மகன் எனல்' 'மக்கட்பதடி எனல்' (கு. 196)

அல்லும் பகலும் அருச்சிக்க யாமந்தொறும் வல்லார்

வல்லார் மாட்டாதார்;

வல்லார் திறைகொள்வர்;

வல்லார் திறைகொடுப்பர்;

அகல் விசும்பிலார்;

அருளான், வெகுளான்;

-இவை சொல் ஒன்றே விதிவினையும் மறைவினையும் ஆயின.

[வி-ரை: செய்யாய் - செய், செய்யாதே என இரு பொருளது.

எனல் - என்று சொல்லுக, என்று சொல்லாதே என இரு பொருளது.

வல்லார் - ஆற்றலுடையவர், ஆற்றலில்லவர் என இரு பொருளது.

விசும்பிலார்-விசும்பை இருப்பிடமாக உடையவர், விசும்பில் இல்லாதவர் என இருபொருளது.

அருளான் - அருள் உடையான், அருள் இல்லாதவன் என இருபொருளது.

வெகுளான் - கோபிப்பான், கோபியான் என இரு பொருளது.

'மறந்திருந்தார் என்னாய் நீ மலையிடை வந்தக்கால்' (கலி. 38) என்புழி, மறம் திருந்தார் என்ற தொடருக்கு நச்சினார்க்கினியர் மறத்தால் திருந்தியவர் என்று பொருள் கோடலின் வெகுளான் என்பதும் கோபிப்பான் என்ற பொருளில் வரும் என்று உணரப் படும். இனி, சுந்தரர் தேவாரத்தில்,

'நீதியில் ஒன்றும் வழுவேன் நிட்கண் டகம்செய்து வாழ்வேன்
வேதியர் தம்மை வெகுளேன் வெகுண்டவர்க்குத் துணை ஆகேன்'

என்ற பாடல் தொடரில், வழுவேன் - வழுவை உடையேன்; வெகுளேன் - வெகுளியை உடையேன்; ஆகேன் - ஆகுவேன் என்ற சொல்லமைப்பைக் காண்க.]

6. தொடர்வினை,
செய்வினை செயப்பாட்டுவினை இப்பொது ஆகும்

உண்ட சாத்தன் - செய்வினை;

உண்ட சோறு - (உண்ணப்பட்ட) செயப்பாட்டுவினை;

புலிகொன்ற யானை;

மீன் விழுங்கினவன்;

ஒன்னார் வணங்கினான்;

அவள் விரும்பினவன் இவன்;

அறிந்து வந்தான்;

- இவை சொல் ஒன்றே செய்வினையும் செயப்பாட்டு வினையும் ஆயின.

[வி-ரை: புலியைக் கொன்ற யானை, மீனை விழுங்கினவன், பகைவரை வணங்கினான், அவளை விரும்பினவன் இவன், அறிந்து வந்தான் - என்று பொருள்படின் செய்வினையும், புலியால் கொல்லப்பட்ட யானை, மீனால் விழுங்கப்பட்டவன், பகைவரால் வணங்கப்பட்டவன், அவளால் விரும்பப்பட்டவன். இவன், அறியப்பட்டு வந்தான் - என்று பொருள்படின் செயப்பாட்டு வினையும் ஒரே தொடர்வினையால் அமைதல் உணரப்படும்.]

7. தொடர்வினை,
முதல்வினை சினைவினை இவ்விரு வினைப்பொது ஆகும்

சாத்தன் நடந்தான் – (முதல் வினை)

கால் நடந்தது – (சினைவினை)

வனம் பொலிந்தது;

படை பொருதிற்று;

அவன் பருத்தான்;

அருக்கன் உருக்கினான்;

– இவைபோல்வன எல்லாம் முதல் வினையும் சினை வினையும் ஆயின.

[வி-ரை: பொலிதல் வனத்தின்தொழிலும், பொருதல் படையின் தொழிலும், பருத்தல் அவன் தொழிலும், உருக்குதல் அருக்கன் தொழிலும் ஆகும்போது முதல்வினை. பொலிதல் வனத்து மரங்களின் தொழிலும், பொருதல் படையின் வீரர்களின் தொழிலும், பருத்தல் அவன் உறுப்புக்களின் தொழிலும் உருக்குதல் சூரியனுடைய கிரணங்களின் தொழிலும் ஆகும்போது சினை வினையாம்.]

8. தொடர்வினை,
இருவகை எச்சத்தினுக்கும் பொதுவினை ஆகும்

தேடிய பொருள் (தேடப்பட்ட – பெயரெச்சம்.)

தேடிய வந்தான் (தேடும்பொருட்டு – வினையெச்சம்)

ஓடிய புரவி (ஓடின – பெயரெச்சம்.)

ஓடிய இழிந்தான் (ஓடும் பொருட்டு – வினையெச்சம்.)

பாங்கனொடு கூடிய தலைவன் (கூடின – பெயரெச்சம்.)

தலைவியோடுகூடியவந்தான்(கூடும்பொருட்டு-வினைஎச்சம்) இவை சொல் ஒன்றே ஈரெச்சமாயின.

[வி-ரை: செய்த என்னும் பெயரெச்சமும், செய்யிய என்னும் வினையெச்சமும் ஓடிய-ஓடிய-தேடிய முதலிய சொற்களில் ஒன்றுபோலக் காணப்படினும், பெயரெச்சத்தை அகர ஈறாகவும், வினையெச்சத்தை இய என்னும் ஈறாகவும் வேறு பிரித்துக்கொள்வர்.

'உரையிடத்து இயலும் உடனிலை அறிதல்' (தொ.சொ. 458 நச்) என்ற நூற்பாவுரையுள் நச்சினார்க்கினியர் ஒரே வடிவினவாக வரும் இவ்வீரெச்சங்கள் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.]

9, 10 தொடர்வினை,
தெரிநிலைவினையே தெரியாநிலைவினை ஆகும்

[வி-ரை: தெரிநிலைவினை - வெளிப்படையாகக் காலம் காட்டும் வினை. தெரியாநிலைவினை - வெளிப்படையாக அன்றிக் குறிப்பால் காலம் காட்டும்வினை. 'வினை எனப்படுவது வேற்றுமை கொள்ளாது-நினையுங்காலைக் காலமொடு தோன்றும்,' (தொ.சொ. 198.) என்பது விதி ஆதலின், வினைச்சொல் வெளிப்படையாக வேனும் குறிப்பாகவேனும் காலம் காட்டியே நிற்றல் வேண்டும் என்பது.]

தெரிநிலைவினை வெளி;

வேறு, இல் இல்லை, இன்மை, உள், உண்மை, உண்டு, அல், அன்மை - இவை போல்வன தெரியாநிலைவினை.

11-13 தொடர்வினை,
வினைக்குறிப்பு அன்றியும் வினாவினைக்குறிப்பு அன்றியும்
பொதுச்சிறப் பினுக்கே பொதுவாய் நிற்றல் ஆகும்

| | |
|---|---|
| குழையன், அன்று, இன்று | - முற்று. |
| நல்லசாத்தன், வல்லவீரன் | - பெயரெச்சம். |
| அன்றிவாரான், இன்றிச்செய்யான் | - வினையெச்சம். |

இவை மூவகை வினைக்குறிப்பு. வடமொழி வழக்குப் பற்றியே சூத்திரம் செய்தனம். அது கருத்து அன்றாயின், தமிழ் மொழி வழக்குப் பற்றித்தெரியாநிலைவினையாகிய வினைக்குறிப்பு என்று கொண்டு, இருவகைக்கும் காட்டிய உதாரணங்களை ஒரிலக்கணமாக்குக.

[வி-ரை: தெரிநிலைவினை, தெரியாநிலைவினை என்று பகுப்பது வடமொழி மரபு. தெரியாநிலைவினை வினைக்குறிப்பில் அடங்கும் என்பது தமிழ்வழக்கு சாத்தன் அன்று குழையன் - குழையை உடையனாயிருந்தான் எனக் குறிப்பு முற்றுதல் காண்க.]

யார், எவன், என், என்னை - இவை வினாவினைக்குறிப்பு; இனி, யார்-எவன் இவை வினாவினைக் குறிப்பாயின் பொதுவாம்; வினாப்பெயராயின் சிறப்பாம். ஆகையால் ஒரு சொல்லே பொதுவிற்கும் சிறப்பிற்கும் பொதுவாய் நிற்றல் காண்க. இவை மேல்வரும் வினை பெயர் தமக்கு வேறின்றாகும உதாரணங்களுடனும் கூடும்.

[வி-ரை: யார் என்பது உயர்திணை முப்பாற்கும் பொது வினை. எவன் என்பது அஃறிணை இருபாற்கும் பொதுவினை. எவன் என்பது என் என்றும் என்னை என்றும் என்ன என்றும் இக்காலத்து மருவிற்று. யாவர் என்ற பெயர் இடையிலுள்ள வகரம் கெட்டு யார் என்று ஆகியவழிப் பலர்பாற் பெயராம் யாவன் என்பதன் திரிபாகிய எவன் என்பது ஆண்பாற்பெயராம். யார், எவன் என்ற பொதுவினைகளும் சிறப்புப்பெயர்களும் வடிவால் ஒன்றாமேனும், வெவ்வேறு சொற்கள் என்பதே இலக்கண நூலார் பலருடைய கருத்தாகும்.]

14. தொடர்வினை,
வினைபெயர் தமக்கு வேறின்றுதல் ஆகும்

அந்தணனைக் கொன்றானை அரசன் கொன்றான் - முற்று-பெயராதல்.

| | |
|---|---|
| ஓதுவான் வந்தான்<br>உண்பான் போனான் | வினையெச்சங்கள் பெயராயின. |
| பிறந்த இறந்தன<br>பிறந்த சாத்தன்<br>கண்ட அழிந்தன<br>கண்ட கண்<br>தின்ற அற்றன<br>தின்ற வாய்<br>வந்த போயின<br>வந்த பொருள் | தெரிநிலைப் பெயரெச்சங்கள் பெயராயின. |

'செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்' -வினையெச்சம்.

இருவினைக்குத் தக்க உடல் -குறிப்புப் பெயரெச்சம்.
-என முறையே முற்றும் வினையெச்சமும் பெயரெச்சமும் ஆகிய வினை பெயர் தமக்கு வேறின்றாய் ஒரு சொல்லாயே நிற்றல் காண்க.

[வி-ரை: ஓதுவான், உண்பான் என்ற வான் பான் ஈற்று வினையெச்சங்கள் வினையாலணையும் பெயராயின.

பிறந்த, கண்ட, தின்ற, வந்த, தக்க என்ற பெயரெச்சங்கள் வினையாலணையும் பெயராயின.

செய்தக்க - செய்யத்தக்க - வினையெச்சம் முதனிலைத் தொழிற் பெயராயிற்று.

வினைமுற்றுக்களே வினையாலணையும் பெயராயின என்பது இலக்கண ஆசிரியர் பலருக்கும் உடன்பாடு. வினையாலணையும் பெயருக்கு வினைமுற்றுப்பெயர் என்ற பெயர் அமைந்திருப்பதும் இக்கருத்துப் பற்றியேயாம்.]

15. தொடர்வினை,
முற்றுஈ ரெச்சம் விதிமறை வினைபெயர்
இயல்பா கியசொல் திரிபா கியசொல்
ஒருமொழி பலமொழிக்கு ஒப்பாய்நிற்றல் ஆகும்

முற்று ஈரெச்சம் முதல் ஒப்பாய் நிற்றல்வரை ஒருபொருள்.
அது செய்யா என்னும் வாய்பாடு.
ஒன்றனையும் செய்யா ஓரறிவும் அற்ற பொருள்-இது முற்று.

செய்யாத சாத்தான் - இது விகாரப்பட்டுச் செய்யாச் சாத்தான் எனப் பெயரெச்சமாயிற்று.

செய்யாது வந்தான் - இது விகாரப்பட்டுச் செய்யாவந்தான் என வினையெச்சமாயிற்று.

'மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரல்ஆ னாவே
ஏறா மென்தோள் வளைநெகி ழும்மே'

- மாறா, ஏறா என்பன பெயரெச்சம்.

'தொடர்ந்து தொழில் அல காலம் தோற்றா, வேற்றுமைக்கு இடனாய்'-தோற்றா-வினையெச்சம்.

செய்யா என்னும் வினையெச்சம்-விதிவினை.

செய்யா என்னும் பெயரெச்சம்-மறைவினை.

நடத்தலைச் செய்யாவாகிய குதிரைகள் கெட்டன - இது அஃறிணைப் பன்மைப் பெயர்.

செய்யும் யாவும் ஆவும்-இவை பலமொழி.

மறையும் வினையும் இயற்சொல்லும் திரிசொல்லும் ஒரு மொழியும் முற்காட்டியவற்றுள் அடங்கும்.

[வி-ரை: செய்யா என்னும் பெயரெச்சம் மறை. செய்யா என்னும் வினைமுற்றும் மறை. செய்யா என்னும் வினையெச்சம் விதி. செய்யா என்னும் பெயரெச்சம், வினையெச்சம், வினை முற்று மூன்றும் வினை. செய்யா என்னும் பெயரெச்சம் செய்யாத என்ற சொல்லின் திரிசொல். ஏனைய இயற்சொல். இவை யாவும் ஒரு மொழி செய்யா என்பதனைச் செய்+ஆ, செய்+யா என்று பிரித்து வயலில் உள்ள பசு, வயலில் உள்ள யாமரம் என்றாற்போலப் பொருள் செய்யும் நிலையில் பலமொழி. இனி, செய்யா என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் இயல்பாகிய சொல் செய்யாத என்பது அதன் திரிபே என்பது தொல்காப்பியம், சங்கச் செய்யுட்கள் இவற்றை நோக்கின் நன்கு புலப்படும் செய்தியாதல் காண்க.]

தொடர்மொழி ஆதியாப் பலவே ஆகும் என்ப.

'ஆதி' என்றதனால், செய்யும் என்னும் வாய்பாடு பொது முற்றாயும், எச்சமாயும், நிகழ்காலமாயும், எதிர்காலமாயும், முன்னிலை உயர்திணைப் பன்மைச் சிறப்புமுற்றாயும், உயிரும் உயிர்மெய்யும் கெடுதலும், உந்துஆகலும் போல்வன எல்லாம் கொள்க. உண்டு முதலாயினவும் அது.

இம்மூன்றும் பொது. மேல் வருவன சிறப்பு.*

[வி-ரை: செய்யும் என்னும் வாய்பாட்டின் பல நிலைகள்:

அவன் வரும்......அவை வரும் - பொதுமுற்று;

செய்யும் சாத்தன் - பெயரெச்சம்;

அவன் இன்று செய்யும் - நிகழ்காலம்;

அவன் நாளைச் செய்யும் - எதிர்காலம்;

நீயிர் உண்ணும் - முன்னிலை உயர்திணைப் பன்மைச் சிறப்பு முற்று.

தோழியும் கலுழ்ம் - கலுழும் என்ற சொல்லில் ஈற்றயல் உயிர் கெட்டது.

பொருள்கள் ஆம் - ஆகும் என்ற சொல்லில் ஈற்றயல் உயிர் மெய் கெட்டது.

மிசைப்பாயுந்து மிழலை - பாயும் என்பது பாயுந்து என உம் உந்து ஆயிற்று.

முன்னிலைப்பன்மையில் வரும் உம் ஈற்றுச்சொல் செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றன்று என்பதே நச்சினார்க்கினியர் கருத்து. (தொ.சொ.226 நச்.)

உண்டு என்பதுபற்றி 85 ஆம் நூற்பா உரையில் காண்க.

இந்த 65, 66, 67 ஆம் நூற்பாக்கள் பிறன்கோள் கூறும் பொதுச்செய்தி; இவ்வாசிரியர்தம் கருத்து என்று கோடல் கூடாது, இனிச் சிறப்புச் செய்திகள் கூறப்படும்] 3

## வினையடிகள்

68. பெயர்வினை இடைஉரி நான்குஅடி யானும்
பிறக்கும் வினைஎனப் பேசுவர் புலவர்;
பண்புஅடி முதலாப் பலவும் பகர்வர்;
அவைஇவை யுள்ளே அடங்கும் என்க.

* நன்னூல் 322. முனிவர் பெரும்பாலும் இந்நூற்பா உரைப் பகுதியை எடுத்து மொழிந்துள்ளார்.

எ-டு: முதல், ஈறு, ஒற்று, அழுக்காறு - இவைபோல்வன எல்லாம் முதல்நிலை.

முதலும், இறும், ஒற்றும், 'கொடுப்பது அழுக்கறுப்பான்' -குறள் 166

-இவைபோல்வன எல்லாம் முற்று.

முதலுதல், இறுதல், ஒற்றுதல், அழுக்கறுத்தல்-இவை போல்வன எல்லாம் தொழிற்பெயர்.

'நாவலொடு பெயரிய பொலம்' -முருகு. 18

'ஐ எனப் பெயரிய வேற்றுமைக்கிளவி' -தொ.சொ. 71

'அழகிய சொக்கர்'

'முதலிய எழுத்து'

'இற்ற பதம்'

ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர்' -தொ.எ. 296

'அழுக்கற்ற பாவி'

-இவைபோல்வன எல்லாம் பெயரெச்சம்.

அகரம் முதலிநிற்கும்;

னகரம் இற்று நிற்கும்;

மெய்கள் எல்லாம் ஒற்றி நடக்கும்

'அழுக்கற்று அகன்றாரும் இல்லை' -கு. 170

-இவைபோல்வன எல்லாம் வினையெச்சம்.

இங்ஙனம் ஐந்து வகையாய் வந்த வினையெல்லாம் பெயரடியாகப் பிறந்த வினை.

நட, நடத்தல், நடந்தான், நடந்த சாத்தன், நடந்துவந்தான்-இவை ஐந்தும் வினையடியாகப் பிறந்த வினை.

சாத்தா! புலி போல்;

நெய்போலுதல், போன்றல், போறல் – நீர்க்கு இல்லை;

புலி போன்றான்;

புலிபோன்ற சாத்தன்;

புலிபோன்று பாய்ந்தான்;

–இவை ஐந்தும் இடைஅடியாகப் பிறந்த வினை, உவம உருபுகள் எல்லாம் இம்முறையே வரும்.

கண்ணே! சிவ;

கண்ணே சிவத்தல், கண்ணே சிவப்பு;

கண் சிவந்தது;

சிவந்த கண்;

சிவந்து வீங்கின;

–இவை ஐந்தும் உரி அடியாகப் பிறந்த வினை. எல்லாப் பண்புகளும் இம்முறையே வரும்.

[வி–ரை: பிரயோகவிவேகம் 35 ஆம் நூற்பா உரையுள் இன்னும் வடமொழியார் சுப்புத்தாது என்னும் பெயர் அடியாகப் பிறக்கும் வினைகளும் உள.

எ–டு:

'நாவலொடு பெயரிய பொலம்' –முருகு. 18

'ஐ எனப் பெயரிய வேற்றுமை' –தொ.சொ. 71

'அழகிய சொக்கர்'

'பேதைக்கு அமர்த்தன கண்' –கு. 1084

'பைத்த பாம்பணையான்' –திருவாய் 3-3-10

'மைந்த கூந்தல்'

'கொடுப்பது அழுக்கறுப்பான்' –கு. 166

'நல்கூர்ந்தார்' –கு. 1046

'முதலா ஏன தம்பெயர் முதலும்' –தொ.எ. 66

'அவ்வித்து அழுக்காறு உடையானை' –கு. 167

'கடுத்தது காட்டும் முகம்' -கு. 706

'ஞகாரை ஒற்றிய' -தொ. எ. 297

'கரும்பை ஒத்தாள்' -சீவக. 191

எனப் பலவகைப் பெயரடியானும் பிறந்த வினை வருதல் காண்க- என்று குறிப்பிட்டுள்ளதும் காண்க.]

## வினை வகைகள்

69. முதல்நிலை தொழிற்பெயர் முற்று ஈரெச்சம்என்று
ஐவகை யுள்ளே அடங்கும் வினையே.

என்பது வெளி.

[வி-ரை: வினையானது முதல்நிலைத் தொழிற்பெயர், விகுதி பெற்ற தொழிற்பெயர், முற்று, பெயரெச்சம் வினையெச்சம் என்ற ஐவகை யுள்ளே அடங்கும்.]

## முதல்நிலை பகுக்க இயலாத்தொழிற் பெயர்கள்

70. முதல்நிலை இன்றியும் தொழிற்பெயர் மொழிகுவர்.

எ-டு: பூசல், வேட்டை, சண்டை, கூத்து, தொழில், வினை, ஆசை, வேட்கை, அவா, சூது, வாது, தச்சு, கொல்லு, நெட்டி எனவரும். பட்டினியும் அது.

[வி-ரை: வேட்டை என்பதன் பகுதி வேடு என்பது நச்சினார்க்கினியர் கருத்துப்போலும். (சீவக. 426 உரை.)] 6

## பிறவினை வகை

71. முதல்நிலை திரிந்தும் திரியா தாகியும்
இருவகை ஆகிய இவ்வினை யீற்றின்
வி-பி இணைந்தும் வெவ்வேறு அணைந்தும்
இயன்றுஎண் வகையாம் பிறவினை என்ப
'இயன்று எண் வகையாம் செய்விஎன் ஏவல்'

-எனப்பாடம் ஓதுதலும் ஒன்று.

எ-டு: ஆட்டினன், ஊட்டினன் - இவை போல்வன முதல் நிலை திரிந்தன. (ஆடு-ஆட்டு, உண்-ஊட்டு எனத்திரிந்தன.)

அரசன் கட்டின கோட்டை - கட்டுவித்த;

அரசன் வெட்டின குளம் - வெட்டுவித்த;

அரசன் செய்த தேர் - செய்வித்த:

கோழி கூவிப் போது புலர்ந்தது - கூவுவித்து;

உரற்கால் யானை ஒடித்து உண்டு

எஞ்சிய யா (குறுந். 232)-எஞ்சுவித்த;

குடிபொன்றிக்,

குற்றமும் ஆங்கே தரும் (கு. 171) -பொன்றுவித்து;

குடிமடிந்து குற்றம் பெருகும் (கு. 604) -மடிவித்து;

-இவை முதல்நிலை திரியாதன.

[வி-ரை: முதல்நிலைதிரியாதன என்பது தன்வினை பிறவினை வாய்பாடாகத் திரியாது தன் வினையாகவே நின்று பிறவினைப் பொருளைத் தந்தன என்பது.

பிரயோகவிவேகம்35ஆம் நூற்பா உரையுள்,

ணிச்-அந்தமாவது ஏவுவான் வினையும் இயற்றுவான் வினையும் உடனே தோன்றும் ஏவற்கருத்தாவின் வினை.

ஆற்றின் ஒழுக்கி (கு. 48), கேளிர்ப் பிரிப்பர் (137), தொல்காப்பியனெனத் தன் பெயர் தோற்றி (தொ. சி. பா.) ஊட்டு, தீற்று, ஆட்டு, கூட்டு, தேற்று என வி - பி இன்றித் திரிந்தும், ஒற்றுப்பெற்றும் வரும் சகச ணிச் அந்தம்.

'தெளித்த சொல் தேறியார்' (கு. 1154) - தெளிவித்த சொல் தேறியார்;

அரசன் எடுத்த ஆலயம் - அரசன் எடுப்பித்த ஆலயம்;

இவ்வயல் உழுத அந்தணன் - உழுவித்த அந்தணன்;

'காடு கொன்று நாடாக்கிக் குளம் தொட்டு - காடு கொல்வித்து நாடு ஆக்குவித்துக் குளம் தொடுவித்து;

உழுவார் உலகத்தார்க்கு ஆணி - உழுவிப்பார் எனவும் அநுபபத்தி தோன்றிய இடத்து இவ்வாறு பொருள் படுவதனை அந்தர்பாவித ணிச் என்பர்.

'உப்பகாரம் ஒன்றென மொழிப' தொ.எ.76 என்பதற்குக் காட்டிய தபு என்பதும் அது.' என்று குறிப்பிட்டுள்ளதும் காண்க.]

நடத்துவிப்பி, நடப்பிப்பி - இருவகை வினையீற்றின் வி - பி இணைந்தன

நடத்துவித்தான், விடுவித்தான் - இருவகை வினையீற்றின் வி - வேறு வந்தன.

ஊட்டுப்பித்தான், உண்பித்தான் - இருவகை வினையினும் பி - வேறு வந்தன.

வி - பி இணைதற்குப் பொருள், வி - ஆவது பி - ஆவது கூடியாவது இணைந்து நிற்றலே கருந்து என்க.

[வி-ரை: இரு வகைவினை - செய்வி என்வினை, செய் எனவினை.] 7

## செய்வி - செய்வினை ஆதல்

72. செய்விஎன் வினையுள் செய் வினைசிலவே.

எ-டு:

'நிரை ஆமாச் சேர்க்கும் நெடுங்குன்ற நாட'

'நட்பாடல் தேற்றா தவர்' கு - 187

'தேற்றா ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்' - நாலடி 75

- இவற்றுள், சேரும் நெடுங்குன்றம், நட்பாடல் தேறாதவர், தேறா ஒழுக்கம் என்றே பொருள் கொள்வர்.

'போக்கு வரவிலி' போக்கு வரவு புரிய' 'போக்கும் அது விளிந்தற்று' (குறள் 332) 'கள்ளன் போக்குக்காட்டி மீண்டான் என்பதுவும் அது.

போக்கு-தன்வினை அன்றோ எனின்,

'கைவேல் களிற்றொடு போக்கி' –கு. 774

'போக்குமவன் போகாப் புகல்'

'போக்கும் பொருளுண்டேல் ஒன்றாகப் போம்'

'மகட் போக்கிய தாய்'

என்பதனால் அறிக.

[வி-ரை: போ-தன்வினை; போக்கு பிறவினை.

போக்கு வரவிலி முதலியன போதல் வரவுஇலி, போதல் வரவு புரிய, போதலும் அது விளிந்தற்று, கள்ளன் போதல் காட்டி மீண்டான் எனத் தன் வினையாகவே பொருள்படும். போக்கு பிறவினை என்பதனுக்குக் 'கைவேல் களிற்றொடு போக்கி' முதலியன எடுத்துக்காட்டு.

பிரயோக விவேகம் 35ஆம் காரிகையுரை,
'தேற்றா ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்' –நாலடி 275

'நட்பாடல் தேற்றாதவர்' –கு, 187

என்புழித் தேறா ஒழுக்கம், தேறாதவர் எனம் பொருள்படுமால் எனின், இதனைப் பகுதிப்பொருள் விகுதி என்னும் சுவார்த்தத்தில் வந்த காரிதம் என்பர்'' என்று கூறும்.] 8

## தன்பிற பொதுவினை

73 சொல்லால் தெரிவினை பொருளால் தெரிவினை
என்றுஇரு திறனே தன்பிற பொதுவினை.

எ-டு:

தீர்தல், தீர்த்தல், நடத்தல்;
ஆடின சாத்தன், ஆட்டின சாத்தன்;

பிரி அமைச்சன், கெடு புத்தி, தேய் கட்டை, மீள்சினம், உரைகல் - இவைபோல்வன எல்லாம் சொல்லால் தெரிந்த தன் வினை, பிறவினை, பொதுவினை.

விண்ட தாமரை, விண்டபனை விண்டநிலம்.

- இவைபோல்வன எல்லாம் பொருளால் தெரிந்த தன்வினை பிறவினை, பொதுவினை.

[விரை: தீர்தல், ஆடின சாத்தன் - சொல்லால் தெரிந்த தன்வினை, தீர்த்தல், ஆட்டின சாத்தான் - சொல்லால் தெரிந்த பிறவினை, அவன் நடத்தல், பிரியும் அமைச்சன், கெடும் புத்தி, தேயும் கட்டை, மீளும்சினம், உரைக்கும் கல் - இவை சொல்லால் ஒருகால் தன்வினையாகப் பொருள்பட்டன. அவனை நடத்தல், பிரிக்கும் அமைச்சன், கெடுக்கும் புத்தி, தேய்க்கும் கட்டை, மீட்கும் சினம், உரைப்பிக்கும் கல் - இவை சொல்லால் ஒருகால் பிறவினையாகப் பொருள்பட்டன. அம்முறையில் இவை பொது வினையாயின.

விண்ட தாமரை - மலர்ந்த தாமரை - பொருளால் தெரிந்த தன்வினை.

விண்டபனை - விள்வித்த பனை - பொருளால் தெரிந்த பிற வினை.

விண்ட நிலம் - பிளந்த நிலம், விள்வித்த நிலம் - பொருளால் தெரிந்த தன்வினை பிறவினையாகும் பொதுவினை.] 9

## மறையின் மூவகை

74. மறைமூ வகையா வழங்குவர் புலவர்

எ-டு:

வாழ்வான் - வாழான், வாழ்வானல்லன், கெடுவான்;
கொடுப்பான்-கொடான், கொடுப்பானல்லன், வாங்குவான்;
புகழ்வான் - புகழான், புகழ்வானல்லன், இகழ்வான்;

-எனவரும் இவை முற்று.

உண்ட சாத்தன் - உண்ணாத சாத்தன், உணல் அற்ற சாத்தன், பசித்த சாத்தன் - இவை பெயரெச்சம்.

நடந்துவந்தான் - நடவாது வந்தான், நடையின்றி வந்தான், வாகனம் ஏறி வந்தான் - இவை வினையெச்சம்.

உண்டல் - உண்ணாமை, உணலறல், பட்டினி;
- இவை தொழிற்பெயர்.

முதல்நிலைகளெல்லாம் நடப்பான், நடவான், உண்பான் உண்ணான் - என விதிக்கும் மறைக்கும் பொதுவாகிய பெயர் ஆதலால், மறையின்று என்று முன்னர்க் காட்டினாம். (66 உரை) 10

## விதி மறை எனப்படாதன

75. இதுவிதி இதுமறை என்னப் படாசில.

எ-டு: போ, வா; தொடு, விடு; வாழ், கெடு; உலாவு, நில்; உறங்கு, விழி; விரும்பு, வெறு; கொடு, வாங்கு; சா, பிழை; போனான், வந்தான்; நின்றான், இருந்தான்; செத்தான், பிழைத்தான்; விரும்பினான், வெறுத்தான்; உறங்கினான், விழித்தான்-எனத் தெரிநிலைவினையும், செல்வன், வறியன் எனக் குறிப்பு வினையும் வந்தன.

விதிவினை மறைவினை என்னாமையால் பெயர்க்கும் கொள்க.

எ-டு: கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு; உறவு, பகை; இன்பம், துன்பம்; ஆண், பெண்; பகல், இரவு; ஒளி, இருள்; மெய், பொய்; உண்மை, இன்மை எனவரும்.

இவைகளை இணைத்து ஒன்றற்கு ஒன்று விதியாயும் மறையாயும் நிற்றல் காண்க.

[வி-ரை: இவ் எடுத்துக்காட்டுக்கள் தனித்தனியே நோக்குங்கால் ஒவ்வொன்றும் விதியே. இணைத்துக்காணும் போதுதான் விதி மறை என்ற கருத்துக்கு இடம் ஏற்படும், கிழக்குக்கு மறுதலை மேற்கு, உறவுக்கு மறுதலை பகை என்றாற் போல.] 11

## தொடர்மொழி மறை

76. நிலைமொழி மறையே வருமொழி மறையே
இருமொழி மறையே எனமூ வகைமறை.

எ-டு:

உண்ணாது வந்தான் - நிலைமொழி மறை;

உண்டு வாரான் - வருமொழி மறை;

'பள்ளியும் ஈரம் புலராமை ஏறற்க' (ஆசார. 19)-இருமொழி மறை - எனவரும். 12

## மறை பற்றிய ஒருசாரார் கருத்து

77. விதிச்சொல் மறைப்பொருள் ஆகி வருநவும்
மறைச்சொல் விதிப்பொருள் ஆகி வருநவும்
விதிச்சொலின் முதல்நிலை மறைப்பொருள் பெறுநவும்
மறைச்சொலின் முதல்நிலை விதிப்பொருள் பெறுநவும்
உளஎன மொழிகுவர் ஒருபுடை யோரே.

எ-டு

அழுக்காறு - பொறாமை;

அழுக்காறாமை - பொறுத்தல்;

உடல்படல் - மறாமை;

மறுத்தல் - உடன்படாமை;

'அறவினை யாது எனின் கொல்லாமை' - கு. 321

'கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான்' - கு. 326

- இவைபோல்வன எல்லாம் விதிச்சொல் மறைப்பொருளும், மறைச்சொல் விதிப்பொருளும் என்க.

'உள்ளங்கையில் உரோமம் முளைத்ததாயின் அறிவிலான் அடங்குவன்' இவற்றுள் முளைத்தது அடங்குவன் என்னும் விதி-வினையினுள் முதல்நிலை பிரிந்து முளையாமையே துணிவு, அடங்காமையே துணிவு என்றே பொருள்படுதல் காண்க. இது விதிச்சொல்லின் முதல்நிலை மறைப்பொருள் பெற்றது.

இனி, ஒருபொருளின் புடைபெயர்ச்சியே வினை என்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தது. அவ்வினையைக் கொள்ளுதலால் வினையெச்சம் என்பதும் அங்ஙனம் முடிந்தது. அவ்வினையெச்சம் வினையைக்கொள்ளுதலன்றி வினையின்மையைக் கொள்ளாது என்பதும் அங்ஙனம் முடிந்தது. ஆகவே, உண்டு நடந்தான் என்பது பொருந்தும். உண்டு நடவான் என்பது பொருந்தாது; இலக்கணவழுவேயாம். ஆகையால், அம்மறைச்சொல்லினுள் முதல்நிலையைப் பிரித்து ஒரு பொருளின் புடைபெயர்ச்சி ஆகிய புடைபெயர்ந்த நடத்தல் என்னும் தொழிற்பெயராக்கி, வினையெச்சத்தை வினைகொண்டு முடித்துப் பின்பு செய்யான் என்னும் மறையை வருவித்து உண்டு நடத்தலைச்செய்யான் என்று முடிப்பர். இக்கருத்துப் பரிமேலழகருக்கும் உரையாசிரியருக்கும் நியமம். இது மறைச்சொல்லின் முதல்நிலை விதிப்பொருள் பெற்றது.

[வி-ரை: பிரயோக விவேகம் 39ஆம் காரிகை உரையுள், "உண்ணாது வந்தான், உண்டு வாரான்-என எச்சமும் முடிக்குஞ் சொல்லும் எதிர்மறுத்தன. 'மருங்கோடித் தீவினை செய்யான் எனின்' (கு. 210). 'கற்றில்கண்டு அன்னம் மென்னடை' (கோவை 97) என்னும் குறளினும் திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியரும் செய்தலோடும் கற்றலோடும் முடியும் என்பர். இதுவும் அது. பிரதியோகி நியோகியோடே ஒக்கும் என்பதே கருத்தாயிற்று. இதனை ஆகாரியாரோபம் என்பாரும் உளர்.

'அறவினை யாதெனின் கொல்லாமை' - (கு. 321) என்னும் குறளுள் பரிமேலழகர் விலக்கியது ஒழிதலும் செய்தலோடு ஒக்கும்ஆதலின் கொல்லாமை அறவினை ஆயிற்று என்பர்.

'பள்ளியும் ஈரம் புலராமை ஏறற்க' -(ஆசார. 19) என்பது எச்சமும் முடிக்குஞ்சொல்லும் எதிர்மறுத்தலின் அது சொல்லான் முடியாது. ஈரம் புலர்ந்தபின் ஏறுக எனப் பொருள்படுதலின், அஃது எதிர்மறை ஆகாது என்க. இதனை அலங்காரநூலார் அபாவாபாவம் என்ப" என்று குறிப்பிட்டதும் காண்க.] 13

## செயப்பாட்டு வினைவகைகள்

78. செயப்பாட்டு வினையினைச் செப்புங் காலை
வினைமுதல் செயப்படு பொருளே தொழிற்பெயர்
மூன்றின் பயனிலை யாயும்[1] அவை யாயும்[2]
முதல்நிலை தொழிற்பெயர் முற்றுஈ ரெச்சம்
வினைமுதல் செயப்படு பொருள்ஏழ் ஆதியுள்
படுசொல் அற்றே படுபொரு ளாயும்[3]
அவைகள் படுசொல் அணைந்து வந்தும்,[4]
முற்று தொழிற்பெயர் முதலினுள் படுசொல்
வரினும் படுபொருள் வருதல்இன் றுயும்,[5]
பெயர்ப்பின் வினைஎச் சத்தின் பின்னர்ப்
படுசொல் வந்தே வேறுபொருள் பட்டும்,[6]
தன்பொருள் பிறபொருள் இவ்விரண் டற்கும்
பொதுவாய்ப் படுசொல் பொருந்தி நின்றும்,[7]
படுசொல் வரப்படாப் படுபொரு ளாயும்,[8]
படுசொல் வந்தே படுபொரு ளாயும்,[9]
இன்னும் பலவாய் இயலும் என்ப.

1, 2. செயப்பாட்டு வினையினைச் செப்புங்காலை
வினைமுதல் செயப்படு பொருளே தொழிற்பெயர்
மூன்றின் பயனிலை யாயும்அவை யாயும்இயலும்.

எ-டு:

*அரன் அருச்சிக்கப்பட்டான் [வினைமுதலின் பயனிலை]*
*ஆடை தரப்பட்டது [செயப்படுபொருளின் பயனிலை]*
*ஒழுக்கம் செய்ப்படும் [தொழிற்பெயரின் பயனிலை]*
*- இவ்வாறு மூன்றின் பயனிலையாய் வந்தது காண்க.*

*'அகடாரார் அல்லல் உழைப்பர் சூதென்னும்*
*முகடியான் மூடப்பட்டார்.'* - கு. 936

*[மூடப்பட்டார் - வினைமுதல்]*

'இகழப் படுவாரைக் காணினும் இழுக்கே'

[இகழப்படுவார் - செயப்படுபொருள்]

'இன்னாது இரக்கப் படுதல்' -கு. 224

[இரக்கப்படுதல் - தொழிற்பெயர்]

செயப்பாட்டுவினை அம்மூன்றாய் வந்தது காண்க.

3. முதல்நிலை தொழிற்பெயர் முற்றுஈ ரெச்சம்
வினைமுதல் செயப்படு பொருள்ஏழ் ஆதியுள்
படுசொல் அற்றே படுபொரு ளாயும்இயலும்.

எ-டு:

செய்குன்று - செய்யப்பட்ட குன்று; முதல்நிலை படுசொல் அற்றுப் படுபொருளாயிற்று.

ஆண்டவன் என்றல் அரற்கே தகுமே. என்றல் - என்னப் படுதல்; தொழிற்பெயர் படுசொல் அற்றுப் படுபொருளாயிற்று.

மாம் வெட்டிற்று. வெட்டிற்று - வெட்டப்பட்டது; முற்று, படுசொல் அற்றுப் படுபொருளாயிற்று.

அரம் பொருதபொன் - (கு. 888) அரத்தால் பொரப்பட்ட பொன்; பெயரெச்சம் படுசொல் அற்றுப் படுபொருளாயிற்று.

எழுதிவந்தநிலை, 'யாழும் எழுதி எழில்முத்து எழுதி' (கோவை. 79) எழுதப்பட்டு என வினையெச்சம் படுசொல் அற்றுப் படுபொருளாயிற்று.

இல்வாழ்வான் என்பான் - (கு. 41) இல்வாழ்வான் எனப் படுவான்; வினைமுதல் படுசொல் அற்றுப் படுபொருளாயிற்று.

ஊருணிநீர் (கு. 215) ஊராரால் உண்ணப்படுவதாகிய நீர்; செயப்படுபொருள் படுசொல் அற்றுப் படுபொருளாயிற்று.

'ஆதி' என்றதனால் எழுத்தாணி எழுதிற்று (எழுதப்பட்டது)- இது கருவி.

[வி-ரை: இனி, பிரயோகவிவேகம் 37ஆம் காரிகை உரையுள் 'தாம்வீழ்வார்மென்தோள்' (கு. 1103) 'இல்வாழ்வான் என்பான்' (கு. 41), 'உடுப்பதூஉம் உண்பதூஉம்' (கு. 166) என்னும் செயப்படுபொருளாய் நின்ற வினைமுற்றுப்பெயரும், முதல்நிலையும் வினையெச்சமும் பெயரெச்சமும் செயப்படுபொருளோடு முடியும் வினைமுற்றுப் பெயரும், செயப்பாட்டு வினையோடு தோன்றுதும் பொருள் உரைக்குங்கால் தம்மால் வீழப்படுவார், இல்வாழ்வான் எனப்படுவான், உடுக்கப்படுவது - எனச்செயப்பாட்டு வினையோடு தோன்றியும்,

செய்குன்று - செய்யப்பட்டகுன்று, அடுநறா - அடப்பட்ட நறா எனவும்,

'அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி' -கு. 888

என்புழி, அரத்தால் பொரப்பட்டபொன் - உரம் பொரப்பட்டு- எனவும்,

திருக்கோவையாருள் 'யாழும்எழுதி எழில்முத்து எழுதி' (79) என்புழி, யாழும் எழுதப்பட்டு எழில் முத்தும் எழுதப்பட்டு எனவும்,

'யாம் வீழும் திருநுதற்கு இல்லை இடம்' -கு. 1123

என்புழி, எம்மால் வீழப்பட்ட திருநுதல் எனவும் படுசொல் இன்றாய்த் தோன்றிப் படுசொல் அணைந்து பொருள் பட்டவாறு காண்க' என்று குறிப்பிடப்பட்டுள்ளதை நோக்குக.]

4. அவைகள் படுசொல் அணைந்துவந்தும் இயலும்

செய்யப்படு குன்று - முதல்நிலை.

ஆண்டவன் என்று சொல்லப்படுதல் அரற்கே தகுமே- தொழிற்பெயர்.

மரம் வெட்டப்பட்டது - முற்று.

அரம் பொரப்பட்ட பொன் - பெயரெச்சம்.

எழுதப்பட்டு வந்த ஓலை, யாழும் எழுதப்பட்டு,

முத்தும் எழுதப்பட்டு - வினையெச்சம்.

இல்வாழ்வான் என்று சொல்லப்படுவான் - வினைமுதல்.

ஊராரால் உண்ணப்படுவதாகிய நீர் - செயப்படுபொருள்.

எழுத்தாணி எழுதப்பட்டது - கருவி.

என அவ்வெட்டனுள் படுசொல் அணைந்து வந்தது காண்க.

[வி-ரை: முதல்நிலை முதலிய ஏழனோடு 'ஆதி' என்ற மிகை யாற்கொண்ட கருவியும் கூட்ட எட்டாமாறு காண்க.]

5. முற்று தொழிற்பெயர் முதலினுள் படுசொல்
வரினும் படுபொருள் வருதல் இன்றாயும் இயலும்

'உட்கப் படாஅர் ஒளிஇழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார்' -கு. 921

என்புழி, உட்கார் எனவே பொருள்படுதலின் படு சொற்குப் படுபொருள் வாராமை காண்க.

'பெயரெழுவாய் வேற்றுமையாம் பின்பதுதான் ஆறு
பயனிலையும் ஏற்கப் படுதல்' -நே.சொ. 17

என்புழி ஏற்றல் என்றே பொருள்படுதலின் படுசொற்குப் படுபொருள் வாராமை காண்க.

'முதல்' என்றதனால்,

உண்ணப்பட்ட சாத்தன் - உண்ணப்பட்டு வந்த சாத்தன் என்பன ஒரோவழி உண்ட சாத்தன் - உண்டு வந்த சாத்தன் எனவே பொருள்படுதலின் ஈரெச்சத்தினுள்ளும் கொள்க. கற்பிக்கப்படும் ஆசான், கற்பிக்கப்படா ஆசான், கற்கப்படு மாணாக்கன், கற்கப்படா மாணாக்கன் என்பனவும் அது.

[வி-ரை:

கற்பிக்கப்படும் ஆசான் - கற்பிக்கும் ஆசான்;

கற்பிக்கப்படா ஆசான் - கற்பிக்கா ஆசான்;

கற்கப்படு மாணுக்கன் - கற்கும் மாணுக்கன்;

கற்கப்படா மாணுக்கன் - கற்கா மாணுக்கன்;

எனப் படுசொற்குப் படுபொருள் வாராமை உணரப்படும்]

6. பெயர்பின் வினையெச் சத்தின் பின்னர்ப்
படுசொல் வந்தே வேறுபொருள் பட்டும் இயலும்

எ-டு:

'மறை இறந்து மன்று படும்' -கு. 1138

'போற்றினும் பொத்துப்படும்' -கு 468

'சொற்பொருள் சோர்வு படும்' -(கு.1046)பெயர்ப்பின் படு;

'துன்பங்கள் சென்று படும்' -(கு. 1045) வினையெச்சத்தின் பின் படு.

இவற்றுள் இரண்டன் பின்னரும் உண்டாம் என்றே வேறு பொருள்பட்டது காண்க.

'இலம்படு புலவர் ஏற்றகை நிறைய' -மலைபடு 576
என்பதும் அது.

இனைத்தென அறிந்த பொருட்கு உம்மை படும்;

இன்என் உருபிற்கு இன்என் சாரியை இன்மை படும் - இரண்டும் பெயர்ப்பின் படு.

'ஒளியோடு ஒழுகப்படும்' - கு. 698

'வஞ்சரை அஞ்சப்படும்' - கு. 824

மெய் சொல்லப்படும்.

ஆசை நீக்கப்படும் - இவை வினையெச்சத்தின் பின் படு.

இவற்றுள் இரண்டன் பின்னரும் வேண்டுவது தக்கது என்றே வேறு பொருள் பட்டது காண்க. இதனை,

'வேறில்லை உண்டியார் வேண்டும் தகும் படும்' - (85) என்னும் சூத்திரத்தினும் விளக்குதும்.

[வி-ரை: எடுத்துக்காட்டுக்கள் பெயர்ப்பின் படு வருதலுக்கும், வினையெச்சத்தின்பின் படு வருதலுக்கும் காட்டப் பட்டுள்ளன. முன்னைய எடுத்துக்காட்டுக்களில் படும் என்பது உண்டாம் என்னும் பொருளிலும், பின்னைய எடுத்துக்காட்டுக் களில் படும் என்பது வேண்டுவது தக்கது - என்ற பொருள் களிலும் வந்தவாறு.

''பண்புப் பொருளில் வரும் ,ஒளியோடு ஒழுகப்படும்' (கு. 698) என்பதுபோன்ற செயப்பாட்டு வினையை யக்கு என்பர். அன்றியும் 'பொத்துப்படும்' (கு. 468) 'மன்றுபடும்' (கு. 254) 'சோர்வுபடும்' (கு. 1046) எனப் பெயர் அடுத்து வரும் படுவை யக்கு என்றும், இயற்றப்படுதல் வேறுபடுக்கப்படுதல் எனத் தொழிற்பெயரை அடுத்து வரும் படுவை ய - என்றும் கூறுவர்'' பிரயோகவிவேகம் 45 உரை.]

7. தன்பொருள் பிறபொருள் இவ்விரண் டற்கும்
பொதுவாய்ப் படுசொல் பொருந்தி நின்றும் பயிலும்

எ-டு: 'உதவி செய்யப்பட்டார்' (கு. 105) இன்மை தழுவப்பட்டார், அல்லல் அடையப்பட்டார் - இவை ஒருகால் தன்பொருட்கும், ஒருகால் உதவியை ஏற்றுக்கொண்டார், இன்மையைத் தழுவினர், அல்லலை அடைந்தார் எனப் பொருள்-பட்டுப் பிற பொருட்கும் பொதுவாய்ப் படுசொல் பொருந்தல் காண்க.

[வி-ரை: தன்பொருள் படுசொல்லோடு கூடிய பொருள்; பிற பொருள் போந்த பொருள்.]

8. படுசொல் வரப்படாப் படுபொருளாயும் பயிலும்

மரம் வெட்டினான், சோற்றை உண்டான் - இவற்றுள் படு சொல்லை வருத்தினும், வரப்படாமல் தடைப்பட்டுக் கிடப்பினும் (மரம் வெட்டப்பட்டது, சோறு உண்ணப்பட்டது) படுபொருள் வந்தது காண்க.

9. படுசொல் வந்தேபடுபொருளாயும் பயிலும்

நாய் கோட்பட்டான்; புலி கவ்வப்பட்டான் - இவற்றுள் படுசொல்லைத் தடுப்பினும் தடைபடாதே வந்து பொருந்திப் படுபொருள் வந்தது காண்க.

[வி-ரை: தடுப்பினும் தடைபடாது வருதல் - தொகுக்க முயலினும் தொகாது வெளிப்பட்டு வருதல்.

"அரம் பொருத பொன்' (கு. 388), 'தாம் வீழ்வார்' என்பன போலக் 'கேள்வி தோளாதசெவி', 'முகடி மூடினர்' என வாராது சிறு பான்மை 'கேள்வியால் தோட்கப்படாத செவி' (கு. 418), 'முகடியான் மூடப்பட்டார்' (கு. 936) என வரும்" பிரயோக விவேகம் - 37 உரை ]

'இன்னும் பலவாய் இயலும் என்ப'
'இன்னும் பல' என்றதனால்.

எம்மால் வீழப்பட்ட திருநுதற்கு இல்லை இடம்;
தம்மால் வீழப்பட்ட தலைவியுடைய மென்தோள்;

-இவற்றை 'யாம் வீழும் திருநுதல்' (கு. 1123), தாம் வீழ்வார் மென்தோள் (கு. 1103) எனத் தொகுக்க வேண்டின் தொகுக்கலாம், வேறு பொருள் படாது ஆதலான்.

'கேள்வியால் தோட்கப்படாத செவி' -கு. 418

'முகடியான் மூடப்பட்டார்' -கு. 936

இவற்றைக் கேள்வி தோளாத செவி - முகடி மூடினர் - எனத் தொகுக்க வேண்டின் தொகுக்கப்படாது, வேறு பொருள் படுதலின்.

[வி-ரை: தாம் வீழ்வார் மென்தோள், யாம் வீழும் திருநுதல் என்பன இவ்வாறே பிரயோக விவேகம் 37 ஆம் காரிகை உரையிலும் விளக்கப்பட்டுள்ளன.

## படுதொகை

79. அறுதொகை அறைகுவர் அறிவுடை யார்பலர்
படுதொகை யொடுதொகை ஏழ்என் பார்சிலர்.

[வி-ரை: அறுதொகை - வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை, அன்மொழி என்பன.]

எ-டு:

போ சாத்தா, செய்குன்று -முதனிலை.
சொல்லுதலால் சொல் -தொழிற்பெயர்.
பால் கறந்தது -முற்று.
உண்ட சோறு -பெயரெச்சம்.
வணிகன் அறிந்து வந்த பொன் -வினையெச்சம்.

-என இவ்வைந்தும் வினையின் தொகை.

போக்கப்படு சாத்தா, செய்யப்பட்டதாகிய குன்று எனவும், சொல்லப்படுதலால் சொல் எனவும், பால் கறக்கப்பட்டது எனவும், உண்ணப்பட்ட சோறு எனவும், வணிகனால் அறியப்பட்டு வந்த பொன் எனவும் முறையே அவ்வைந்திற்கும் படுசொல் தொகாநிலை காண்க.

அறுதொகைக்கு இப்படுதொகை இணையின்று என்பது கருதி அறிவுடையார் சிலர் என்றும். 15

## வினையின் எண்வகை

80. தனக்குப் பயனே, பிறர்க்குப் பயனே,
தனக்கும் பிறர்க்கும் சார்இரு பயனே,
தனக்கும் பிறர்க்கும் பயன்சார்பு இலவே,
எனநால் வகையாய் இயன்றே, இவைதாம்
சிற்றறி வோர்வினை.பேரறி வோர்வினை,
எனஇரு கூறாய் எட்டாம் என்பர்.

எ-டு:

உண்டான், உடுத்தான், உறங்கினான் - தனக்குப் பயன்.
பாங்கன் தூது நடந்தான்;

பாங்கி ஊடல் தீர்த்தாள் - பிறர்க்குப் பயன்.

தலைவி தலைவனுக்குச் சோறு அட்டாள்;

தலைவன் தலைவியைப் புணர்ந்தான் - தனக்கும் பிறருக்கும் பயன்.

பயனில் சொல் பாராட்டினான்;

கையை வீசினான்;

கண்ணை இமைத்தான் - தனக்கும் பிறர்க்கும் பயன் சார்பில; - என முறையே சிற்றறிவோர் வினை நான்கும் காண்க.

யான் எனது என்னும் செருக்கு அறுத்தான்.

அவாவை விட்டான்;

பிறவியை ஒழித்தான்.

வீட்டை அடைந்தான் - தனக்குப் பயன்.

நூலைப் பாடினான்.

உரையை எழுதினான்.

மாணாக்கனை அறிவித்தான் - பிறர்க்குப் பயன்.

வேதாகம வழி விரும்பி ஒழுகினான்.

இரக்கத்தொடு பலி இரக்கத் தொடுத்தான்.

அரனது விழாவை மிக அலங்கரித்தான்.

சிவனது பூசையை மிகச் சிறப்பித்தான் - இருவருக்கும் பயன்.

அறம்பொருள் இன்பம் அளவின்றித் தேடினான்.

அட்டமா சித்தியை அருமையாய்த் தேடினான் - இருவருக்கும் பயனில.

-என முறையே பேரறிவோர்வினை நான்கும் காண்க.

'உலகநூல் உணர்ந்தோர்க்கு உரைப்பினும் தெரியா
பேரறி வோர்வினை எனவே பேசுக;
அறிவுநூல் உணர்ந்தோர்க்கு அறையினும் தெரியா
சிற்றறி வோர்வினை எனச்செப் புகவே;
அவ்விரு நூலை அறிந்தார் தமக்கே
இவ்விரு கூற்றுஎண் வினைவிளங் கிடுமே'.

அஃது என்னெனின்,

இழிபு வினைகள் எல்லாவற்றினுள்ளும் மிக இழிபு - வினையாவது இரத்தலே என்னும் உலக நூல்; உயர்ந்த வினைகள் எல்லாவற்றினுள்ளும் மிகவும் உயர்ந்த வினையாவது இரத்தலே என்னும் அறிவு நூல்.

'ஒன்று இல்லாதான் செத்த பிணத்திற் கடை'

'இயல்பாகும் நோன்பிற்கு ஒன்று இன்மை' -கு. 344

என்பனவும் அது.

இங்ஙனம் எல்லா வினையையும் மாறுபடக் கூறலே அன்றி ஒரு வினையையானும் உடன்பட்டு கூறுது ஆதலால், யாதானும் ஒரு வினைச்சொல் பிறந்துழி, அவ்வெட்டனுள் இது என்று துணிந்து அடக்குதல் அவர்க்கேயன்றி ஏனை இருவர்க்குங் கூடாதாதலால் என்க. 16

## வினை வகை விளக்கம்

81. அவைதாம்,
மனம்மொழி மெய்அறிவு ஆகிய நான்கன்
அசைவே ஆகியும் அவ்வசைவு இன்றியும்[1]
நல்வினை தீவினை வெறுவினை எனநடந்து[2]
அறிந்து செய்வினை அறியாது செய்வினை
அசேதனம் செய்வினை எனவே அமர்ந்து[3]
தீவினை நல்வினை சிலமுறை திறம்பிச்[4]
செய்யா வினையே செய்வினை ஆகிச்[5]
செய்இரு வினையே செய்யா வினையாய்[6]
இன்னும் பலவாம் இலக்கணம் பெறுமே.

1. மனம்மொழி மெய்அறிவு ஆகிய நான்கன்
அசைவே ஆகியும் அவ்வசைவு இன்றியும்

எ-டு: நினைத்தான், உரைத்தான், நடந்தான், அறிந்தான்- இந்நான்கும் முறையே மனம் முதலியவற்றின் அசைந்தவினை. இவற்றைத் தமிழ் நூலார் ஒரு பொருளின் புடைப்பெயர்ச்சி என்று வழங்குவர்.

'அறிவு இறந்து அங்கு அறிந்திடர் செறிந்த துகள் அகற்றிடரே' இதுபோல்வன எல்லாம் அறிவு முதலியவற்றைக் கடத்தலின் அசைவற்ற வினை. இதனை வடநூலார் பரவசம் என்று வழங்குவர்.

இவ்வைந்தனுள் (அசைந்த வினை நான்கு, அசையாவினை ஒன்று) அசைவற்ற வினை என்பது ஒன்றில்லை, ஏனை நான்கே வினை என்பாரும், அந்நான்கனுள்ளும் அறிவு அசைந்த வினை என்பது ஒன்றில்லை, ஏனை மூன்றே வினை என்பாரும், மூன்று என்று வரையறை இல்லை, உலகததுப் பல பொருள்களினுடைய அசைவு ஒன்றுமே வினை ஆதலால் ஒன்றே வினை என்பாரும், தீக்குச் சூடு போலப் பொருட் குணமே அன்றி வினை என்பது ஒன்று இல்லை என்பாரும், இன்னும் பலவாறு உரைப்பாரும் உளர். அவை எல்லாம் விரிக்கின் பெருகும்.

2. நல்வினை தீவினை வெறுவினை என நடந்து

நல்வினை - தீவினை வெளி. [நல்வினை அறம் செய்தல் முதலியன; தீவினை நன்றிகோறல் முதலியன.]

வெறுவினையாவது இருவினையினுட் படாது வருவது:

எ-டு:

கையை நொடித்தான்;

காலை நெட்டிவிட்டான்;

மூச்சு விட்டான்;

உறுப்பழுக்கை உருட்டி உதிர்த்தான்;

வேர்வையைத் துடைத்தான்;
சோற்றைப் பிசைந்தான்;

- என வரும். மேல் அசேதனம் செய்வினைக்குக் காட்டும் உதாரணங்களுள் பொருந்துவன எல்லாம் கொள்க. (இவை மறுமைக்கு நன்மையோ தீமையோ தாராமையின் 'வெறுவினை' எனப்பட்டன.)

எல்லா வினையும் இரு வினையுள் அடங்குமேயன்றி, வெறு வினை கூட்டி மூவினை என்று நூல் வழக்கு இல்லையே எனின், பட்டணத்துப் பிள்ளையார், வினைகளை வரம்பு செய்யுமிடத்து,

'செய்தன சிலவே; செய்வன சிலவே;
செய்யா நிற்பன சிலவே; அவற்றிடை
நன்றென்ப சிலவே; தீதென்ப சிலவே;
ஒன்றினும் படாதன சிலவே'.

- என மூவினை கொண்டார். அன்றியும் பரிமேலழகர் பயன்வினை, வெறுவினை என இரண்டு கொண்டு, பயன்வினையைப் பல விடத்தினும் பலவாக விரித்து, வெறுவினையை,

'வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது' -கு. 377

என்பதனுள் கொண்டார். அன்றியும், மூவினை கொள்ளாக்கால், யாம் காட்டிய உதாரணங்களுக்கு வேறு விதி இல்லை என்க. அம்மூவினையுள்ளும் நல்வினையும் தீவினையும் சிலவே, வெறுவினை பலவே எனக்கொள்க. இக்கருத்து நோக்கியே அவர் நன்று தீது என ஒருமைப்பாலாகவும், ஒன்றினும் படாதன எனப் பன்மைப்பாலாகவும் கூறினர் என்க.

[வி-ரை: தான் முயன்று தொகுத்த பொருள்களைத் துய்க்க இயலாமை வெறுவினை எனக் கொள்க.

"வெறு முயற்சிகளால் பொருள்களைப் படைத்தல் அல்லது நுகர்தல் ஆகாது; அதற்கு ஊழ் வேண்டும்" -பரி, உரை]

3. அறிந்து செய்வினை அறியாது செய்வினை
அசேதனம் செய்வினை எனவே அமர்ந்து

அறிந்து செய்வினை, அறியாது செய்வினை - வெளி

[வி-ரை:

தூசியோடு பாலைப் பருகினான்.

பாலைப் பருகுதல் - அறிந்து செய்வினை;

தூசியை உண்ணல் - அறியாது செய்வினை.]

அசேதனம் செய்வினையாவது, அறிவற்ற பொருளினது வினை.

எ-டு:

விளக்குக் காட்டிற்று.

இருட்டு மறைத்தது.

விடம் கொன்றது.

கள்ளு மயக்கிற்று.

மருந்து பிழைப்பித்தது.

பூமி தாங்கிற்று.

ஆற்றுநீர் ஈர்த்தது,

தீச் சுட்டது.

காற்று அலைத்தது, உதிர்த்தது.

நிழல் ஓடிற்று, திரும்பிற்று, நீண்டது, குறுகிற்று.

கரும்பு இனித்தது.

வேம்பு கசத்தது.

- என வரும்.

4. தீவினை நல்வினை சிலமுறை திறம்பி

முறை திறம்பலாவது மாறுபட்டு நிற்றல்.

எ-டு:

சம்பந்தர் எண்ணாயிரவரைக் கழுவில் ஏற்றினார்.

சுந்தரர் ஆண்டவனைத் தூதாக அஞ்சாது நடத்தினார்.

அப்பர் தாம் கொண்ட (சமண) விரதம் அழித்தனர்.

சாக்கியர் கடவுளை நாடொறும் கல்லால் எறிந்தார்.

திண்ணனார் ஆண்டவன் தலையில் அடியால் மிதித்தனர்.

- இவை தீவினை நல்வினையாயின.

அநங்கன் அலரை அரனிடத்து இட்டான்.

இல்வலன் வாதாபி இருவரும் வந்த பெரியோர்க்கெலாம் வழிபடுமுறையே வழிபட்டிருந்தார்.

வேங்கை வரிப்புலிக்கு விடத்தைத் தீர்த்தான்.

பாம்புக்குப் பால் வார்த்தான்.

வலையனுக்குத் தூண்டில் வழங்கினன்.

கள்ளனுக்குச் சோறு இட்டான்.

-இவை நல்வினை தீவினையாயின.

நெஞ்சில் துறவார்' -கு. 276

'அடங்கலர்க்கு ஈத்த தானப் பயன்' சீவக. முத்தி-244

கணவன் இழந்தோர்கட்கும், கண்ணிருத்தித் திரியுமவர்க்கும் துயருக்கு இரங்கினன்.

-இவை போல்வனவும் அது. இவ்விரண்டனையும் கூட்டி அரனடிக்கு அன்பர் செய்யும்' 'விபரீதமாம்' எனப் பலரும் கூறினர்.

[வி-ரை: நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்' -கு. 276

நெஞ்சால் பற்றுது வைத்து, பற்றற்றார் போன்று தானம் செய்வாரை வஞ்சித்து வாழுமவர்போல வன்கண்மையை உடையார் உலகத்தில் இல்லை.

தானம் செய்வாரை வஞ்சித்தலாவது, யாம் மறுமைக்கண் தேவராதற் பொருட்டு இவ்வருந்தவருக்கு இன்னது ஈதும் என்று அறியாது ஈந்தாரை அதுகொண்டு இழிபிறப்பினராக்குதல். அவர் இழிபிறப்பினராதல்,

அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினல் அலறு முந்நீர்த்
தடங்கடல் நடுவுள் தீவு பலவுள அவற்றுள் தோன்றி
உடம்பொடு முகங்கள் ஒவ்வார் ஊழ்கனி மாந்தி வாழ்வர்
மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேல் மன்னர் ஏறே.

-சீவக. முத்தி. 244

என்பதனான் அறிக. -பரி. உரை.

இதனுள், வஞ்சித்து வாழ்வார்க்கு இல்லறத்தார் தானம் செய்தல்-நல்வினை தீவினையாயிற்று.

அரனடிக்கு அன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்
பரனடிக்கு அன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினில் பாலன் செய்த பாதகம் நன்மை ஆய்த்தே.
சிவ.சித்தி.எ.பா. 119

பாலன் - சண்டேசன். பிதாவைக் கொலை புரிந்தான் எனப்படுவானும் அவனே.

தலையிழந்தான் எவ்வுயிரும் தந்தான் பிதாவைக்
கொலை புரிந்தான் குற்றம் கடிந்தான் — உலகில்
தனிமுதன்மை பூண்டுயர்ந்தோர் வேண்டுவரேல் தப்பாம்
வினையும் விபரீத மாம். தண்டி, எடுத்துக்காட்டு ]

5. செய்யா இருவினை செய்வினை ஆகி

செய்யா இருவினை செய்வினை ஆகும் என்பது என்னை யெனின்,

'அறவினை யாதெனின் கொல்லாமை' -கு. 321

'நோன்புஎன் பதுவே கொன்றுதின் ஞமை'

அழுக்காறுமை, வெகுளாமை, பெரியாரைப் பிழையாமை முதலாக, விலக்கினவற்றைச் செய்யாமையே நல்வினை செய்தல்.

பெரியோரைக் காணில் இருக்கை எழாமை, எதிர் செல்லாமை;

ஒருவனையாறு ஈர்த்த வழியும் விடம் தீண்டின வழியும்

அவ்விடர் தீர்க்கும் வல்லன் தீராமை;

தலைவியைப் புல்லுதற்கு விதித்த நாளில் புல்லாமை;

முதலாக விதித்தனவற்றைச் செய்யாமையே தீவினை செய்தல் எனவரும்.

'துப்பின் எவனாவர் மன்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர்' -கு. 1165

என்பதுவும் அது.

[வி-ரை: துயர் வரவு நட்பினுள் ஆற்றுபவர் என்பது, நட்பாய் இருக்கும் காலத்திலேயே நண்பருக்குத் துன்பம் உண்டாதலைச் செய்பவர் என்னும் பொருளதாய், தூது அனுப்புதற்கு உரிய தோழி தலைவனிடத்துத் தூது அனுப்பாமையைத் தலைவி குறிப்பிடும் சந்தர்ப்பத்தில் அமைந்த சொற்றொடராதலின், இது போந்த பொருளால் செய்யா நல்வினை செய்யும் தீவினை ஆயினவாறு ]

6. செய்இரு வினையே செய்யா வினையாய்

செய்யிரு வினையே செய்யாவினை என்றது என்னெனின், மெய்யுணர்வு உடையோர் எவ்வினை செய்யினும் அவ்விருவினை செய்யாமையாகும் என்று ஆகமம் மறை எல்லாம் இயம்பும்.

இன்னும் பலவாம் இலக்கணம் பெறுமே

'இன்னும் பல' என்றதனுல்,

நடக்கின்றுன், படிக்கின்றுன் (நடந்துகொண்டே படிக்கின்றுன்) - எனக் கலத்தலும்,

உண்கின்றுன், உறங்குகின்றுன் (இவை ஒரே நேரத்தில் நிகழ்வன அல்ல) - எனக் கலவாமையும்,

விளக்குக்காட்டிற்று, கண்கண்டது - என ஒன்றனை விட்டு ஒன்று நில்லாமையும்,

சோற்றை முக்காற்கூறு உண்டு, காற்கூறு உண்டற்கு முன்னே ஒரு நிமித்தத்தால் உணல் ஒழிந்தான் - என அம்முக்காற்கூற்று வினை பயன்படுதலும்,

நெற்பயிர் முக்காற்கூறு முறையே வளர்ந்து, காற்கூறு விளைதற்கு முன்பே மழையின்றி விளைவு ஒழிந்தது - என அம்முக்காற்கூற்றில் சிறிதாயினும் வினை பயன்படாமையும் முதலாயின எல்லாம் கொள்க.

இவ்விரு சூத்திரவிதியும் தமிழ் வழக்கு அன்று; வடநூல் வழக்கு என்க. 17

## தொழிற்பெயர், முற்று, எச்சம் பற்றி ஒருசாரார் கருத்து.

82. தொழிற்பெயர் வினைமுதல் செயப்படு பொருளே
கருவி இடம்பெய ரெச்சம்முற்று ஆகலும்,
இருவகை முற்றும் ஈரெச்சம் ஆகலும்
இருவகை எச்சமும் முற்றே ஆகலும்
உளஎன மொழிப ஒரோவழிப் புலவர்.

[வி-ரை: தொழிற்பெயரானது எழுவாய், செயப்படு பொருள், கருவி, இடம், பெயரெச்சம், முற்று என்ற ஆறு நிலையில் வரும்; தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் ஒவ்வொன்றும் பெயரெச்சமாகவும் வினையெச்சமாகவும் வரும்; பெயரெச்சமும் வினையெச்சமும் ஒவ்வொன்றும் முற்றாகவும் வரும் என்று ஒருசாரார் கூறுவர்.]

'ஒரோ வழி' என்றதனால் எல்லாருக்கும் ஒப்பமுடிந்ததன்று. இக்கருத்து 'எழுத்துச் சொல்திரிபு இரண்டே யன்றி' (125) என்னும் சூத்திரத்தில் காட்டுதும்.

எ-டு:

பறவை பறந்தது;
அன்பரிடத்துக் கொடை தோன்றிற்று;
'தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்' - கு. 510

-எனத் தொழிற்பெயர் வினைமுதலாயிற்று;

உடுக்கை கிழிந்தது;
நடக்கை வந்தது;
புழுக்கல் உண்டான்;

-எனத் தொழிற்பெயர் செயப்படுபொருளாயிற்று;

விளக்குக் காட்டிற்று;

நோன்பிற்குக் காப்பு கட்டினான்;

மகற்குப் பொற்காப்பு அணிந்தான்;

எனக்கு இவ்வேல் காப்பு;

உனக்கு இவ்வரண் காப்பு;

அவற்கு இவ்வாள் காப்பு;

-எனத் தொழிற்பெயர் கருவியாயிற்று;

கிடக்கை உயர்ந்தது;

படுக்கை தாழ்ந்தது;

-எனத் தொழிற் பெயர் இடமாயிற்று;

பொருள் செயல்வகை (செய்யும் வகை)

வினை செயல்வகை (செய்யும் வகை)

'தோன்றலாறே' தொ. சொ. 160. (தோன்றும் ஆறே)

'உயிர்த்த லாறே' தொ. எ. 17. (உயிர்க்கும் ஆறே)

-எனத் தொழிற்பெயர் பெயரெச்சமாயிற்று.

'ஆய்தம் கெடுதல் ஆவயினான' தொ. எ. 200. (கெடுதல்-கெடுக)

'மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்' தொ. எ. 104. (நிலையல்-நிலைபெறுக) எனவும்.

'ஏற்றான்புள் ஊர்ந்தான் எயிலெரித்தான் மார்பிடந்தான்
நீற்றான் நிழல்மணி வண்ணத்தான்-கூற்றொருபால்
மங்கையான் பூமகளான் வார்சடையான் நீள்முடியான்
கங்கையான் நீள்கழலான் காப்பு' இவ்.பிர 2155

(காப்பு-காப்பாவான்) எனவும் தொழிற்பெயர் வினைமுற்றாயிற்று.

இவ்வாறு தொழிற்பெயராவது வினைமுதல் ஆதி முற்று ஈறாக ஆறு பொருள்பட்டது காண்க.

† உண்டான் சாத்தன் ஊருக்குப் போனான்.

என்புழி, உண்ட சாத்தன் ஊருக்குப் போனான் எனப் பொருள் படுதல் காண்க. இது வினைமுற்றுப் பெயரெச்சமானது.

ஏனை மூன்றும் நன்னூல் 'வினைமுற்றே வினையெச்சமாதலும்' (ந. 351) என்னும் சூத்திரத்தில் காட்டிய உதாரணங்களால் அறிக.

(உதாரணங்களில் மயிலைநாதர் காட்டியவை:)

வெறுத்த ஞானி வீட்டை அடைந்தான்;
சாத்தன் உழுது வந்தான்;

-என்புழி, வெறுத்தான் ஞானி, சாத்தன் உழுதான் எனப்பொருள் 'பட்டு ஈரெச்சமும் முற்றுதல் காண்க.

(வி-ரை: பிரயோகவிவேகம் 37 ஆம் காரிகை உரையில் 'பொருள் செயல் வகை; வினை செயல் வகை; தோன்ற லாறே; உயிர்த்த லாறே என்பனவற்றுள், செயல், தோன்றல், உயிர்த்தல் என்பன பெயரெச்சமாம்; அவை பொருள் செய்யும் வகை, வினை செய்யும் வகை, தோன்றும் நெறி, உயிர்க்கும் நெறி எனப் பொருள் விரிதலின் என்க. சென்ம பூமி, சென்ம நட்சத்திரம் என்னும் வடமொழியும் அது'' என்று கூறப்பட்டமை நோக்குக.

வினைமுற்று வினையெச்சமாதல்,

'மோயினள் உயிர்த்த காலை' அகநா-5 (மோந்து உயிர்த்த காலை) முதலியவற்றாலும்,

குறிப்பு முற்று வினையெச்சமாதல்,

உச்சிக்கூப்பிய கையினர் தற்புகழ்ந்து' முருகு.185

(கையினர்-கையினராய்) முதலியவற்றாலும்,

குறிப்பு முற்றுப் பெயரெச்சமாதல்,

'பெருவேட்கையேன் எற்பிரிந்து'

(வேட்கையேன்-வேட்கையுடைய) முதலியவற்றாலும் உணரப் படும். ந. 351 உரை.] 18

---

† நன்னூல் 351 முல்னிவர் தம் உரையில் எடுத்தாண்டுள்ளார்.

## வினை முற்றுப்பெயர் வகைகள்

83. வினைமுற் றுப்பெயர் விரிக்குங் காலை
வினைமுதல் செயப்படு பொருளே கருவி
இடமே தொழிற்பெயர் இவ்வைந்து[1] அன்றியும்
எட்டுஉருபு ஏற்றே எண்பொருள் ஆதல்[2]
ஈற்றயல் திரிதல்[3] ஈரெச்சம் ஆதல்[4]
ஈறுஇகரம் ஆதல்[5] அவ் ஈறுஇகரம் ஆயவை
வினைமுதல்செயப்படு பொருளொடு கருவி
இடம் வினை யெச்சமாய் இயங்குதல்[6] அன்றியும்
இன்னும் பலவகை எனவிளம் புவரே.

[வி-ரை: வினைமுற்றுப்பெயர் எனப்படும் வினையாலணையும்-பெயர் - எழுவாய், செயப்படுபொருள், கருவி, இடம், தொழிற்பெயர் என உருபு ஏலாமலேயே அப்பொருட் கண் வரும். மேலும் எட்டு வேற்றுமை உருபுகளை ஏற்று அவ்வெண் வேற்றுமைப் பொருளாக வரும். மேலும் ஈற்றுஅயல் திரிதலும், பெயரெச்சமாதலும், வினையெச்சமாதலும் உண்டு. வினையாலணையும் பெயர் ஈறு இகரமாதலும் உண்டு. அங்ஙனம் ஈறு இகரமாகிய வினை முற்றுப் பெயர்கள் - வினைமுதல், செயப்படுபொருள், கருவி, இடம், வினையெச்சம் என்பனவாக வருதலும் உண்டு. வினை முற்றுப் பெயர் இன்னும் பலவகைப்படுதலும் உண்டு.]

வினைமுதல் ஆதி எடுத்துக் கூறிப் பின்னும் ஈரிடத்துக் கூறுதல் என்எனின், முன்னது உருபு ஏலாமலே அப்பொருள்படும்; நடுவது உருபு ஏற்றே அப்பொருள்படும்; பின்னது விகாரப்பட்டே அப்பொருள்படும் என்க.

1. வினைமுதல் செயப்படு பொருளே கருவி
இடமே தொழிற்பெயர் இவ்வைந்து

எ-டு:

'தார்தாங்கிச் செல்வது தானை' - கு 767
'வினையே செய்வதுசெயப்படு பொருளே' - தொ. சொ. 112
'உலகத்தார் உண்டென்பது இல்லென்பான்' - கு. 850

- செல்வது, செய்வது, என்பான் என்பன வினைமுதல்.

'உடுப்பது, உண்பது' - கு. 166

'இல்வாழ்வான் என்பான்' -கு 41

- இவை செயப்படுபொருள்.

'வேல் அன்று வென்றி தருவது' - கு. 546

'வெல்வது அரண்' - கு. 748

-இவை கருவி.

'விளைவது நாடு' - கு. 732

யாம் இருப்பது உறையூர்

- இவை இடம்.

'உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு' - கு. 339

'பெறுமவற்றுள் யாம் அறிவது இல்லை' - கு. 61

- உறங்குவது, விழிப்பது, அறிவது - இவை தொழிற் பெயர்.

இங்ஙனம் முறையே வினைமுற்றுப் பெயர் இவ்வைந்தாதல் காண்க.

வி-ரை: பிரயோக விவேகம் 37ஆம் காரிகையுரையுள், "வினைமுற்றுப் பெயராகிய கிருதந்தம் கருத்தா ஆதியாதல் முதலாக ரூப பேதம் பொருந்தல் ஈறாக ஒன்பது இலக்கணமும் பெறும் என்றவாறு. 'ஆதி என்றமையால் கருமமும், பாவமும், கரணமும், அதிகரணமும் கொள்க.

'தார் தாங்கிச் செல்வது தானை' - கு. 767 'வினையே செய்வது' -தொ. சொ. 112 - என்னும் இரண்டும் அஃறிணையில் கருத்தாவான வினைமுற்றுப்பெயர்.

'எடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக் கெடும்' - கு, 166

- இவ்விரண்டும் கருமமான வினைமுற்றுப்பெயர்.

'உறங்குவது போலும் சாக்காடு உறங்கி

விழிப்பது போலும் பிறப்பு' - கு. 339

- இவ்விரண்டும் பாவமான வினைமுற்றுப் பெயர்.

'வேல் அன்று வென்றி தருவது' - கு 546

-இது கரணமான வினைமுற்றுப் பெயர்.

'பற்றியார் வெல்வது அரண்' - கு. 747

'ஆற்ற விளைவது நாடு' - கு. 732

'யாம் இருப்பது உறையூர்'

- இம்மூன்றும் அதிகரணமான வினைமுற்றுப் பெயர்.

'உலகத்தார் உண்டு என்பது இல் என்பான்' - கு. 850

என்பது உயர்திணையில் கருத்தாவான வினைமுற்றுப் பெயர்.

'இல்வாழ்வான் என்பான்' - கு. 41

என்பது உயர்திணையில் கருமமான வினைமுற்றுப் பெயர்.

இவற்றைத் தொல்காப்பியர்

'தொழில்நிலை ஒட்டும் ஒன்று' -சொ.70

என்பர். ஒழிந்தன வந்துழிக் காண்க" என்று கூறப்பட்டவற்றுள் 'வெல்வது அரண்' என்பதன் இலக்கணத்தில் கருத்துவேற்றுமை உண்மையும், ஏனைய இவ்வாசிரியருக்கும் உடன்பாடாதலும் காண்க.]

2. எட்டு உருபு ஏற்றே எண்பொரு ளாதல்

எ-டு:

'மாணடி சேர்ந்தார் வாழ்வார்' -கு.3

'ஒறுத்தாரை ஒன்றாக வையாரே' -கு.155

கொண்டானல் வாழ்ந்தாள் குலமகள்;

'ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம்' -கு.156

ஈன்றாளின் நீங்கினாள் இவன் நிமித்தம்;

கொண்டானது மாடு;
கொண்டாள்கண் இருந்தாள் குலமகள்;
இரப்பாய்! இச்சோற்றை ஏல்;

-என முறையே எட்டும் காண்க.

[வி-ரை: 'தார்தாங்கிச் செல்வது' -(கு. 767) முதலியன சுப் என்னும் பிரதமை ஏறி நீங்கிய வினைமுற்றுப் பெயராம் என்க.

'நெறி நின்றார் நீடு வாழ்வார்' - (கு.6) என உருபு ஏறி நீங்கல் வரும்.

'ஒறுத்தாரை ஒன்றாக வைபாரே' - (கு.155) 'இரப்பார்க்கு ஒன்று ஈவார்மேல் நிற்கும் புகழ்' - (கு.242) என உருபு பெறல் வரும்'' - பிரயோக விவேகம் 37 உரை.]

3. வினைமுற் றுப்பெயர் ஈற்றயல் திரிதல்

எ-டு:

ஊன் தின்பார் - 'ஊன் தின்பவர்' -கு 252
பெண்மை நயவாதான் - 'பெண்மை நயவாதவன்' -கு. 147
செய்வான் - 'செய்பவன்' -நன்.வினை.1
வேந்துசெறப்பட்டார் -வேந்து செறப்பட்டவர்' - கு. 895

இவற்றுள் ஈற்றயல் திரிதல் காண்க.

[வி-ரை: ''நயவாதான் - செறப்பட்டார் - தின்பார் என நேரே நில்லாமல், 'பெண்மை நயவாதவன்' - 'வேந்து செறப் பட்டவர்' - 'ஊன் தின்பவர்' என ஈற்றயற்கே ரூப பேதம் பொருந்தல் வரும்'' - பிரயோகவிவேகம் 37 உரை.]

4. வினைமுற் றுப்பெயர் ஈரெச்ச மாதல்

எ-டு:

நடந்த குதிரைகள்.
பிறந்த பிள்ளைகள்.

-இவை அன்பெறு அகரஈற்று அஃறிணைப் பன்மை வினைமுற்றுப் பெயர் பெயரெச்சமானது.

உண்பான் வந்தான்.

ஓதுவான் போயினான்.

- இவை வினைமுற்றுப் பெயர் வினையெச்சமானது.

[வி-ரை: வினைமுற்றுப்பெயர் ஈரெச்சமாதல் பிரயோக விவேக நூலார்க்கு உடன்பாடன்று போலும்.]

5. வினைமுற்றுப்பெயர் ஈறுஇகர மாதல்

எ-டு:

இவன் மானேந்தி.

இவன் பிறைசூடி,

இவன் கங்கையாடி.

- இவை ஏந்தினான், சூடினான், ஆடினான் என்னும் வினைமுற்றுப் பெயர் ஈறுஇகரமானது.

[வி-ரை: "மானேந்தி, பிறைசூடி, அம்பலத்தாடி, குடக் கூத்தாடி, நூலோதி, சடாதாரி, வேடதாரி, சோமயாசி - இவை உயர்திணைக்கண் இகரம் சேர்ந்து இறுதலாகிய வினைமுற்றுப் பெயர். சேர்ந்தாரைக் கொல்லி, நூற்றுவரைக் கொல்லி, ஞாயிறுகாணி - இவை அஃறிணைக்கண் இகரம் சேர்ந்து இறுதலாகிய வினைமுற்றுப் பெயர்" பிரயோகவிவேகம் 37 உரை.]

6. அவ்வீறு இகர மாயவை,
வினைமுதல் செயப்படு பொருளொடு கருவி
இடம்வினை யெச்சமாய் இயங்குதல்.

எ-டு:

மண்ணுணி வெண்ணெய் உண்டான்.

புழுதிஉணி கடித்தது.

ஞாயிறுகாணி எரித்தது

-இவை வினைமுதல்.

ஊருணி, பேயாடி.

- இவை செயப்படுபொருள்-

இவ்விளக்குக் கண்காட்டி.

இத்தகடு பேயோட்டி.

இச்சகடு தேரோட்டி.

- இவை கருவி,

இப்பானை நாழி பொங்கி.

இம்மரக்கால் குறுணி கொள்ளி

- இவை இடம்

அம்பலத்தாடி வந்தான்.

மயிலேறி நீங்கினன்.

வேலேந்தி வெகுண்டான்.

நூலோதி நுவன்றான்.

- இவை வினையெச்சம்.

இவை ஈறுஇகரமாயவை வினைமுதல் ஆதியாக முறையே காண்க.

[வி-ரை: புழுதிஉணி - ஒருவிடப் பூச்சி; ஞாயிறுகாணி - சூரியகாந்தக்கல். மண்ணுணி - திருமால். ஊருணி - ஊராரால் உண்ணப்படுவது. பேயாடி - பேயால் ஆட்டப்படுபவன், "மண்ணுணி, ஊருணி இவை முறையே கருத்தாவினும் கருமத்தினும் இகரம் சேர்ந்து இறும் வினைமுற்றுப்பெயர்".

பி. வி. 37 உரை ]

வினைமுற்றுப் பெயர் இன்னும் பலவாம்என விளம்புவரே

'இன்னும் பல' என்றதனால்,

'தாம் வீழ்வார்' (கு. 1103) - தம்மால் வீழ்ப்படுவார்;

'யாம் வீழ்வார், - எம்மால் விரும்பப்படுவார்;

'இல்வாழ்வான் என்பான்' (கு. 41)- எனப்படுவான்.

'உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம் (நல்வழி 29) -
உண்ணப்படுவது, உடுக்கப்படுவது;

- என உருபும் படுசொல்லும் தொக்கு வினைமுற்றுப்பெயராய் வினைமுதலாயும், படுசொல் தொக்குச் செயப்படுபொருளாயும் வருதல் முதலாயின எல்லாம் கொள்க.

[வி-ரை: "'தாம் வீழ்வார் மென்தோள்','இல்வாழ்வான் என்பான்','உடுப்பதூஉம் உண்பதூஉம்' என்னும் கருமமாய் நின்ற வினைமுற்றுப்பெயர் செயப்பாட்டு வினையோடு தோன்றுதும், பொருள் உரைக்குங்கால் தம்மால் வீழப்படுவார், இல்வாழ்வான் எனப்படுவான், உடுக்கப்படுவது, உண்ணப்படுவது எனச் செயப்பாட்டு வினையோடு தோன்றும்" பி. வி. 37 உரை] 19

## எச்சம் பற்றிய கருத்துக்கள்

84. எச்சம்என்று ஒன்றுஇல்லை இடைஅடை என்றும்[1]
வேறுஎச்சம் என்றுஇலை விகாரமுற்று என்றும்[2]
எச்சம்ஒன்று என்றும்[3] இரண்டே என்றும்[4]
தன்வினை பிறவினை இவ்விரண்டு என்றும்[5]
முப்பொழுது அறிதலான் மூன்றே என்றும்[6]
தலைமைஇல் தலைமை எனஇரண்டு என்றும்[7]
காரணம் காரியம் எனஇரண்டு என்றும்[8]
முதல்வினை சினைவினை எனஇரண்டு என்றும்[9]
இயல்பு திரிபு இரண்டே என்றும்[10]
விரியே தொகையே எனஇரண்டு என்றும்[11]
வினையெச்சம் ஒன்றையே வெவ்வேறு என்றும்[12]
ஈறுசொல் பற்றி இரண்டே என்றும்[13]
இன்னும் பலபல இலக்கண மாகச்
சொன்னார் சிலரே துணியார் பலரே.

இஃது எச்சம் என்பது ஒன்றனையே ஒரொருவர் ஓரோர் இலக்கணமாகக் கொண்டது கூறுகின்றது.

1. எச்சம் என்று ஒன்றுஇலே; இவை அடை

அட்ட சோறு, சொன்ன மொழி;
உண்டு பசி நீர்ந்தான், உறங்கி விழித்தான்;

இவை அடையாய் நிற்றலேயன்றி, வேறு பயன்படும் பொருள் இன்று ஆகலான் 'எச்சம் என்று ஒன்றுஇலே; அடைமொழியே' என்பர்.

2. வேறுஎச்சம் என்றுஇலே; விகாரமுற்று

உண்டான் சாத்தன், உழுதான் வந்தான் என்பன விகாரப்பட்டு உண்ட சாத்தன், உழுது வந்தான் என நிற்றலால், 'எச்சம் என்று ஒன்று இல்லே; விகாரமுற்றே' என்பர்.

3. எச்சம் ஒன்று

உண்ட, உண்டு, என்பன குறைவினையாதலால், எச்சம் என்பது ஒன்றே என்பர்.

4. எச்சம் இரண்டே

எச்சம் நிலேமொழிக் குறைவினையாய் ஒன்றே ஆயினும் வருமொழி நோக்கி இரண்டே என்பர்.

5. தன்வினே பிறவினே இவ்விரண்டு

[வி-ரை:

செய்த, செய்து - தன்வினே;
செய்வித்த, செய்வித்து - பிறவினே.]

6. முப்பொழுது அறிதலான் மூன்றே

[வி-ரை:

உண்ட, உண்டு - இறந்தகால எச்சம்.
உண்கின்ற, உண - நிகழ்கால எச்சம்.
உண்ணும் உண்ணிய - எதிர்கால எச்சம்.]

7. தலைமை இல்தலைமை என இரண்டு

தச்சன் செய்த தேர்,
உழுது பயன்கொண்டான் வறியன் - தலைமை.
அரசன் செய்த தேர்,
உழுது பயன்கொண்டான் வேந்தன்-இல்தலைமை.

இங்ஙனம் வருதல்பற்றித் தலைமை, இற்றலைமை (நேரிடையாக அமையாத தலைமை) என இரண்டே என்பர்.

8. காரணம் காரியம் என இரண்டு

மழை பெய்த நீர்,
புல்லின இன்பம் - காரணம்
சமைத்த அரிசி,
உண்ட சோறு - காரியம். இவை பெயரெச்சம்.
உழுது விளைந்த நெல் - காரணம்.

பிணி தீரக் குடித்தான் மருந்து - காரியம்; இவை வினையெச்சம்
இங்ஙனம் வருதல் பற்றிக் காரணம், காரியம் இரண்டே என்பர்.

9. முதல்வினை சினைவினை என இரண்டு

[வி-ரை:

சாத்தன் நொந்து கிடந்தான் - முதல்வினை.
சாத்தன் கண் நொந்து கிடந்தான் - சினைவினை.]

10. இயல்பு திரிபு எனஇரண்டே

மருவின நாள் - மரீஇய நாள்.
தழுவிக் கொண்டான் - தழீஇக் கொண்டான்.

என வருதல் பற்றி இயல்பு, திரிபு என இரண்டே என்பர்.

11. விரியே தொகையே எனஇரண்டு

பொருத தகர் - பொருதகர் (குறள். 486)
வரிந்து புனைபந்து - வரிப்புனைபந்து (முருகு. 68)

என வருதல் பற்றி விரி தொகை என இரண்டே என்பர்.

## 12. வினையெச்சம் ஒன்றையே வெவ்வேறு என்றல்

செய்து செய்பு முதலாயின வெவ்வேறு ஆதலால், இவை எல்லாவற்றையும் கூட்டி, வினையெச்சம் என்று ஒரு பெயரிடல் பொருந்தாது: அன்றியும் வினையைக் கொள்ளும் எட்டு உருபு களையும், உவம உருபுகளையும், பிறவற்றையும் வினையெச்சம் என்று பெயரிட்டு வழங்காமை காண்க என்பர். பெயரெச்சத் திற்கும் இஃது ஒக்கும்.

## 13. வினையெச்சம் ஈறுசொல் பற்றி இரண்டு

செய்து செய்பு முதலாக ஈறுபற்றி வருவன எல்லா வற்றையும் ஒன்றாக்கி, வான் - பான் - பாக்கு - பின் - முன் - கால்-கடை-வழி - இடத்து முதலாகச் சொல் பற்றி வருவன எல்லாவற்றையும் ஒன்றாக்கி, வினையெச்சம் என்பது இரண்டே என்பர்.

[வி-ரை:

'செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்குஇன வினையெச் சம்பிற
ஐந்துஒன்று ஆறுமுக் காலமும் முறைதரும்.' - ந. 343

'செய்து செய்யூ செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செய செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி.'
-தொல்.சொ.230

'பின்முன் கால்கடை வழியிடத்து என்னும்
அன்ன மரபின் காலம் கண்ணிய
என்ன கிளவியும் குறிப்பே காலம்' - தொல். சொ. 231

என்ற நூற்பாக்களை நோக்குக.]

இன்னும் பலபல இலக்கண மாகச்
சொன்னார் சிலரே; துணியார் பலரே.

'இன்னும் பலபல' என்றதனால் செயற்கு என்பதனை வினையெச்சம் என்றும், உருபு என்றும், நீர் பொய் கூறியபின் மெய் கூறுவார் யார்' என்பதனைக் கூறினால் என்று ஒரு சொல்லாக்கி வினையெச்சம் என்றும், இரு சொல்லாக்கிப் பெயர் கொண்ட பெயரெச்சம் என்றும் கூறுதல் முதலாகப் பல கூறுவர் என்றும் கொள்க. 20

'இவற்றுள் ஒன்றனைத் தள்ளி ஒன்றனைக் கொள்ளற்க; இவை எல்லாவற்றையும் கொள்க' என்னும் பொருள்படச் 'சிலர் பலர்' என்றும்.

## பொது வினைகள்

85. வேறுஇல்லை உண்டுயார் வேண்டும் தகும்படும்
வினைபெயர் எச்சம் வியங்கோள் பத்தும்
திணைபால் இடம்எலாம் செல்லும் என்ப.

யார் என்னும் வினாவினை உயர்திணைப் படர்க்கைக்கு மாத்திரம் உரித்தன்றோ எனின்,

'நானார் என்உள்ளம்ஆர் ஞானங்கள்ஆர்
என்னைஆர் அறிவார்' -திருவா. கோத்தும் 2

என்றும்,

'ஊதைகூட் டுண்ணும் உகுபனி யாமத்தெம்
கோதைகூட் டுண்ணிய தான்யார்பன் - போதெலாம்
தாதொடு தாழுந்தார்க் கச்சி வளநாடன்
தூதொடு வாராத வண்டு'

என்றும்,

இக்காரியம் செய்தற்கு நீ யார் என்றும், அஃறிணை இருபாற் கண்ணும், ஏனை ஈரிடத்தினும் வருதலின், எல்லாவற்றிற்கும் உரித்து என்க.

வேண்டும் முதல் மூன்றும் முற்றிற்கும் எச்சத்திற்கும் பொதுவாய் செய்யும் என்னும் வாய்பாடு அன்றோ எனின்,

'ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர்,  - கு 653
யான் போகல் வேண்டும்;
நீ உணர்த்தல் வேண்டும்;

—என உயர்திணைப் பல்லோர்படர்க்கை தன்மை முன்னிலைக்கண் வருதலின் அன்று என்க.

இம்மூன்றும் ஒருபொருட் கிளவியாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப் பொருள்பட்டே நிற்கும் என்க. தேற்றப் பொருளாவது, இக்காரியம் செய்தலே-தக்கது, தகுதி, பொருத்தம், துணிவு, தெளிவு, நன்மை, அமைதி, முடிவு, வேண்டுவது; இக்காரியம் செய்யாமை-வழுவே, இழிவே, தீமையே, சிறுமையே, குற்றமே எனப் பொருள்படுதல்.

'இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்'  -தொ.சொ.33
'இன்னென வரூஉம் வேற்றுமை உருபிற்கு
இன்என் சாரியை இன்மை வேண்டும்'  - தொ. எ. 131
'நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும்'  - கு 960
வேறுவினைப் பல்பொருள் தழுவிய பொதுச்சொலும்
'வேறவற்று எண்ணும்ஓர் பொதுவினை வேண்டும்' - ந. 389

எனவும்,

இவரால் இக்காரியம் செய்யத் தகும்;
இக்கூழ் அருந்தத் தகும்;
இச்சோறு உண்ணத் தகும்;
இந்நீர் குடிக்கத் தகும்;

எனவும்,

'முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை அஞ்சப் படும்'  -கு 824

'இளையர் இனமுறையர் என்றிகழா நின்ற
ஒளியோ டொழுகப் படும்' –கு. 698
'கற்றறிந்தோரைத்-தலைநிலத்து வைக்கப்படும்' –நாலடி 133
கீழ்களைச் செய்தொழிலால் காணப்படும்' –நாலடி 350

எனவும்,

இருவினைக்குத் தக்க உடல்;
உள்ளப்படுவன — — ...
கொள்ளப்படாது மறப்பது அறிவில் என் கூற்றுக்களே'
– கோவை 87

எனவும் வரும். இங்ஙனம் வரும் செய்யுள்கட்கு எல்லாம் நச்சினார்க்கினியர், சேனாவரையர், பரிமேலழகர், உரையாசிரியர் முதலாயினர் முற்றாயும் எச்சமாயும் பொருள் உரைக்கின் வழுவாம் என்று கருதி, வியங்கோள் பொருட்டு என்றும், விதிப் பொருட்டு என்றும், தகுதிப் பொருட்டு என்றும், வேண்டுவது என்றும் தமக்கு வேண்டியவாறே பொருளெழுதிச் சொற்குணம் வாளா போயினர். (இப்பகுதி நன்னூல் 339ஆம் நூற்பா உரையுள் முனிவரால் எடுத்தாளப்பட்டுள்ளது.)

வேறு, இல்லை, உண்டு என்பனவற்றை நன்னூலார் விரித்தலின் விரித்திலம் என்க. (ந. 339) ஏனைய வெளி.

உண்டு என்பது முறை இறந்து தன்மை முற்றாயும், எச்சமாயும், உள் என்னும் முதல்நிலையாயும், பகுபதமாயும், உண்மை என்னும் தொழிற்பெயராயும், பகாப்பதமாயும், உண் என்னும் முதல் நிலையாயும் திரிதல் நோக்கி முதலினும் ஈற்றினும் திரிபு பட்டுக் கிடக்கச் (வேறில்லையுண்டியார்) சூத்திரம் செய்தனம்.

[வி–ரை: யார் – இல்லை – உண்டு – வேறு என்ற பொது வினைகளின் விளக்கமும் யார் என்பதன் எடுத்துக்காட்டுக்களும் 42ஆம் காரிகை உரையிலும், வேண்டும் – தகும் – படும் என்பன-வற்றின் விளக்கங்களும் எடுத்துக்காட்டுக்களும் 41ஆம் காரிகை உரையிலும் பிரயோகவிவேக நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. அந்நூல் காட்டிய எடுத்துக்காட்டுக்களில் ஈண்டும் சில கொள்ளப்பட்டுள்ளன.

தொல்காப்பியனார், 'முன்னிலை வியங்கோள்' (சொ. 224) என்ற நூற்பாவில் இன்மை செப்பல், வேறு என்பனவற்றைப் பொதுவினையாகக் குறிப்பிட்டுள்ளார். அவர் காலத்தில் உண்டு என்பது ஒன்றன்பால் நிகழ்காலவினை பிற்காலத்திலேயே அது பொதுவினையாயிற்று. அங்ஙனமேயே, யார் என்ற உயர்திணைப் பொதுக் குறிப்புவினையும், தொல்காப்பியர் காலத்துப் படர்க்கைக்கே வந்த வியங்கோளும் பிற்காலத்தில் பொதுவினையாயின. வினையெச்சமும் பெயரெச்சமும் பொது வினையாதலை அந்நூற்பாவிலேயே தொல்கப்பியனார் சுட்டி யுள்ளார். பிரயோகவிவேகத்தை ஒட்டி இவர் பத்தினைப் பொதுவினை என்று விளக்கியுள்ளார்.] 21

## வினையியற்றுப் புறனடை

36. வினைச்சொல் இலக்கணம் விளம்பில்அள வில்லை
ஆயினும் ஐந்தனுள் அறிந்துஅடக் குகவே.

இது புறநடை; புறனடை என்பாரும் உளர். ஐந்தும் முற்கூறினும். [புறத்தே நடத்தல் புறநடை; புறத்தே அடுத்தல் புறனடை.]

எ-டு:

'பேய்கண் டனையதொன் றுகிநின் றுன்அப் பெருந்தகையே' - கோவை 84

'தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று' - கு. 932

'புறம்குன்றி கண்டனைய ரேனும்' - கு. 227

எனவும்,

'மயில்கண் டன்ன மடநடை மகளிர்' - முருகு 205

'சேய்கண் டனையன்' - கோவை 84

எனவும்,

'பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு' -முருகு 2

'பொருளிலார்க்கு, இவ்வுலகு இல்லாகி யாங்கு' -கு. 247

'அறிதோ றறியாமை கண்டற்றால்' - கு. 1110

எனவும் இங்ஙனம் பெரும்பாலும் வரப்பட்ட மூவகை வினைக்கும் (முற்று, பெயரெச்சம், வினையெச்சம்) தமக்கு ஏற்றபடி பொருள் விளங்குதற்கேற்ற சொல்லெல்லாம் விரித்து எழுதிச் சொற்குணம் வாளா போயினர்.

'வெகுளி, கணமேயுங் காத்த லரிது' - கு. 29

'புறங்குன்றி கண்டனைய ரேனும்' - கு. 227

இவற்றிற்கு ஆனாலும் - ஆயினும் எனப் பொருள் எழுதி வாளா போயினர். [கணமேயும் - கணமேயானாலும். பரி.]

நச்சினார்க்கினியர் நன்னூலார் முதலாயினார் இயற்கை முதனிலை ஆ, போ என்றே இருக்கும் என்றார். தொ. சொ. 230 நச். ந. 237.

திருவள்ளுவர், பரிமேலழகர் முதலாயினார் இயற்கை முதல்நிலை ஆகு, போகு என்றே இருக்கும் என்றார். - குறள் 371. பரி.

கல் - வில் - நில் எனவும்,

ஒல் - கொல் - செல் - சொல் - புல் - வெல் எனவும்,

குற்றொற்று முதல்நிலைத் தனிவினைகள் விகற்பமின்றி ஒரு படித்தாய் இருக்கவே, இவற்றுள் வியங்கோள் விகுதி பொருந்தில், கற்க - விற்க - நிற்க எனவும், ஒல்க - கொல்க - செல்க -சொல்க- புல்க - வெல்க எனவும் விகற்பித்துப் பலபடித்தாயின. இது மட்டோ?

இம் முதல்நிலைகள் செய என் எச்சமாயின், கற்க என்னும் வியங்கோள் தானே எச்சமாகியும், அல்வாறன்றி வேறுபட்டு, ஒல்ல - கொல்ல - செல்ல என எச்சமாகியும் வந்தன.

இதுமட்டோ? இம் முதல்நிலைகள் வினையாகாது கல்லை உருட்டினன், வில்லை வளைத்தான்,

கொல் செய்த கூர்வாள் [கொல் - கொல்லன்]

'செல் அரித்த ஓலை' (திரு - கல) [செல் - கறையான்]

'சொல் அருஞ்சூல் பசும்பாம்பின்' (சீவக. 53) [சொல் - நெல்]

'புல் தலை காண்பரிது' - கு. 16

எனப் பெயராயின. இது மட்டோ?

இவை தொழிற்பெயராங்கால்,

கற்றல் - கற்குதல் - கற்பு - கல்வி எனவும்,

கோறல் - கொல்லுதல் - கொல்லல் - கொலை எனவும் வேறுபட்டன. இதுமட்டோ? இவை பிறவினை யாங்கால், கற்பி, நிற்பி, நிறுத்து, நிறுவு, நிறு, நிலைப்பி, எனவும், செல்வி, செலுத்து எனவும் வேறுபட்டன.

'நிறு' என்பது உயிரீற்று முதல்நிலை அன்றோ எனின், நீ நில் என்னும் உயிரீற்று முதல்நிலை தானே ஒன்றனை நிற்கச்செய் என்னும் பொருள்படத் திரிந்ததென்க. (நில் - தன்வினை; நிறு - பிறவினை;) இங்ஙனம் பலபல முதல்நிலைக் குணங்களை விரிக்கின் பெருகும். அமைக.

எழுத்து என்னும் தொழிற்பெயர் அப்பொருளைவிட்டுப் பால்பகா அஃறிணைப் பொதுப்பெயராய்' அப்பொருளை விட்டு ஓவியம் முதலியன போலன்றி அகரம் னகரம் முதலியன வடிவை உணர்த்தும் சிறப்புப் பெயராய், அப்பொருளை விட்டு ஒலியை உணர்த்தும் ஆகுபெயராய், அப்பொருளைவிட்டு அவ்வொலியினது இலக்கணத்தை உணர்த்தும் இருமடி ஆகுபெயராய், அப்பொருளை விட்டு அவ்விலக்கணத்தை உணர்த்தும் நூலினை உணர்த்தும் மும்மடி ஆகுபெயராய், அப்பொருளை விட்டு 'இங்ஙனம் கூறிற்று எழுத்து, இங்ஙனம் அறிவித்து எழுத்து' எனக்கருமக் கருத்தாவையும், கருவிக்கருத்தாவையும் உணர்த்தும் நான்மடி ஆகுபெயராய் நின்று பல பொருள்பட்டது காண்க. இங்ஙனம் பலபல தொழிற்பெயர்க் குணங்களை விரிக்கின் பெருகும். அமைக

[வி-ரை:

எழுதப்படுவது எழுத்து - தொழிற்பெயர்.

எழுதப்பட்ட வடிவம் எழுத்து - பொருட்பொதுப் பெயர்.

எழுதப்பட்ட அகரம் முதலியன - சிறப்புப் பெயர்.

அகரம் முதலியவற்றின் ஒலி வடிவம் - ஆகுபெயர்.

அகரம் முதலியவற்றின் ஒலியிலக்கணம்-இருமடி ஆகுபெயர்.

அவ்வொலியிலக்கணம் கூறும் நூல் - மும்மடி ஆகுபெயர்.

எழுத்துக் கூறப்பட்டது என எழுத்திலக்கணம் கூறும் நூல் கருமக்கருத்தா ஆதலும், எழுத்து அறிவித்தது என எழுத்திலக்கணம் கூறும் நூல் கருவிக்கருத்தாவாதலும் நான்மடி ஆகுபெயர் என்பது விளக்கப்பட்டது.]

இனி, முற்று எச்சங்களை விரிக்கின் பெருகுதலானும், தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களிலும், திருவள்ளுவர் முதலிய இலக்கியங்களினும் சிலசில விரித்தலானும் எழுதிலம். இங்ஙனம் வருதல் பற்றி 'அளவிலே' என்றும். அநவத்தையோ (கணக்கிடற்கியலாதோ) எனபாரை நோக்கி 'ஐந்து' என்றும். ஐந்தன்மேல் ஆறு ஏழ் முதலாகக் கொள்வாரும் சிலர். ஐந்தன்கீழ் நான்கு மூன்று முதலாகக் கொள்வார்கள் சிலர். அவர்களை நம்பற்க என்பது தோன்ற, அடக்குக என்னுது 'அறிந்து' என்றும். அவர்கள் மதம் கூறி மறுக்கில் பெருகும். அதனுல் அமைக.

[வி-ரை: தொல்காப்பியனுர் முதனிலையைத் தொழிற்பெயர் என்றுர். அவருக்கும் நன்னூலார் முதலாயினாருக்கும் வினையானது முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்ற மூவகைத்தாதலே கருத்தாகும்.] 22

வினையியல் முற்றும்.

## ஒழிபியல்

## தமிழில் வடமொழி

87. பொதுஎழுத்தானும் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைந்தும்மொழி பெயர்த்தும்
பொதுஎழுத் துள்ளும் பொதுவாய்த் திரிந்தும்
தமிழ்ச்சிறப்பு எழுத்துஐந் தானும் திரிந்தும்
மொழிமுதல் இடைகடை எனும்மூன்று இடத்தும்
தோன்றல் முதலா விகாரம் தோன்றியும்
வருமே தமிழில் வடமொழி என்க.

எ-டு:

*மணி - பொது எழுத்து;*

*நதி - சிறப்பெழுத்து;*

*ஆதி - ஈரெழுத்து;*

*பிறிதின் இயைபு நீக்கம், பிறிதின் இயைபின்மை நீக்கம் [அந்நிய யோகவியவச்சேதம், அயோகவியச்சேதம் என்பன வற்றின் மொழிபெயர்ப்பு,* -பி.வி.50-இ.வி.323]

*மாலை, நாரி - [மாலா, நாரீ] என்பன பொது எழுத்துள்ளும் பொதுவாய்த் திரிந்தன.*

*அற்புதம் விகற்பம் - [அத்புதம், விகல்பம் என்பனவற்றின் திரிபு]*

*சிவன், நாராயணன் - [சிவ: நாராயண:- திரிபு]*

*தமிழ், அமிழ்தம் - [திரமிடம், அமிர்தம் - திரிபு]*

*தெய்வம், யந்திரஊர்தி - [தைவம், யந்த்ரஊர்தி - திரிபு*

*கொங்கணம் - [கோங்கணம் என்பதன் திரிபு]*

இவை முறையே ற, ன, ழ, எ, ஒ என்னும் தமிழ்ச் சிறப்பெழுத்து ஐந்தானும் திரிந்தன.

உலகம் - [லோக:- மொழி முதற்கண் தோன்றல்]

தத்துவம் - [தத்வம் - மொழி இடைக்கண் தோன்றல்]

வாக்கு - [வாக் - மொழிக்கடைக்கண் தோன்றல்]

இடபம் - [ரிஷபம் - மொழி முதற்கண் திரிதல்]

விடம் - [விஷம் - மொழி இடைக்கண் திரிதல்]

இராமன் - [ராம:- மொழிக்கடைக்கண் திரிதல்]

பரிசம் - [ஸ்பரிசம் - மொழி முதற்கண் கெடுதல்]

முத்தி - [முக்த்தி - மொழி இடைக்கண் கெடுதல்]

தநு - [தநுஸ் - மொழிக்கடைக்கண் கெடுதல்]

என முறையே காண்க.

ஆக்கினை - ஆணை; விஞ்ஞானம் - விண்ணானம்; விருத்தம்-வட்டம்; நிருத்தம் - நட்டம்; திடம் - திட்டம்; விபு - விம்மு இங்ஙனம் இன்னும் பரந்து வருவன எல்லாம் இவ்விதியுள் அடக்கிக்கொள்க.

[வி-ரை; இச்செய்திகளில் பல பிரயோகவிவேகம் இரண்டாம் காரிகை உரையில் விளக்கப்பட்டுள்ளன.] 1

## தமிழ்ச்சொல் அமைப்பு

88. பொதுஎழுத் தானும் சிறப்புஎழுத் தானும்
ஈரெழுத் தானும் இலங்கும் தமிழ்மொழி.

எ-டு:

நிலம், நீர் - [பொது எழுத்து]

ஒன்று, எறி - [சிறப்பெழுத்து]

பழம், வாழை - [ஈரெழுத்து]

என முறையே காண்க.

[வி-ரை: பொது எழுத்து என்பவை தமிழிற்கும் வட மொழிக்கும் பொதுவான எழுத்துக்களாம். சிறப்பெழுத்து என்பவை தமிழிற்குச் சிறப்பாக உள்ள - ற, ன, ழ, எ, ஒ என்ற எழுத்துக்களாம்.

"நிலம் நீர் வளி விண் எனவும், என்று எறி ஒன்று ஒறு கொன்றை கொறி வென்றி வெறி எனவும், வாழை மழை சோறு கூறை எனவும் தமிழ் இம்மூன்று பாகுபாடும் பெறும் ஆயினும், இவை வடமொழிக்கண் சென்று வழங்கித் திரியாதும் திரிந்தும் பொருள் ஒன்றுகாமையின் தற்பவம் தற்சமம் ஆகா என்க." பி. வி. 2. உரை. 2

## மொழி வருவித்து முடித்தல்

89. அதிகா ரத்தால்[1] அவாய்நிலை தன்னுல்[2]
ஓர்சொற் பொருளை உறுத்தற் பொருட்டால்[3]
செய்யுள் விகாரத் தால்[4] சிதைந் ததனுல்[5]
அறுவகைப் பொருளின் அத்தொகை தன்னுல்[6]
இடையில் உள்ளன எல்லாம் மறைதலால்[7]
இன்னும் பலபல ஏதுவி னுலும்[8]
மொழிவரு வித்து முடித்தனர் கொளலே.

1. அதிகாரத்தால் மொழி வருவித்தலாவது

அவற்றுள் அ, இ, உ, எ ஒக்குறில் ஐந்தே' – ந. 64 என்புழி நின்ற 'அவற்றுள்' என்னும் சொல்லை, 'சிறப்பினும் இனத்தினும்' ந. 74 என்ற நூற்பா முடியப் பத்துச் சூத்திரத்திற்குத் தனித் தனியே வருவித்தலும்,

'அன் ஆன் இறுமொழி ஆண்பால் படர்க்கை' – ந. 325 என்புழி நில்லாத வினை வினைக்குறிப்பு உடன்பாடு எதிர்மறை முற்றுக்களாம் என்னும் சொற்கள் முதலாகப் பல சொற்களை 'வேறு இல்லை உண்டு ஐம் பால்மூ விடத்தன' ந. 339 என்னும் சூத்திரம் வரை பொருத்தம் அறிந்து தனித்தனியே வருவித் தலும் போல்வன.

[வி-ரை: ஓரிடத்தில் நின்ற சொல் பல சூத்திரங்களோடு சென்று இயைதலை அதிகாரம் என்று குறிப்பிடும் கருத்துப்பற்றி இவ்வெடுத்துக்காட்டுக்கள் தரப்பட்டுள்ளன. 'அதிகாரத்தால் வருவித்து முடிப்பதனை அனுஷங்கம் என்று கூறுவர்'. – பி.வி. 50 உரை]

2. அவாய்நிலையான் மொழி வருவித்தலாவது

'இயம்புவன் எழுத்தே' – யான் –ந 56

'அறைகுவன் சொல்லே' - யான் –ந 258

என்றாற்போல்வன.

[வி-ரை: தொடர் மொழிகள் அவாய்நிலை முதலிய மூன்று பொருத்தத்தான் புணர்தல் 105 ஆம் நூற்பாவில் விளக்கப்படும். 'அவாய் நிலையான் வருவித்து முடிக்கும் சொல்லை அத்தியாகாரம் என்று கூறுவர்'. பி.வி.50 உரை.]

3. ஓர் சொற்பொருளை உறுத்தற் பொருட்டால்
மொழி வருவித்தலாவது

ஊழ் என்னும் சொற்கு விதி, பொறி, வினை முதலிய சொற்களுள் ஒன்றனைக் கூறலே பொள்படுதலாய் இருக்க, ஊழ்–அஃதாவது இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி' என்றாற்போல்வன.

[வி-ரை- நிருவசனம் அல்லது நிருத்தி என்பதாவது ஊழ்–அஃதாவது இருவினைப்பயன் செய்தவனையே சென்று அடைதற்கு ஏதுவாகிய நியதி என ஒரு சொற்கு வாக்கியத் தொடராகப் பொருள் உணர்த்துவது என்க. குடந்தம் என்பதற்குக் 'குடந்தம் கைகூப்பி 'மெய்கொட்டி நிற்றல்' எனச் சூத்திரமாகக் கிடப்பதூஉம் அது. இவ்வாறு மெய்பாட்டியலுள்ளும், தண்டியலங்காரச் சூத்திரத்துள்ளும் ஒவ்வொருசொற்களைப் பிரித்துப் பிரித்துக் கூறுவர்'', -பி வி. 50 உரை.]

4,5. செய்யுள் விகாரத்தால் சிதைந்ததனுல் மொழி வருவித்தலாவது

'ஆகார இறுதி அகரஇயற்றே' -தொ் எ.221

'செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில்' -ந 340

'கருத்துப் பதப்பொருள் காட்டு' -ந 22

'பழியஞ்சிப் பாத்தூண்உடைத்தாயின் வாழ்க்கை' -கு.44

'துணைவலியும் தூக்கிச் செயல்' -கு. 471

என்பவற்றுள் அகரஇறுதி இயற்றே, செய்யும் என் வாய் பாட்டில், எடுத்துக்காட்டு, இல்வாழ்க்கை, சீர்தூக்கிச் செயல் என்ருற்போல்வன.

செய்யுள் விகாரத்தினும் சிதைந்ததனுனும் என இரு பொருள் கொண்டு இவ்வுதாரணங்களை முன்னதற்கு ஆக்கி, பின்னதற்குக்

'கழாக்கால் பள்ளியுள் வைத்தற்ருல் -கு.840

என்பதற்குப் பகரஈகாரம் முதலிய குற்றங்களை மிதித்து என்னும் சொற்களை வருவித்தல் போல்வன எனக் கொள்ளலும் ஒன்று. சிதைந்தது - இழிவுபட்டது.

[வி-ரை: "ஆகாரஇறுதி அகரஇறுதி இயற்றே' என்ஞது ஆகாரஇறுதி அகரஇயற்றே என்பதும், 'ஆதியது என்ப அநபிகிதகருத்தா அநபிகிதகருத்தா (பி. வி. 14) என்ஞது அநபி கிதம் என்பதும், 'செய்த செய்கின்ற செய்யும்என் வாய்ப்பாட்டில், என்ஞது பாட்டில் என்பதும், எடுத்துக்காட்டு என்ஞது காட்டு என்பதும், 'இல்வாழ்க்கை வழி எஞ்சல் என்ஞது வாழ்க்கை வழி எஞ்சல் என்பதும் 'சீர்தூக்கிச்செயல் என்ஞது தூக்கிச்செயல் என்பதும் சேடமாம். இவ்வாறு உரைத்ததனுல் பிறிதோரிலக்கணமும் கொள்ளுதல் உரைகாரர் மதம் என்க."
- பி. வி. 44 உரை.]

6. அறுவகைப்பொருளின் அத்தொகை தன்ஞல்
   மொழி வருவித்தலாவது

முறிமேனி என்புழி முறிபோலும்மேனி என்று அமையாது, மாவினது தளிரினது நிறத்தையும் அந்தளிரினது தட்பத்தையும் போன்று கண்ணுக்கும் மெய்க்கும் இன்பத்தைக் கொடுக்கும் மேனி என்ருற்போல்வன. அறுவகைப்பொருளிஞலும், அத்தொகை தன்ஞலும் என இருபொருள்கொண்டு, இவ்வுதாரணத்தை பின்னதற்காக்கி முன்னதற்கு உதாரணம் அறுவகைப்பொருளும் விரிந்து நின்றவிடத்தும் இங்ஙனம் மொழிகளை வருவித்தல்போல்வன எனக்கோடலும் ஒன்று.

வி-ரை தாயொடு மூவர் - தாயொடு கூடிய மூவர், கரும் பிற்குவேலி - கரும்பிற்குச் கட்டிய வேலி என்ருற்போல விரியிலும் மொழி வருவித்தல் காண்க.]

7. இடையில் உள்ளனஎல்லாம் மறைதலால்
   மொழி வருவித்தலாவது

'அயன் உயர் சதாசிவன் அதிகாரத்தார்' (சி. சி. 144) என்புழி அரி அரன் மகேச்சுரன் என (அதிகாரத்தார் என்பதஞல் வருவித்தல் போல்வன.

'பிருதிவி நாதம் பிறக்கும் மாயையின்'

'அஔ உயிரே'

'கன உடம்பாகும்'

என்ருற்போல்வனவும் அது.

[வி-ரை: முதலிலுள்ள பிருதிவியையும் இறுதியில் உள்ள நாதமான ஆகாயத்தையும் குறிப்பிடவே இடையிலுள்ள அப்பு, தேயு, வாயு என்பன கொள்ளப்படும்.

'அ ஔ' எனவே, இடையிலுள்ள ஆகாரம் முதல் ஓகாரம் ஈருகிய உயிர்கள் கொள்ளப்படும்.

'கன' எனவே, இடையிலுள்ள ஙகாரம் முதலாக றகாரம் ஈருகிய மெய்கள் கொள்ளப்படும்,

'அச்சு அல் என்பன பிரத்தியாகாரம் செய்த பெயர். பிரத்தியாகரித்தலாவது ககரம் முதல் னகரம் இறுவாய்ப் பதினெண் எழுத்திற்கும் ஆதியிலே நின்ற ககரத்தையும் அந்தத்திலே நின்ற னகரத்தையும் கூட்டி, கன எனப் பெயரிட்டாற்போல்வது; யரள வழள என்னும் ஆறெழுத்திற்கும் யள எனப் பெயரிட்டாற்போல்வது.' பி. வி. 4. உரை.]

## 8. இன்னும் பலபல ஏதுவினுன் மொழி வருவித்தல்

தொல்காப்பியப் பொருளதிகார உரையில் பெரும்பாலும் வரும். இங்ஙனம் விரிக்கின் பெருகும்.

[வி-ரை: அகச்செய்யுள்களுக்கும் புறச்செய்யுள்களுக்கும் கரும நிகழ்ச்சி கூறுமிடத்தும், கூற்றெச்சம் குறிப்பெச்சங்களை விரித்துக்கொள்ள வேண்டுமிடத்தும் பெரும்பாலும் மொழி வருவித்தல் நிகழுமாறு காண்க.]

'பிறிதும் ஆகுப காமம் காழ்க் கொளினே' - குறுந். 17

'நல்லார் புனைவரே' சி. போ. வாழ்த்து.

என்புழி யானும் அதுசெய்வேன் எனப் பொருள்கொள்ளுதல் குறிப்பு.

[வி-ரை: இத்தலைவியைத் தவறுமல் கோடற்பொருட்டு மடலேறுவேன் எனத் தலைவன் கருதியதாகப் பொருள் கொள்ளுதலும், 'கல்லால் நிழல் மலை, வில்லார் அருளிய, பொல்லார் இணை மலர், நல்லார் புனைவரே' ஆதலின் என் செயலும் முட்டின்றி முடிய விநாயகப் பெருமான் திருவடிகளை வணங்குவேன் எனப் பொருள் கொள்ளுதலும் குறிப்பு.]

'கருநாய் கவர்ந்த காலர் சிதகிய பானையர்' திவ். பிர. 3007. என்புழி ஆய் எனப் பொருள் கொள்ளுதல் வினையெச்சமானது வினைக்குறிப்பு முற்றுய்த் திரிந்தது.

'குறிப்பு முற்று ஈரெச்சமாகலும் உளவே' - (ந. 351) என்பதனுல் முற்று எச்சமாய்த் திரிந்தது அன்றோ எனின், அவர்

'அன்றி இன்றி என் வினை எஞ்சு இகரம்
தொடர்பினுள் உகரமாய் வரும்' - ந. 173

என்று கூறினர்; அதனை மறந்து கூறுதலால் அன்று என்க. அவர் இதுவேயன்றிப் பலவிடத்தினும் மறந்தார். அன்றியும் இறைவன் நீங்கலான எல்லா ஆசிரியர்க்கும்

'மறவி இனைய உடல்கொள் உயிர்க்குணம்' -ந. 452

என்பதனாற் பொது. அவரவர் மறவிகளை விரிக்கின் பெருகுதலானும், அறிதல் அருமையானும்' பெரியோர்க்குக் குற்றம் கூறினன் என்னும் குற்றம் வருதலானும் விரித்திலம் என்க. இம்மறவி வருதற்குக் காரணம் தன் வசம் சிறிதாயினும் இன்றி ஊழ் என்னும் பரவசாமாயே நடத்தல் என்க. இக்கருத்து நோக்கியே பாயிரத்துள்,

'மறப்பு எனும் பகைவன் வாரிக் கொண்டனன்,
என்றும். இ.கொ.6

'இரும்பார்க்கும் காலராய் ஏதிலார்க்கு ஆளாய்' -ந. 122

'சேனைத் தலைவராய்' - நா. 3

என்பன போல நின்றன கெடுதல் விகாரப்பட்டு நின்றன என்பாரும், ஆய் என்னும் மொழி வருவிக்க வேண்டும் என்பாரும் உளர். இங்ஙனம் வருவன எல்லாம் மொழி வருவித்தல் என்னும் இலக்கணமன்று.

இவ்விரண்டிற்கும் வேறுபாடு என்னெனின், முன்னது மொழி வருவித்தற்கு முன்பே சொல்லாவது பொருளாவது சொற்பொருள் கூடியாவது முடியாது கிடக்கும்; பின்னது மொழி வருவித்தற்கு முன்பே சொல்லும் பொருளும் முடிந்து கிடக்கும்.

[வி-ரை: கருநாய் கவர்ந்த காலர் சிதகிய பானையர் என்புழிக் காலராய் - பானையராய் என்றிருந்த வினையெச்சங்கள் காலர் - பானையர் என வினைமுற்றாய்த் திரிந்தன என்பது இவ்வாசிரியர் கருத்து. வினையெச்சமே வினைமுற்றாய்த் திரியும் என்னும நச்சினார்க்கினியரைப் பின்பற்றுபவர் இவர். 'அன்றி இன்றி' என்னும் நூற்பாவில் அவ்வினையெச்சங்கள் அன்று இன்று என முற்றாய்த் திரிதலை ஏற்றுக்கொண்ட நன்னூலார், வினையியலின் இறுதியில் வினையெச்சம் வினை முற்றாகும் என்று முன்பு

உட்கொண்டதற்கு மாருக 'வினைமுற்றே வினையெச்சமாகும்' என்ருர். இச்செயல் உயிர்க்குணமாகிய மறவியான் நிகழ்ந்தது என வழுவமைத்தார் இவ்வாசிரியர்.

'இரும்பார்க்குங் காலராய், ஏதிலார்க்கு ஆளாய்' சேனைத் தலைவராய்' என்பனபோலக் 'கருநாய் கவர்ந்த காலராய், சிதகியபானையராய்' என நின்றன கெடுதல் விகாரப்பட்டுக் காலர் பானையர் என நின்றன என்பார் வினையெச்சம் வினைமுற்ருய்த் திரியும் என்னும் ஒரு சாரார். வினைமுற்றே வினையெச்சமாய்த் திரியும் என்னும் ஒரு சாரார் காலர்-பானையர் என்பன இயற்கையான முற்றுக்கள் ஆதலின், இவற்றை வினையெச்சமாக்க ஆய் என்னும் மொழி வருவிக்க வேண்டும் என்பர்.

கெடுதல்விகாரமாவது மொழி வருவித்தற்கு முன்பு பொருள் முடியாது கிடப்பது: மொழிவருவித்தலாவது- மொழி வருவித்தற்கு முன்பும் சொல்லும் பொருளும் முடிந்து கிடக்கும் நிலைக்கண்ணேயே என்க, மொழி வருவித்தல் தெளிவிற்கும் விளக்கத்திற்குமே. 'கருநாய் கவர்ந்த காலர் சிதகிய பானையர்' மொழி வருவித்தற்கு முன் பொருள்முடியாது தனித் தனித் தொடராக இருத்தலின், இதற்கு மொழி வருவித்தே ஒரு தொடராக்கவேண்டுதலின், இதனைக் கெடுதல் விகாரமாகக் கோடலே ஏற்புடைத்து.

'கருநாய் கவர்ந்த காலர் சிதகிய பானையர்
பெருநாடுகாண இம்மையிலே பிச்சை தானும் கொள்வர்'

என்பதனை 'இரும்பார்க்குங் காலராய் ஏதிலார்க் காளாய்' 'சேனைத்தலைவராய்' என்னும் பாட்டுக்கள்போல ஆய் என்னும் ஆக்கம் கொடுத்து விரவாவினையெச்சமாக்குவர். இவ்வினை யெச்சங்களை வினையடை என்பர்'' பி. வி. 39. உரை.

பிரயோகவிவேக ஆசிரியரும் நச்சிஞர்கினியரைப் பின் பற்றி வினையெச்சமே வினைமுற்ருகும் என்னும் கருத்தினர் என்பது கொள்க.

'துணைவினை முற்றுமாய்ச் சிறக்கும்' - பி.வி 39] 3

## அளபெடை வகைகள்

90. இயற்கை அளபெடை செயற்கை அளபெடை
எழுத்துப்பே றளபெடை இசைநூ லளபெடை
ஒற்றுப்பே றளபெடை ஒரோவழிக் கூடில்
ஐந்தென மொழிப அளபெடை; அவைதாம்
குற்றெழுத் தளபெடை நெட்டெழுத் தளபெடை
ஒற்றெழுத் தளபெடை எனஒரு மூன்றாய்
மொழிமுதல் இடைகடை மூன்றினும் வருமே.

விளி, பண்டமாற்றுரைத்தல், புலம்புதல், முறையிடுதல், ஆதியிடத்துச் சொற்குப்பின் தோன்றுது கூடப்பிறத்தல் இயற்கை.

சீர்தளை வழுவின இடத்துச் சொல் பிறந்தபின் புலவன் பெய்துகொள்ளுதல் செயற்கை.

எழுத்துப்பேறு உயிர்மயங்கியல் முதலான இடங்களில் அராஅப்பாம்பு முதலிய சொற்களில் காண்க.

இசையளபெடை வழக்கினுள் காமரத்தாரிடத்தில் காண்க.

ஒற்றின்யும் செய்யுட்கெடின் ஒற்றை உண்டாக்கும்
குன்றுமேல் ஒற்றளபும் கொள்' மாபுராணம்.

என்பதனுல் ஒன்றிப்பேறளபெடை காண்க. இவ்விதி சிறு பான்மையாதலின் 'கூடில்' என்றும். எனவே நான்கும் பெரும் பான்மை என்க.

'பழூஉப்பல் அன்ன பருவுகிர்ப் பாவடி' - குறுந் 180

'நெய்போல் வதூஉம் - நாலடி 124

'நீங்கின் தெறூஉம்' - கு 1104

'துப்பாய தூஉம் மழை' - கு 12

'கூட்டி எழூஉதல் என்மனுர் புலவர்' -தொ. எ. 6

'ஆவயின் வரூஉம் வல்லெழுத்து மிகுதி'

'ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே' - தொ. எ 34

'இன்என வரூஉம் வேற்றுமை உருபிற்கு' - தொ. எ. 131

'ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும்' - ந. 335

'வடிவின் அளவின் வண்ணத்தின் வரூஉம்'

எனவும்,

'விராஅய்ச் செய்யாமை' -நாலடி. 246

'கழாஅக்கால்' -குறள். 840

'குன்று முட்டிய குரீஇப் போலவும்

'பரீஇ உயிர்செகுக்கும்' - நாலடி. 220

எனவும் வருவன எல்லாம் குற்றெழுத்து. இவ்விதி பெரும் பான்மையும் விளிமரபு சூத்திரங்களால் காண்க. ஏனை ஐந்தும் வெளிப்படை.

[வி-ரை இயற்கையளபெடை ஆவியும் ஒற்றும்' - ந. 101 என்ற நன்னூல் நூற்பாவிலும், அளபிறந்து உயிர்த்தலும்'- தொ. எ.38 என்ற தொல்காப்பிய நூற்பாவிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

செயற்கையளபெடை 'இசைகெடின் மொழி முதல்' ந, 91 என்ற நன்னூல் நூற்பாவிலும், குன்றிசை மொழி வயின்' தொ. எ,-41 'ஐ ஔ என்னும்' தொ,எ.- 42 என்னும் தொல்காப்பிய நூற்பாக்களிலும் சுட்டப்பட்டுள்ளது.

எழுத்துப் பேறளபெடை நன்னூலில் குறிப்பிடப்படவில்லை தொல்காப்பியத்தில் 'உம்மை எஞ்சிய' குறியதன் முன்னரும்' 'குற்றெழுத்திம்பரும்' ஏ என் இறுதிக்கு' வேற்றுமை— — —... ஒகரம் வருதல் ஆவயினான' - தொ. எ. 223, 26, 67, 77, 92, என்ற நூற்பாக்களில் விளக்கப்பட்டுள்ளது.

ஒற்றுப்பேறளபெடை 'ஙஞண நமன' ந - 92 என்னும் நன்னூல் நூற்பாவிலும் 'ஒற்றளபெடுப்பினும்' தொ. பொ. - 330 என்னும் தொல்காப்பிய நூற்பாவிலும் குறிக்கப்பட்டுள்ளது.

குற்றெழுத்தளபெடை 'மூவள பிசைத்தல்' தொ. எ. - 5 'நீட்டம் வேண்டின்' தொ. எ. - 6 'மகர உகரம்' தொ. எ. - 261 என்ற தொல்காப்பிய நூற்பாக்களால் பெறப்படுகிறது.

பழ - பழஉ என்பன போலாவாய், விரவி - விராஅய், கழுவா - கழாஅ, குருவி - குரீஇ எனத்திரிந்து அளபெடுத்தலின் வேறு கூறப்பட்டன. விளிமரபில் 'அளபெடை மிகூஉம்' (தொ. சொ. 225) 'அளபெடைப் பெயரே' (தொ. சொ. 135,41,49,) என்ற நூற்பாக்களை நோக்குக.

இனி, பிரயோகவிவேக நூலார்

''குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும் (தொ. எ. 41) என்னும் சூத்திரவிதி செயற்கை அளபெடைக்கல்லது இயற்கை யளபெடைக்குப் பொருந்தாமை தெற்றென அறிக. இயற்கை யளபெடைக்கு வடநூலால் சொன்ன வண்ணமேயாம். 'அளபு' இறந்து உயித்த (தொ. எ. 33) என்னும் சூத்திரவிதி சிறு பான்மை பொருந்தில் பொருந்தும் என்க. இரண்டு மாத்திரை-யாய்ப் பிறந்த நெட்டெழுத்துக்கள் மூன்று மாத்திரையாய் அளப்பெடுத்தலும் செயற்கையாம் ஆகலின், 'சிறுபான்மை' என்றாம். உவாஅப்பதினான்கு, இராஅப்பகல் என்னும் எழுத்துப்பேறுகள் 'குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்' காரியம் இல்வழி வந்த புலுதசந்தி - வடமொழியிலும் 'அக்நீ இஇஇ-இதி என வரும்.

இனி, வடநூலார் குறில் தனியே ஒரு மாத்திரையாய்ப் பிறப்பதோரெழுத்தும், நெடில் தனியே இரண்டு மாத்திரையாய்ப் பிறப்பதோரெழுத்துமாறுற்போலப் புலுதமும் தனியே மூன்று மாத்திரையாய்ப் பிறப்பதோரெழுத்தென்று கூறி, வேதத்துள் சந்தோபங்கம் வாராமல் குறில் நின்ற இடத்தும் நெடில் நின்ற இடத்தும் புலுதம் ஆதேசமாக வருவதல்லது குறிலும் நெடிலும் போலப் பொருள் வேறுபடுக்க வாராதென்றும், உலக வழக்கில் சம்புத்தி சம்போதனத்தில் வரும் என்றும், சுலோக பதமான சம்புத்தியில் குறிலும் நெடிலும் இயல்பாய் நிற்கும் என்றும், சேய்மைவிளியிலே தாளஓசை மணியோசை என்கின்ற அநு கரணத்தொனி போலும் என்றும் கூறுவர். அவர் குறில் நின்ற விடத்தும் புலுதம் வரும் என்பது பற்றித் தொல்காப்பியர்.

'ழகர உகரம் நீடிடன் உடைத்தே
உகரம் வருதல் ஆவயி னான' -தொ.எ. 261

எனச் சூத்திரம் செய்து,

'பழூஉப்பல் லன்ன பருவுகிர்ப் பாவடி' -குறுந் 180

என உதாரணம் காட்டுவர். அதுவே உபலக்கணமாக நாலடியில்

'விராஅய்ச் செய்யாமை நன்று' -நா. 246

'நெருப்பழல் சேர்ந்தக்கால் நெய்போல்வ தூஉம்' -நா. 124

என்றும், திருவள்ளுவர் குறளில்,

'துப்பாய தூஉம் மழை' -கு. 12

'நீங்கில் தெறூஉம் குறுகுங்கால்' -கு. 1104

என்றும் குற்றெழுத்து நிற்கும் இடத்தும் சிறுபான்மை அசை நிலையாக அளபெடுத்து வந்தது காண்க. குரீஇ, உடீஇ என வரும் இறுதிநிலை அளபெடையும் அது.

இனித் தமிழ் நூலார்,

'நாறே ஒ ஒ ஒ நா றென்பாள் துடங்கிடைக்கும் மென்
மாறேமால் அன்றளந்த மண்' [முலைக்கும்

'உப்போஒஒ எனஉரைத்து மீள்வாள் ஒளிமுறுவற்(கு)
ஒப்போநீர் வேலி உலகு'

என இசை விளி பண்டமாற்றாயினவற்றை இயற்கையளபெடை என்றும்,

'கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகிர்' -கு. 1087

'செறாஅய் வாழிய நெஞ்சு' -கு. 1200

எனக் காரியம் உள்வழி வரும் அசைநிலை அளபெடையைச் செயற்கையளபெடை என்றும் கூறுவர்'' என ஐந்தாம் காரிகை உரையுள் உரைத்தனவற்றையும் நோக்குக.] 4

## போலி எழுத்து

91. போலி எழுத்தைப் போற்றுதல் கடனே

என்றது ஈரெழுத்துக்கள் கூடி ஒரெழுத்துப் போல வருவன-வற்றைத் தள்ளாது கொள்ளுக என்றவாறு; தள்ளில்,

'ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்' -தொ.எ.56

'ஐயந் தீரப் பொருளை உணர்த்தலும்
மெய்ந்நடு நிலையும் மிகும்நிறை கோற்கே' -ந.29

'கையி னல்சொலக் கண்ணினில் கேட்டிடும்
மொய்கொள் சிந்தையின் மூங்கையும் ஆயினேம்' -சீவக.1004

'கையறு நெஞ்சம் கடியல் வேண்டும்
பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி' -சிலப் 13-91,2

'ஔவிய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்' -கு. 169

இவைபோல வரும் செய்யுளெல்லாம் மோனைத்தொடையோடும் எதுகைத்தொடையோடும் மாறுபட்டு இலக்கண வழுவாதல் காண்க.

வடநூலார் இவ்விலக்கணத்தைத் தள்ளாது சமானுக்கரம் என்று பெயரிட்டு இவ்விரண்டனையும் தழுவினர். அதுபற்றித் தமிழ்நூலார் இணைஎழுத்து என்று மொழிபெயர்க்க மறந்து போலிஎழுத்து என்று மொழிபெயர்த்ததனால், போலிச் சரக்கு-போலி இலக்கணம் - போலியுரை என்னும் சொற்களைப் போல இதனையும் கருதி முன்னும் பின்னும் பாராது தள்ளினர். அது பற்றியே இச்சூத்திரம் செய்தனம் என்க.

[வி-ரை: எதுகைமோனை நிமித்தமாக ஐ ஔ என்னும் தனி எழுத்துக்களோடு அய் - அவ் என்னும் இணை எழுத்துக்-களையும் தழுவுதல் வேண்டும் என்பது இச்சூத்திரத்தால் பெறப் படுகின்றது. போலிஎழுத்தை நச்சினார்க்கினியர் கொள்ளாது தள்ளியது ஏற்புடைத்தன்று என்பது. போலி எழுத்துப் பற்றித் தொல்காப்பியர்,

'அகர இகரம் ஐகாரம் ஆகும்' -தொ.எ.54
'அகர உகரம் ஔகாரம் ஆகும்' ,, 55
'அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
'ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்' ,, 56
'இகர யகரம் இறுதி விரவும்' ,, 57

எனவும், நன்னூலார்,

'அம்முன் இகரம் யகரம் என்றிவை
எய்தின் ஐயொத்து இசைக்கும் அவ்வொடு
உவ்வும் வவ்வும் ஔஓ ரன்ன' -ந.125

என்றும் குறிப்பிட்டனர். இந்நூற்பாக்கள் உள்ளவாறு பொருள் செய்யப்படவில்லை என்பதனை உட்கொண்டு, பிரயோகவிவேக நூலார் இவை போலி எழுத்துப் பற்றியன என்பதனை விரிவாக விளக்கியுள்ளார். அவர் கருத்தை உட்கொண்டு இந்நூலாரும் இந்நூற்பா வரைந்து இங்ஙனம் உரை எழுதியுள்ளார்.

"தொல்காப்பியர் இயற்கை ஆயிரம் என ஓர் எண்ணுக் கொண்டதன்றித் தொள்ளாயிரம் என்பதன்கண் சந்தி நோக்கி நூறு திரிந்த ஆயிரமும் கொண்டாற் போலவும், தாமரை என்பது செம்மொழியும் பிரிமொழியும் ஆயினாற்போலவும், இயற்கையாய ஓரெழுத்து ஐகார ஔகாரங்கள் கொண்டதன்றி எதுகை நோக்கி ஈரெழுத்து இயைந்த ஐகார ஔகாரங்களும் கொண்டார் என்க. உயிர்மெய்களை ஒற்றுமை நயம் கருதி ஓரெழுத்தாகவும் வேற்றுமை நயம் கருதி ஈரெழுத்தாகவும் கொண்டாற் போல, ஐகார ஔகாரங்களையும் அவ்வாறு கொண்டார் என்பதும் ஒன்று. போலி எழுத்து என்பார் இலக்கணப் போலி ஒப்பில் போலி போல எழுத்துப் போலியும் கைக்கொண்டு எதுகை கொள்வார் என்க. மியா, நுந்தை என்பன ஒரு செய்யுட்கும் பயன்படாது இக் காலத்து நின்றாற் போல அஇ, அஉ என்பன. இக்காலத்துப் பயன்படாமலே நின்றன என்றும் அமையும்" -பி.வி.5உரை.]

## தொகாநிலையின் இன்றியமையாமை

92. அறுவகைத் தொகையும் அப்பொருள்படுமே
ஆதலின் உருபு முதலிய அடைந்து
நின்றுபயன் என்எனின் நிகழ்த்தக் கேள்நீ
தொக்குழி அப்பொருள் தோன்றியும் வேறோர்
பொருளே தோன்றியும் பலபொருள் தோன்றியும்
வரும், பின் இரண்டும் மயக்கம் கொடுக்கும்;
அத்தொகை இருவகை வழக்கினும் ஆகா;
கருதிய பொருள்அறி கருவி யாக
வருமே உருபு முதலிய விரியே.

எ-டு; மரத்தை வெட்டினன் - மரம் வெட்டினன் எனத் தொகின் அப்பொருள்பட்டது. சாத்தனை வெட்டினன், சாத்தனொடு வந்தான் சாத்தற்குக் கொடுத்தான் - சாத்தன் வெட்டினன், சாத்தன் வந்தான், சாத்தன் கொடுத்தான் எனத் தொகின் வேறு பொருள்பட்டன, கரும்புக்கு வேலி - கருப்பு வேலி எனத் தொகின் பல பொருள்பட்டது.

இம்மூன்றனுள் முன்னது இரு வழக்கினும் பொருந்தும், பின்னிரண்டும் ஒரு வழக்கினும் பொருந்தா. அஃது எங்ஙனம் எனின், முறையே கூறுகின்றும், கருதின பொருளை விட்டுக் கேட்கின்றன் வேறு பொருளைக் கருதலானும். அதுவோ இதுவோ எதுவோ என மயங்குதலானும் என்க. ஆகையால் கருதின பொருள் அறி கருவியாகிய உருபு முதலிய விரி வந்து நிற்றலால் பயன் உண்டு என்க.

ஏனைய ஐந்தொகையும் இவ்வாறு வரும்.

விரிநிலம், குளிர்நீர், சுடுதீ, பெய்மழை - பொருந்தும்,

பார்த்தநீர் - பார் நீர் (பாரும் நீரும், நீரைப் பார்)

ஆகும் வாகனம் - ஆகுவாகனம் (பெருச்சாளி வாகனம்)

காத்தமலர் -காமலர் (சோலையிலுள்ள பூ)

பூத்த அரசு - பூவரசு(ஒருமரம்)

எனத்தொகின் பொருந்தாது. இவை வினைத்தொகை,

ஆருயிர், ஆரணங்கு, ஆரமிர்தம் - பொருந்தும். ஆரிருள், ஆரடிசில், ஆர்நீர், ஆர்வயிறு, ஆர்வாய் - பொருந்தாது. (இப் பண்புத்தொகைகள் தொக்கவழி வினைத்தொகையாகவும் பொருள் தருதலானும், 'ஆர்' யார் என்பதன் மரூஉவாய்ப் பொருள் கவர்த்தலானும் என்க.)

மதிமுகம், பவளவாய் - பொருந்தும். கடல் போல முழங்கிற்று, மழை போலப் பொழிந்தது, புலி போல பாய்ந்தது - இவை கடல் முழங்கிற்று, மழை பொழிந்தது, புலி பாய்ந்தது எனத் தொகின் பொருந்தாது. (எழுவாய்த் தொடராகும்) - இவை உவமைத் தொகை.

கபிலபரணர், உவாஅப்பதினான்கு - பொருந்தும். எட்டும் நூறும், பொன்னும் மணியும், வருதற்கும் உரியன். சாத்தனும் வந்தான் - இவை எட்டு நூறு, பொன்மணி, வருதற்கு உரியன், சாத்தன் வந்தான் எனத் தொகின் (உம்மைத்தொகைப்பொருள் தாராமையின்) பொருந்தாது.

பொற்றொலி (அன்மொழித் தொகை) பொருந்தும்.

பொற்குடம் (அன்மொழித் தொகை) பொருந்தாது.

(பொற்றாலி மகளைக்குறிக்கும்; பொற்குடம் வேற்றுமைத் தொகையாயே நிற்கும்.)

எழுத்துச் சொற்பொருள் அணிக்குற்றங்கள் வரினும் சந்தக் குற்றம் வரலாகாது என்னும் யாப்புவிதி நோக்கி, 'எவ்வழு வரினும் அமைக; அடிதொடை ஓசை முதலிய செய்யுள் உறுப்புக்கள் வழுவற்க' என்னும் கருத்தான், பொருந்தாதவற்றையும் செய்யுற்விகாரம் என்று பெயரிட்டு இடர்ப்பட்டு ஒரோவழித் தொகுப்பர் சான்றோர். அங்ஙனம் தொகுப்பராயினும் விரிந்து நின்று பொருள்பட்டாற்போல மயக்கமின்றிப் பொருள்படும் கருவியாக அத்தொகைக்கு முன்னும் பின்னும் தொடர்பு செய்வர். எனவே, தொகுத்த சான்றோர்க்கும் அத் தொகை ஆகாது என்பது கருத்தாயிற்று. ஆகவே உருபு முதலிய விரியின்றாயின் வேறு பொருள்பட்டும் அதுவோ இதுவோ எதுவோ என்னும் ஐயம் தோன்றப் பல பொருள் பட்டும்

வருதலின், பொருள் துணிதற்குக் கருவியாகிய உருபு முதலிய விரி வேண்டும் என்பது தெளிக. தொகுக்கினும் வல்லுநர் தொகுக்கில் பொருந்தும்; வல்லார் தொகுக்கில் பொருந்தாது. எனவே, வழு-வழுவி அமைந்தது - வழுவற்றது எனத் தொகை நிலை மூன்று என்பது தெளிக.

[வி-ரை: தொகாநிலைச் சிறப்பு இந்நூற்பாவால் கூறப் பட்டது.] 6

## தொகையில் பொருள்

93. தொகில்ஒரு பொருள்முதல் எழுபொருள் வரைதரும்.

என்பது வெளி.

[வி-ரை:

'தொக்குழி மயங்குந இரண்டு முதல்ஏழ்
எல்லைப் பொருளின் மயங்கும் என்ப' -ந. 373

என்ற நன்னூல் நூற்பாவை அடியொற்றி எழுந்த நூற்பா இது

எ-டு:

தெய்வ வணக்கம் - தெய்வத்தை வணங்கும் வணக்கம்,
தெய்வத்துக்கு வணக்கம்.

கடிப்பகை - கடிக்குப்பகை,
கடியினது பகை,
கடியாகிய பகை,

சொல்லிலக்கணம் - சொல்லினது இலக்கணம்,
சொற்கு இலக்கணம்,
சொல்லின்கண் இலக்கணம்,
சொல்லிலக்கணம் சொன்ன நூல்.

பொன்மணி - பொன்னின் ஆகிய மணி,
பொன்னாகிய மணி,
பொன்னின்கண் மணி,
பொன்னொடு சேர்ந்த மணி,
பொன்னும் மணியும்

மரவேலி - மரத்தைக் காக்கும் வேலி,
மரத்துக்கு வேலி,
மரத்ினது வேலி,
மரத்தின் புறத்து வேலி,
மரத்தாகிய வேலி,
மரமாகிய வேலி,

சொற்பொருள் - சொல்லான் அறியப்படும் பொருள்,
சொல்லினது பொருள்,
சொற்குப் பொருள்,
சொல்லின்கண் பொருள்,
சொல்லும் பொருளும்,
சொல்லாகிய பொருள்,
சொல்லானது பொருள்,

என்று முறையே காண்க.] 7

## தடுமாறு தொழில் தொகை

94. தடுமா றுந்தொழில் தரும்தொகை சிலவே.

எ-டு:

புலி கொல் வீரன்,
பகைவர் தொழும் அரசன்,
வாளைமீன் உள்ளல் தலைப்படல்.

[வி-ரை: புலியைக்கொன்ற வீரன், புலியால் கொல்லப் பட்ட வீரன்-பகைவரைத்தொழும் அரசன், பகைவரால் தொழப் பட்ட அரசன் - வாளைமீனை உள்ளல் தலைப்படல், வாளைமீனால் உள்ளல் தலைப்படப்படல் - என ஒரு சொல்லே ஒருகால் செயப்படுபொருளாயும் ஒருகால் எழுவாயாயும் தடுமாறி வருதல் காண்க. பகைவர் தொழும் அரசன் என்பதன் இரண்டாம் வேற்றுமைப் பொருட்பொருத்தம் ஆராய்தற்குரியது. இரண்டாம் உருபுவிரித்தற்கு அது 'பகைவர்த்தொழுமரசன்' என்றே இருத்தல் வேண்டும் என்பது.] 8

## தொகைநிலை,தொகாநிலை-பொதுக்கருத்து

95. தொகைநிலை தொகாநிலை எனும்சொற் பொருளான்
மாறுபடு புலவர்கள் மூவர்கள் என்க.

*தொகைநிலை நிலைமொழி வருமொழிக்கிடையே மறைந்து நிற்றல், தொகாநிலை வெளிப்படநிற்றல் என்றும்; தொகைநிலை நிலைமொழி வருமொழிகள் கூடி நிற்றல், தொகாநிலை பிரிந்து நிற்றல் என்றும்; தொகைநிலை நிலைமொழி வருமொழிகள் ஒன்றாய் நிற்றல், தொகாநிலை பலவாய் நிற்றல் என்றும் பொருள்கூறி ஒருவரை ஒருவர் மறுப்பர். அவை விரிக்கின் பெருகும். இது பொது. வருவது சிறப்பு.* 9

## தொகைநிலை, தொகாநிலை - மூவகை விளக்கம்

96. தொகைநிலைக் குணத்தைச் சொல்லுங்காலை
வேற்றுமை உருபு முதலிய இடைநிலை
தொகுதலின் தொகைநிலை எனப்படும் என்றும்,[1]
நிலைமொழி வருமொழி நீக்கம் இன்றி
ஈறும் முதலும் இசைந்து நின்று
விட்டிசைப்பு இன்றி ஓர் நிலைமொழி விதிபெறத்
தொகுதலின் தொகைநிலை எனப்படும் என்றும்,[2]
பலசொல் கூடி ஓர் சொல்லே யாகிப்
பிளவுபட்டு இசைக்கவும் பிரிக்கவும் படாமல்
ஈறும் முதலும் இவை எனப் படாமல்
தொகுதலின் தொகைநிலை எனப்படும் என்றும்,[3]
கூறுவர்; தொகாநிலை கூறுங் காலை,
உருபு முதலிய இடையே உரைத்தல்,
விட்டிசைத்து உரைத்தல், வெவ்வேறு உரைத்தல்,
என்றே கூறுவர்; இவர்மதம் மறுப்டா.

எ-டு:

1. *நூல் கற்றான் - இது உருபு தொக்கு நின்றது;*
*நூலைக் கற்றான் - இது உருபு விரிந்து நின்றது.*

2. சூரனைவென்றான் வந்தான் என்புழிச் சூரனைவென்றான் என்னும் பதம், நிலைமொழி வருமொழி நீக்கமின்மை முதலிய இலக்கணங்களைப் பெற்றுத் தொக்கு ஒரு நிலைமொழியாயே நின்றது.

முருகன் சூரனை வென்றான் என்புழிச் சூரனை, வென்றான் என்னும் பதங்கள் விட்டிசைக்கப்பட்டு மூன்றாக நின்றன.

3. 'ஒருகோட்டு இருசெவி முக்கண் நால்வாயன்'

'உல்லாச நிராகுல யோகவிதச்சல்லாப விநோதன்'

'துடியிடை நெடுங்கண் துணைமுலைப் பொற்றொடி'

மன்னகுமாரன், சங்கபடகம், வட்டவள்ளம், பவளவாய், கமல பாதம் இவை பல சொல்கூடி ஒரு சொல்லாதல் முதலிய இலக்கணங்களைப் பெற்றுத் தொக்கு ஒருசொல்லாயே நின்றன.

'ஒருகோட்டன் இருசெவியன் முக்கண்ணன்
நால்வாயன்' –சி. சி. சு. வி. வணக்கம்.

எனவும்,

உல்லாசன் நிராகுலன் யோகவிதன் சல்லாபன் விநோதன் எனவும்,

துடியிடையாள் நெடுங்கண்ணாள் துணைமுலையாள் பொற்றொடியாள் எனவும்,

மன்னன் குமாரன் எனவும்,
சங்கம் படகம் எனவும்,
வட்டம் வள்ளம் எனவும்,
பவளம் வாய் எனவும்,
கமலம் பாதம் எனவும்

வெவ்வேறாய்ப் பிரிக்கப்பட்டு பிளந்திசைக்கப்பட்டு ஈறும் முதலும் இவை எனத் துணியப்பட்டுப் பல பெயராயே நின்றன.

இம்மூவரும் ஒருவர்க்கு ஒருவர் எளியர் அல்லர், அதனால் மதம் மறுபடா என்றும்.

[வி-ரை: உருபு முதலிய தொகுதலின் தொகை, உருபு முதலிய விரிந்தும் இரண்டு முதலிய சொற்கள் ஒட்டி ஒருசொல் நீர்மைப்படுதலின் தொகை, உருபு விரியாது இரண்டு முதலிய சொற்கள் ஒட்டி ஒருசொல் நீர்மைப்படுதலின் தொகை என்ற முக்கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. நச்சினார்க்கினியர் முதலாயினார் முதற் கருத்தினர். சேனாவரையர் பிரயோக விவேக நூலார் முதலாயினார் மூன்றாங் கருத்தினர்.] 10

## தொகையுள் தொகுக்கப்படும் நிலை

97. அறுவகைத் தொகையும் அறையுங் காலை
ஒன்றே தொகுதலும்[1] பலவே தொகுதலும்[2]
ஆறு வகையும் அடங்கத் தொகுதலும்[3]
உருபே தொகுதலும்[4] பொருளே தொகுதலும்[5]
உருபும் பொருளும் ஒருங்கே தொகுதலும்[6]
உருபும் பொருளும் ஒருங்குபல தொகுதலும்[7]
பொருளும் உருபும் பொருளும் தொகுதலும்[8]
முதல்இடை கடைஎன மூன்றினுந் தொகுதலும்[9]
கடைஇடை இரண்டினும் காணத் தொகுதலும்[10]
ஆதியாப் பலவும் அறைந்தனர் புலவர்.

எ-டு:

1. 'மரம் வெட்டினான்' - உருபு ஒன்றே தொக்கது.

2. 'குன்றி கோபம் கொடிவிடு பவளம்
ஒண்செங் காந்தள் ஒக்கும் நின்நிறம்'

என்புழி ஐ-உருபும் உம்மையும் தொக்கன.

3. துடியிடை நெடுங்கண் துணைமுலைப் பொற்றொடி- என்புழி ஆறும் தொக்கன.

[வி-ரை: துடியிடை - உவமத்தொகை; நெடுங்கண் - பண்புத்தொகை; துணைமுலை - வினைத்தொகை; பொற்றொடி - அடிப்படையில் வேற்றுமைத்தொகை; போந்த பொருளில்

அன்மொழித்தொகை. துடியிடை நெடுங்கண் துணைமுலை உம்மைத்தொகை. துணைமுலைப்பொற்றொடி - வேற்றுமைத் தொகை - இவ்வாறு ஆறும் கொள்க.]

4. மதிமுகம் என்புழிப் போன்ற என்ற உருபே தொக்கது.

5. பொருபடை என்புழிக் காலம் என்னும் பொருளே தொக்கது. (பொருத, பொருகின்ற, பொரும்படை)

6. படைக்கை என்புழி உருபும் பொருளும் ஒருங்கே தொக்கன. (படையை ஏந்திய கை; ஐ - உருபு. ஏந்திய - பொருள். முடிக்குஞ் சொல்லைப் பொருள் என்றும் பயன் என்றும் கூறுவர். இரண்டும் தொக்கமை காண்க.)

7. பாண்டிக்கரை என்புழிப் பாண்டியனது நாட்டுக் கடலினது கரைக்கண் இருக்கும் ஊர்,

பொன்னரசன் என்புழிப் பொன்னின்கண்ணே விருப்பத்தை உடைய அரசன்,

குழல்வாய் என்புழிக் குழலினது இசைபோல இனிமையைக் கொடுக்கம் சொல்லினை உடைய வாய் என இவை உருபும் பொருளும் ஒருங்கு பல தொக்கன.

8. வடுக்கண்ணன் என்புழி வடுக நாட்டின்கண் பிறந்த கண்ணன் என்றும்,

செந்தாமரை என்புழிச் சிவந்த பூவை உடைய தாமரை என்றும் இவை பொருளும் உருபும் பொருளும் தொக்கன.

[வி-ரை: நாடு, பிறந்தன என்பன பொருள்; கண் உருபு. பூ, உடைய என்பன பொருள்; ஐ. உருபு. இவ்வாறு பொருளும் உருபும் பொருளும் தொக்கவாறு.]

9. மலர் முகம் - தாமரைமலர் முகம் - முதல் தொக்கது.

தாமரைமுகம் - தாமரைமலர் முகம் - இடைத்தொக்கது.

பொற்றொலி - பொற்றொலி உடையாள் - கடைத்தொக்கது.

10. செய்தான் மாடம் - மாடத்தை - கடைத்தொக்கது.

இருந்தான் குன்றம் - குன்றத்துக்கண் - கடைத்தொக்கது

அன்பு அருள் இருக்கும் அறவோரிடத்தே - அன்பும் அருளும் இருக்கும் எனச் சொல்லின் கடையிலும், தொடரின் இடையிலும் தொக்கது.

[வி-ரை: சொல்லின் கடைக்கு அருளும் என்பதனையும், தொடரின் இடைக்கு அன்பும் என்பதனையும் கொள்க.]

'ஆதி' என்றதனால்,

வடுகங்கண்ணன் - வடுகனுக்கு மகனாகிய கண்ணன்,

கவிழ்தும்பை - கவிழ்ந்த பூவை உடைய தும்பை,

ஆந்தை, பூந்தை-ஆதனுக்குத் தந்தை, பூதனுக்குத் தந்தை- இவை முதலிய பெரும்பாலும் விரியும்.

தனித்தனி சிறப்பித்தால் விரிதல் நோக்கி, 'அறுவகைத் தொகையும்' எனப் பொதுப்படக் கூறிச் சுருக்கினம் என்க.

[வி-ரை: வடுகக்கண்ணன், வடுகங்கண்ணன் என்பன வற்றிற்கு விதி,

'வல்லொற்று வரினே இடத்தொகை யாகும்
மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும்' -ந. 371

என்பது.

ஆந்தை, பூந்தை என்பனவற்றிற்கு விதி.
'இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய் ஒழித்து அகரம் நிலையும்
மெய் ஒழித்து அன்கெடும் அவ்வியற் பெயரே'

-தொ. எ, 347

'ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு
பெயரொற்று அகரம் துவரக் கெடுமே' -தொ. எ. 348

என்பன.

## பண்புத் தொகை

98. பண்புத் தொகைவிதி பகரின் பெருகும்
ஆயினும் சிலவிதி அறைகுவன் கேள்நீ
பண்புமுன் வருதலும்[1] இருபண்பு அடுத்தலும்[2]
இருபண்பொடு பொருள் இயைதலும்[3] அவ்விரு
பண்புகள் தாமே பொருளை விளைத்தலும்[4]
இயற்பெயர் சிறப்புப் பெயர்மா றுதலும்[5]
சிறப்புப் பொதுப்பெயர் முறையே சிறத்தலும்[6]
பொதுச்சிறப் புப்பெயர் முறையே பொருந்தலும்[7]
பின்மொழி ஆகு பெயராய்ப் பிறத்தலும்[8]
முன்மொழி ஆகு பெயராய் முடிதலும்[9]
இருமொழி ஆகு பெயராய் இருத்தலும்[10]
ஒருபொருட்கு இருபெயர் ஆகி ஒட்டலும்[11]
முற்பதம் தமிழ்மொழி[12] முற்பதம் வடமொழி[13]
இருபதம் தமிழ்மொழி[14] இருபதம் வடமொழி[15]
ஆகி வருதலும் ஆதியாப் பலவே.

வெண்கரும்பு என இனம் பற்றியும்,

வெண்திங்கள் என இனம் பற்றாமலும்,

வெண்டாமரை எனத் தனக்குரிய சினையை விட்டு உரிமை யில்லாத முதலைப் பற்றியும், (வெண்பூத் தாமரை)

வெள்ளாடு என எதிர்வு பற்றியும்,

(எதிர்காலத்து வேள்விக்கு உதவலின்)

'விலங்கன்னர் வெள்ளறிவி னர்' என இழிவு பற்றியும்,

'வெண்களமர் வெள்ளாளர் எனச் சாதி பற்றியும்,

வெள்ளோட்டம் எனப் புதுமை பற்றியும்,

வெண்டேர் எனப் பொய் பற்றியும், (கானல் நீர்)

வெளிற்றுப் பனை என உள்ளீடின்மை பற்றியும்,

வெளியார்முன் என இயல்பு பற்றியும்,

(அறிவின்மையாகிய பண்பு)

இச்சோறு வெண்படி எனக் கலப்பின்மை பற்றியும்,

இவ்வுரு வெண்கலம் என ஒரு பெயரே பற்றியும்,

வெள்ளிடை எனத் தனிமை பற்றியும்,

இவ்வணி வெள்ளைப்பொன் என நிறமின்மை பற்றியும்,

இவனுக்கு வெள்ளைப்புத்தி என மந்தம் பற்றியும்,

இவ்வூரில் வெள்ளைப்பிள்ளையார் எனப் பண்புப் போலி

பற்றியும் (நிறமில்லா இறைவற்கு நிறம் புணர்த்துக் கூறுவது நிறமில்லாததை நிறமுடையது போலக் கூறுவதாகிய பண்புப் போலியாம்) இன்னும் பலவாய் ஒரு பண்பே விரிதலின் 'பெருகும்' என்றும். இக்கருத்து,

'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' -தொ. சொ. 372 என்னும் சூத்திரம் முதலியவற்றான் அறிக.

எ-டு:

1. கருங்குதிரை - [பண்பு முன் வருதல்]

2. வெண்ணிறம் - [இருபண்பு அடுத்தல்]

3. சிறுபைந்தூவி - [இருபண்பொடு பொருள் இயைதல்]

4. சிறுவெள்ளை, பெருவெள்ளை - [இவை ஆகுபெயரும் அன்றி, அன்மொழியும் அன்றி நெல் என்னும் பொருள் தந்தமையின் இருபண்புகள் தாமே பொருளை விளைத்தமை.]

| | |
|---|---|
| 5. திருவள்ளுவன் தெய்வப் புலவன், அகத்தியன் முனிவன், தண்டியாசிரியன். | [இயற்பெயர் சிறப்புப் பெயர் மாறுதல்.] |
| 6. தெய்வப் புலவன் திருவள்ளுவன், முனிவன் அகத்தியன், ஆசிரியன் தண்டி. | [சிறப்புப்பெயர் இயற் பெயர் மாறுதல்] |

7. பலாமரம், பரணிமீன், மேடராசி. } [சிறப்புப் பொதுப் பெயர் முறையே சிறத்தல்]

8. அரசன் சோழன், பார்ப்பான் இராமன். } [பொதுச் சிறப்புப் பெயர் முறையே பொருந்தல்]

9. மக்கட்சுட்டு, பழங்கறி, பழம்புளி, } [பின்மொழி ஆகுபெயர் ஆதல்]

10. குழற்பண், யாழ்ப்பண், குழல் இனிது யாழ் இனிது } [முன்மொழி ஆகுபெயராதல்]

11. புளிச்சுவை, கறிச்சுவை. -[இருமொழி ஆகுபெயராதல்]

12. அராஅப்பாம்பு, கன்னியாகுமரி -[ஒரு பொருட்கு இருபெயர் ஆதல்]

13. மன்னன் குமாரன் - [முற்பதம் தமிழ்மொழியாதல்.]

14. அதிநுட்பம் - [முற்பதம் வடமொழியாதல்.]

15. அழகப்பிரான் - [இருபதம் தமிழ்மொழி ஆதல்.]

16. ஆதிபகவன் - [இருபதம் வடமொழி ஆதல்.]

என முறையே காண்க.

'ஆதி' என்றதனால், வண்ணம் - வடிவு - அளவு - சுவை முதலாகப் பலரும் எடுத்தோதினவும், அணியிலுள் உருவகம் முதலியனவும் கொள்க.

[வி-ரை: இராசி பன்னிரண்டனுள் மேடம் ஒன்று ஆதலின் மேடம் - சிறப்புப்பெயர்; இராசி - பொதுப்பெயர்; மக்கட்சுட்டு-சுட்டு என்பது ஆகுபெயராய்ச் சுட்டப்படும் பொருளையும், கறி என்பது ஆகுபெயராய்க் கறிசெய்யப்பட்ட காயையும், புளி என்பது ஆகுபெயராய்ப் புளியம்பழத்தையும் உணர்த்தின. குழல், யாழ் என்பன முறையே அவற்றினின்றும் எழும் ஒலியை உணர்த்தின.

புளிச்சுவை, கறிச்சுவை - புளியம்பழமாகிய சுவைக்கப்படும் பொருள். கறியாக்கப்படுவனவாகிய காயாகிய சுவைக்கப்படும் பொருள் என இருமொழி ஆகுபெயர்.

வண்ணம் - கருங்குழல்; வடிவு - வட்டப்பலகை; அளவு- முழத்துணி; சுவை - தீம்பழம். இவற்றுள் பல பிரயோக விவேகப் பண்புத்தொகை வகைகளுள் (22) குறிப்பிடப் பட்டுள்ளன.]

## வடமொழியில் பண்புத்தொகை

99. சிலபெய ரெச்சமும் சிலவினைத் தொகையும்
இருவகை உவமையும் வண்ணச் சினைச்சொலும்
பண்புத் தொகைஎனப் பகரும் வடநூல்.

எ-டு:

எண்ணும் பொருள் - எண்ணப்படுவதாகிய பொருள்; துணியும் பொருளும் அதுவே. இவ்விரண்டனையும் வேறு இலக்கணம் என்பர்.

உரைகல் - உரைக்கப்படுவதாகிய கல் என்பர்; செய் குன்றும் அது.

மதிமுகம், முகமதி என்புழி, உருபு இடையினும் ஈற்றினும் தொக்கது என்பர்.

செங்கால் நாரை, வெண்பூத்தாமரை என்பன வண்ணச் சினைச் சொற்கள்.

இவ்வாறு முறையே காண்க.

'பகரும் வடநூல்' எனவே தமிழ்க்கு அடாது என்க. ஆயின் ஈரிலக்கணமும் ஒன்று என்று பாயிரத்தில் கூறியது என்னெனின், பெரும்பான்மை நோக்கி என்க.

[வி-ரை: வடமொழியில் தொகையானது வேற்றுமைத் தொகை, எண்ணொடு பொருள் புணர்ந்த எண்தொகை, அன்மொழித்தொகை, பண்புத்தொகை, முன்னும் பின்னும் மொழி யடுத்து வரும் இடைச்சொல் தொகை, உம்மைத் தொகை என

ஆறுகும். (பி. வி. 20) இவற்றுள் எண்ணொடு பெயர் புணர்ந்த எண்தொகை தமிழில் பண்புத்தொகைக்கண் அடங்கும். (மூவேந்தர், இருகண்) முன்னும் பின்னும் பொழி அடுத்து வரும் இடைச்சொல் தொகை தமிழில் வாள்மன், கொன்னூர் என்பன போல இடைச்சொல் தொடராய் அடங்கும்.

தமிழில் காணப்படும் வினைத்தொகையும், உவமத் தொகையும் வடமொழியில் கூறப்படவில்லை. அவையும் சில பெயரெச்சமும் வண்ணச்சினைச்சொல்லும் வடமொழியில் பண்புத் தொகை எனக் கூறப்படுகின்றன. பெயரெச்சம் தமிழில் பெயரெச்சத் தொடர். அது தொகின் வினைத்தொகை ஆகும் (கொல்லும் யானை - கொல் யானை) வண்ணச்சினைச் சொல்லுள் வண்ணமும் சினையும் பண்புத் தொகையாகத் தொகும். (செங்கால்) சினையும் முதலும் வேற்றுமைத் தொகையாகத் தொகும். (கால்நாரை.)

'அறச்சுற்றம், அருட்சுற்றம், கல்விப் பொருள் என்றும், வடமொழியில் விநயதனம் குணபுத்தி சுசிர்தபெந்து என்றும், முன்மொழி எண்ணம் என்னும் சம்பாவனு பூர்வபதம் வரும். இவையே துணிபப்படும் காலத்துத் தேற்றம் என்னும் அவதாரண பூர்வபத கருமதாரயனும். திருவள்ளுவரும், தொல்காப்பியரும், 'எண்ணித் துணிக கருமம்' (கு. 467) எனவும். 'ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும்' (தொ. சொ.337) எனவும் கூறினராதலின், ஒரு பொருளை எண்ணும் பொழுது ஒன்றாகவும் துணியும் பொழுது வேறொன்றாகவும் காண்க;

ஆண்டகை, பெண்டகை, மக்கட்சுட்டு இவை பின்மொழி ஆகுபெயராய் நின்ற இருபெயரொட்டுப் பண்புத்தொகை என்பர்; மக்கட்சுட்டு என்பதனைக் கல்லாடரும் பின்மொழி ஆகுபெயராய் நின்ற இருபெயரொட்டுப் பண்புத் தொகை என்பர். அதனைச் சேனாவரையர் அன்மொழித் தொகை என்பர்.

கருஷ பாஷாணம், கருஷோபலம்-இவை உறைகல் என்னும் வினைத்தொகையாம். அதனை வடநூலார் இடம் உணர்த்தும் வினைப்பெயர் என்பர்."

-பி.வி. 22 உரை.

இருவகை உவமை - உவமானச் சொல் முன்மொழியாகவும், பின்மொழியாகவும் வரும் இருவகையாக அமையும் உவமை. மதி போலும் முகம், முகம் மதி போலும் என முறையே விளக்கப்படும் மதிமுகம், முகமதி என்பன இவற்றிற்கு எடுத்துக்காட்டு.] 13

## இன்மை பற்றி வரும் உபசர்க்கம்

100. அ. அந். ந. நி. கு. வி. வருமொழிப் பொருளை
இன்மை பிறிதுமறை யினுள் ஒன்று ஆக்கும்.

என்றது, இவ்வறுவகையானும் வருமொழிப் பொருளை மூன்றனுள் ஒன்றுக்கும் என்றவாறு.

எ-டு:

அருபம் - உருவம் இல்லாதது - இன்மை,
அப்பிராமணன் - [பார்ப்பான் அல்லாதான் - பிறிது]
அதன்மம் - [தருமத்திற்கு மாறுபட்டது - மறை]
இவற்றுள் அகரம் உபசர்க்கமாய் வந்து இன்மை, பிறிது, மறை என்ற முப்பொருளும் தந்தது காண்க.

'அடைந்தாலும் ஒன்றுகாது அநந்நியமாய் இருக்கும் - [அந்——இன்மை

'அநந்நியமாய் நிறைந்த - [அந்-——பிறிது]

அநங்கன் - [அங்கமில்லாதவன்; அந்——மறை]

அந்நியம் நாத்தியை உணர்த்தும், - [ந+அத்தி-நாத்தி;ந]

'நிமலனும் இறைவன்' - [நி+மலன்-நிமலன்; -நி]

குதர்க்க உரை கூறேல் -கு+தர்க்கம்-குதர்க்கம்;கு]

திக்கினொடு விதிக்கு நீர் செலுத்தி - [வி+திக்கு;-வி]

என முறையே ஆறும் மூன்றும் வந்தன காண்க.

[வி-ரை: ஆறு - ஆறு உபசர்க்கங்கள். இவைபற்றிக் கருத்து வேறுபாடு உண்டு.] 14

## இன்மையின் ஐவகை

101. அவற்றுள் இன்மை ஐவகை ஆகும்.

அவை சிவஞான சித்தியாரின் அபாவ அளவையுள்ளும் தண்டியலங்காரத்துள் அபாவவிரிச் சூத்திரத்துள்ளும் காண்க. ஆயின் வடமொழி இலக்கணத்தை இங்ஙனம் விரிக்கின் பயன் என் எனின்,

'இல்லென் கிளவி இன்மை செப்பின்' -தொ. எ.372
'இல்லென் இன்மைச் சொற்கு ஐ அடைய' -ந. 233
'இல்பொருள் உவமை' தண்டி.

எனவும்,

அல்வழி, அஃறிணை, அவனல்லன், குற்றியல்லன் மகன்,
மகனன்று குற்றி, 'இருதிறன் அறிவுளது இரண்டலால்
ஆன்மா' 'இருதிறன் அல்லது சிவசத்தாமென'

எனவும்,

'கோளில் பொறி' (கு. 6) 'பயனில் சொல்' -கு. 196.

எனவும் முறையே அம்மூன்றனையும் முற்காலத்தார் மொழி பெயர்த்துத் தமிழிற்குரிய இலக்கண இலக்கியம் ஆக்கினர். அன்றியும், பிற்காலத்தார்,

'நேர்ந்த மொழிப் பொருளை நீக்கவரும் நகரம்' -நே.எ. 11
'என்றும் அபாவமும் இல்லதன் அபாவமும்' தண்டி 91
'அபாவம் பொருள்ஒப்பு ஆறு என்பர்' -சி.சி.பா. 7

என்றும்,

'அத்துவிதம் ஒன்றையும் ஆங்கு'
'அநாதி முத்த சித்துரு' -சி.சி.சு. 1 கு. 18
'அபேதப் பிறப்பிலதாய்'

என்றும் மொழிபெயராமலே தமிழ்க்குரிய இலக்கண இலக்கியமாக்கினர். ஆகையால் அம்மூன்றனையும் அவற்றுள் ஒன்றான ஐந்தனையும் விரித்து அறியாக்கால், தமிழ் இலக்கண இலக்கியங் கட்குப் பொருள் கொள்ளக்கூடாது. பொருள்கொள்ளும் கருவியாய் விரித்ததனால், மிகவும் பயனுண்டே என்க.

இனி, இவ்வறுவகையுமன்றி, அபகீர்த்தி, அதிக்கிரமம், அபவாதம், துந்நிமித்தம் முதலிய பலவுள; அவையெல்லாம், விரிக்கின் பெருகுதலானும், தமிழிற்குப் பயன்படுதல் சிறுபான்மையாதலானும், விரித்திலமென்க.

[வி-ரை: இன்மை, பிறிது, மறை என்ற மூன்றனுள் அபாவம் எனப்படும் இன்மையானது என்றும் அபாவம். இன்மையது அபாவம், ஒன்றின் ஒன்று அபாவம், உள்ளதன் அபாவம், அழிவுபாட்டு அபாவம் என்று தண்டியலங்காரத்துள் ஐவகையாக விளக்கப்பட்டுள்ளது. பிறிது என்பது அன்மை.

நகரமே அகரமாகவும் அந் எனவும் திரியும் என்பது வீரசோழியம், நேமிநாதம் முதலிய நூற்கருத்தாகும்.

'நேர்ந்த மொழிப்பொருளை நீக்கவரும் நகரம்
சார்ந்த துடலாயின் தன்னுடல்போம் - சார்ந்ததுதான்
ஆவியேல் தன்னுவி முன்னுகும்' -நே. எ 11

என்பதனுல், நகரம் நிலைமொழியாக வருமொழியில் மெய் முதலெழுத்தாகவரின் நகர உயிர்மெய்கெட்டு அகரமே எஞ்சி நிற்க, ந + நியாயம் - அநியாயம் என்றும், முதலெழுத்து உயிராயின் நகரத்தின் உயிர்முதலாக அந் என்று ஆகி அந் + அகன் - அநகன் என்றும் நிற்தம் என்பது. இதுவே வீரசோழியக் கருத்தும் ஆகும்.

"இனி இன்மை பற்றியும் வேற்றுமைத்தொகை நிகழும் என்பர் வடநூலார். அதனை நஞ்ஞு தற்புருடன் என்பர்.

'நேர்ந்த மொழிப்பொருளை நீக்கவரும் நகரம்
சார்ந்த துடலாயின் தன்னுடல்போம் - சார்ந்ததுதான்
ஆவியேல் தன்ஆவி முன்னுகும்' -நே. எ. 11

என்பதனுல், அகளங்கன் - அகங்கன் என்றும், அப்பிராமணன் - அநச்சுவம் என்றும், அதன்பமம் என்று, முறையே இன்மை, அன்மை, எதிர்மறை மூன்றினும் நஞ்ஞு வரும்.

'தத்-அபாவம் தத்-அந்நியம் தத்-விருத்தம்
என மூன்று ஆகும் நஞ்ஞு தற்புருடன்.'

இஃது உரைச்சூத்திரம்.

இனி, பாணினி பகவான் இவ்வுதாரணங்கட்கு முன் நின்ற நகாரம் கெட்டு வேறொரு நகாரம் வந்தது என்பர்.

தமிழினும், 'இல்பொருள் உவமை' - இது இயற்கையான தத்-அபாவத்தில் வந்த நஞ்ஞு.

'வேற்றுமை அல்வழி' –தொ. எ. 158

'அஃறிணை' –தொ. சொ. 1

என்பன தத்-அந்நியமான இனத்தில் வந்த நஞ்ஞு.

'பயனில்சொல் பாராட்டல்' -கு. 196

'கோளில் பொறி' -கு. 9

இவை உண்மைக்கு எதிர்மறையான தத்-விருத்தத்தில் வந்த நஞ்ஞு.

'கருமம் அல்லாச் சார்பு என் கிளவி' –தொ. சொ. 84

இஃது இன்மைப் பொருளில் வந்த அன்மை.

'மன்னுப் பொருளும் அன்ன இயற்றே' தொ. சொ. 34

'பிறவாழி நீந்தல் அரிது' -கு. 8

'புறத்த புகழும் இல' -கு. 39

என்புழி முறையே தத்-அபாவமும், தத்-அந்நியமும், தத்-விருத்தமுமான நஞ்ஞு இனி, இல்பொருள், இல்லாப் பொருள், 'இரப்பாரை இல்லாத ஈர்ங்கண்மா ஞாலம்' (கு. 1058) 'ஏமாப்பில் தோணி' (கு. 1068) என அடையடுத்துத் தொகை மொழியாய் நிற்கும் என்க'' பிரயோக விவேகம் 21உரை.] 15

## எழுத்தாற்றல் முதலியன

102. எழுத்து சொல்பொருள் ஆற்றல் மொழிப்பொருட்
காரணம் இவற்றுள் கருதுவ கருதுக.

என்பது எழுத்தாற்றல், சொல்லாற்றல், பொருளாற்றல், மொழிப் பொருட் காரணம் என்னும் நான்கனுள் கருதுதற்கு அகப்பட்டன வற்றை மாத்திரை கருதுக என்றவாறு.

அயன் - அரி - அரன் என்புழி, அகர உயிரானது ஒற்று உயிர்மெய் முதலியவற்றை உணர்த்தாது, தான் உயிரே, தனக்கு ஒரு மாத்திரையே என்று உணர்த்தலே எழுத்தாற்றல்.

இக்குளத்தைப் பெருக்கு,

இவ்வாற்றுப்பெருக்கு நேற்று வந்தது,

இவ்வாற்றுப்பெருக்குக் கடல் போன்றது-

என முறையே குகர உயிர்மெய்யானது ஒன்று அரை கால் மாத்திரையாகியும், முற்றுகரம் குற்றுகரம் ஒற்றாகியும், அலகு பெற்றே நின்றும், பெறுதற்கும் பெறாமைக்கும் பொதுவாயே நின்றும், பெறாதே நின்றும் ஆற்றல் கெட்டது.

[வி-ரை:

'குற்றிய லுகரத்து இறுதி உளப்பட
முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே' -தொ.எ. 152

என்பது விதியாதலின், பெருக்கு என்ற முன்னிலை வினை முற்றியலுகர ஈற்றதாயிற்று.

'வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்
தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே' -தொ. எ. 409

'இடைப்படின் குறுகும் இடனுமார் உண்டே
கடப்பாடு அறிந்த புணரிய லான' தொ. எ. 37

என்பனவற்றான் 'கவ்விடைக் குற்றுகரம் காதல் இனமென்று கவ்வினைத் தான் சேர்ந்து கரைந்து' கால்மாத்திரையது ஆகி ஒற்றுநிலையில் நின்று அலகுபெறாதாயிற்று. இங்ஙனம் கால் மாத்திரையாதல் 'கு' ஒன்றற்கே கொள்க.]

விரல் என்னும் சொல் தனக்கு முதலாகிய கையையும், சினையாகிய நகத்தையும் உணர்த்தாது தான் அங்குலமே (விரல் என்பதன் வடமொழிப்பெயர்) என்று பொருள் உணர்த்தலே சொல்லாற்றல்.

நகம் என்னும் சொல் ஒருகால் உகிரையும், ஒருகால் மலையையும் உணர்த்தலே ஆற்றல்கெட்டது.

சிலை வளைத்து வென்றான்;

சிலையால் ஆலயம் செய்தான்-

என்னும் தொடரினுள் முறையே கல் வில் என்று உணர்த்தாது' வில்-கல் என்று உணர்த்தலே பொருளாற்றல்.

'இப்பணம் முழுதும் கொடாதே'

என்னும் தொடரினுள். ஒரு கால் சிறிதாயினும் கொடாதே என்றும், ஒரு கால் சிறிது வைத்துப் பெரிது கொடு என்றும், ஒரு கால் பெரிதுவைத்துச் சிறிது கொடு என்றும் உணர்த்தலே ஆற்றல் கெட்டது.

[வி-ரை: ஒவ்வொரு சொற்கும் ஒரு பொருளே உண்டு. ஒருவடிவாய்ப் பல பொருள்களை உணர்த்தும் பல சொற்களை, எழுத்து ஒற்றுமை நோக்கிப் பலபொருள் ஒருசொல் என்று கோடல் வழக்கில் வந்துவிட்டது. 'நகு' என்பதனைப் பகுதியாகக் கொண்டு உகிரை உணர்த்தும் நகம் என்ற சொல் வேறு; நக; என்ற வடசொல் திரிந்து நகம் என்றாகி மலையை உணர்த்தும் சொல் வேறு. இவ்வாறே சிலை மரத்தால் செய்யப் பட்டது என்ற பொருளில், ஆகுபெயராய் வில்லை உணர்த்தும் சிலை என்ற சொல்லும் வேறு; சிலா என்ற வடசொல்லின் திரிபாய்ச் சிலை என்றாகிக் கல்லை உணர்த்தும் சொல்லும் வேறு இவற்றை வரும் இடன் நோக்கி எவ்வெப்பொருட்கண் வந்தன என்று கோடல் வேண்டும். தனியே எடுத்துக்கூறின், எழுத்தொற்றுமையால் இவை பல பொருட்கும் பொதுவாதலின், இவை ஆற்றல் கெட்டன எனப்பட்டன. சொல்லாற்றல் தனிச் சொல்லினும், பொருளாற்றல் தொடர்மொழியினும் கொள்ளப் படும்.

'முழுதும் என்னும் முற்றும்மை எச்சப்பொருளும் தருதல்,

'முற்றிய உம்மை தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி உரித்தும் ஆகும்' -தொ. சொ. 285.

என்பதனுல் கொள்ளப்படும். ஏற்புழிக்கோடலான் இதற்கு உம்மையை முடிக்குஞ்சொல் மறைப் பொருளில் வருதல் வேண்டும் என்பது.

முதற்பொருளில் 'முழுதும்' முற்றும்மை; ஏனைய இரு பொருளிலும் எச்சஉம்மை. இப்பொருள்வேறுபாடு சொற்களை எடுத்தல் படுத்தலாக ஒலிப்பதனுல் பெறப்படும்.]

மொழிப்பொருட்காரணம் 'மொழிப்பொருட்காரணம்'
-தொ. சொ. 394

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்துள் காண்க.

[வி-ரை: ஒவ்வொரு சொல்லின் தோற்றத்துக்கும் ஒரு காரணம் உண்டு. மொழி தோன்றிய காலத்திலிருந்த சொல்லின் பழைய உருவத்தை உள்ளவாறு அறிந்து அதன் தோற்றக் காரணம் காணுதல் அத்துணை எளிமை உடைத்து அன்று என்பது தொல்காப்பியனுர் கருத்து. 'மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்ரு' என்ற நூற்பாவின் சேனுவரையர் உரை பின்வருமாறு:

"உறு, தவ முதலாயின சொற்கு மிகுதி முதலாயின பொருளாதல் வரலாற்று முறைமையால் கொள்வதல்லது, அவை அப்பொருள் ஆதற்குக் காரணம் விளங்கத்தோன்ரு என்றவாறு.

"பொருளோடு சொற்கு இயைபு இயற்கையாகலான், அவ்வியற்கையாகிய இயைபால் சொல் பொருளுணர்த்தும் என்பர் ஒரு சாரார்; ஒரு சாரார் பிற காரணத்தால் உணர்த்தும் என்ப. அவற்றுள் மெய்ம்மையாகிய காரணம் ஆசிரியர்க்குப் புலனுவதல்லது, நம்மனோர்க்குப் புலனுகாமையின், மொழிப் பொருட்காரணம் இல்லை என்னுது 'விழிப்பத்தோன்ரு' என்ருர். உரிச்சொல் பற்றி ஓதினுரேனும், ஏனைச்சொற்பொருட்கும் இஃது ஒக்கும்."]

இந்நான்கு இலக்கணமும் அறிதல் அருமைநோக்கிக் 'கருதுவ கருதுக' என்ருர். 16

## எழுத்தொற்றுமை

103 முப்பது எழுத்தும் முறையே ஒற்றுமை
அன்றியும் கசவும் சயவும் வயவும்
மனவும் லளவும் வலவும அன்றியும்
பின்னும் பலவாம் ஒற்றுமை என்ப.

'அன்றி' ஈரிடத்திற் கூறியது, முன்புள்ளது - இன்றுள்ளது-சொல்ஒற்றுமை மூவிதியும் பகுத்து அறிதற்கு என்க.

எ-டு:

| | | | | |
|---|---|---|---|---|
| அறுமுகம் - ஆறுமுகம் | - [உயிரில் அ ஆ ஒற்றுமை] | | | |
| மீற்கண் - மீன்கண் | - [மெய்யில் | ற, ன | ஒற்றுமை] | |
| பிக்கை - பிச்சை | - [ ,, | க,ச | ,, ] | |
| பங்கசம் - பங்கயம் | - [ ,, | ச, ய | ,, ] | |
| கோவில் - கோயில் | - [ ,, | வ, ய | ,, ] | |
| கலம் - கலன் | - [ ,, | ம, ன | ,, ] | |
| அலமருகுயிலினம் - அளமருகுயிலினம் -(சீவக. 49) | [ ,, | ல, ள | ,, ] | |
| வில்வம் - வில்லம் | - [ ,, | வ, ல | ,, ] | |

'இன்னும் பல' என்றதனுல், பகுதி முதல் ஐந்தும், பெயர்ந்தல் நான்கும், நிலைமொழியும் வருமொழியும் கொள்க.

இயம்பினர் - விளம்பினர் - [பகுதியில் பொருள் ஒற்றுமை]

உண்டனன் - உண்டான் - [சாரியை உண்மையும் இன்மையும் ஒற்றுமை]

உண்ணுநின்ருன் - உண்கின்ருன்-[ ஆநின்று, கின்று ஒற்றுமை]

ஒன்றனை - ஒன்றினை - [அன், இன் சாரியை ஒற்றுமை]

முட்டீது - முஃடீது
கற்றீது - கஃறீது } [டகர ஆய்தம், றகர ஆய்தம் புணர்ச்சி ஒற்றுமை]

பொற்பணி - ஆடகப்பணி - [பொன், ஆடகம்-
பெயர் ஒற்றுமை]

தொட்டான்-தீண்டினன் - [தொடு, தீண்டு-வினை ஒற்றுமை]

அதுவோ-அது கொல் - [ஓ. கொல் அடை ஒற்றுமை]

'கறுப்பும் சிவப்பும்வெகுளிப் பொருள' -தொ. சொ. 372
[கறுப்பு, சிவப்பு என்ற உரி ஒற்றுமை]

சிவன் நஞ்சுதின்றான்
அரன் விடம் உண்டான் } [நிலை மொழியும் வருமொழியும்
ஆன தொடர் ஒற்றுமை

என்று முறையே காண்க.

[வி-ரை: இவற்றைப் பரயோக விவேகநூலார், பொருள் வேறுபடாது சொல் வேறுபட்ட சருபசிலிட்டம் என்று குறிப்பிட்டு, அஃது அது, இஃது இது, உஃது உது என எடுத்துக்காட்டுத்தந்து சுருங்கக் கூறியுள்ளார். -40 உரை] 17

## எழுத்துச்சாரியை

104. ஓரெழுத் திற்கே ஒருசா ரியையும்[1]
ஓரெழுத் திற்கே பலசா ரியையும்[2]
பலஎழுத் திற்கே ஒருசா ரியையும்[3]
தொடர்ந்தபல் லெழுத்திற்கு ஒருசாரியையும்[4]
சாரியை இன்றித் தனித்தும்[5] தொடர்ந்தும்[6]
தொடர்பினுள் சாரியை கலந்து தோன்றியும்[7]
வரும்என மொழிப வழக்கறிந் தோரே.

எ-டு:

1. 'வல்லெழுத் தென்ப கசட தபற' -தொ. எ. 19

'மெல்லெழுத் தென்ப ஙஞண நமன' -தொ. எ. 20

'இடையெழுத் தென்ப யரல வழள' -தொ. எ. 21

-இவை பதினெட்டும் அச்சாரியை ஒன்றையே பெறும்.

[வி-ரை: தொல்காப்பியர் 'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும் (தொ. எ. 46) என்றுரன்றி அகரத்தைச் சாரியையாகக் கூறாது 'காரமும் கரமும் கானொடு சிவணி - நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை' (தொ. எ. 134) எனக் காரம் முதலிய மூன்றனையே எழுத்தின் சாரியையாகக் கொண்டார். எழுத்தானது சாரியை பெற்றும் பெறாதும் கூறப்படும். ஆனால் மெய்கள் அகரம் பெற்றே குறிக்கப்பெறும். ஆதலின், அகரத்தை எழுத்துச்சாரியை யோடு இணைக்கவில்லை. அகரம் மெய்யோடு நீங்காத் தொடர்புடைய சாரியை என்ற கருத்தான், தொல்காப்பிய நூற்பாவினையே எழுத்துச்சாரியை நூற்பாவோடு இணைத்து உரைத்தார் இலக்கண விளக்க நூலார். (இ. வி. எ. 37) நன்னூலாரே 'மெய்கள் அகரமும் நெட்டுயிர் காரமும்' (ந. 126) என்று மெய்கள் அகரச்சாரியை பெறுதலை ஏனைச்சாரியை களோடு ஒப்பவைத்து உரைத்தார். மெய்கள் அகரச்சாரியை பெறுதற்கும் ஏனைய எழுத்துக்கள் காரம் கரம் கான் சாரியை பெறுதற்கும் இடையே உள்ள வேறுபாடு உணர்க. உயிர்மெய் நெட்டெழுத்துக்குச் சாரியை இன்று. முத்து வீரியம் உயிர்மெய் நெட்டெழுத்துக்கும் காரச்சாரியை புணர்த்துக் கூறும். (மு. வீ. புணரியல். நூற்பா 51 முதலிய)

2. அகரம், ஆகாரம், அஃகான் என்புழி ஓரெழுத்திற்கே பல சாரியை வந்தன.

3. அகாரம், ஆகாரம், ஐகாரம் என்புழிப் பல எழுத்திற்கே ஒரு சாரியை வந்தது.

4. அஆகாரம், இஈகாரம் என்புழித் தொடர்ந்த பல எழுத்திற்கே ஒரு சாரியை வந்தது.

5. 'அம்முன் இகரம்' -(ந. 125) என்புழி 'அ' என்னும் எழுத்து சாரியை இன்றித் தனித்து வந்தது.

6. 'அ இ உ-முதல் தனிவரின் சுட்டே' -ந. 66 என்புழிச் சாரியை இன்றித் தொடர்ந்து வந்தது.

7. 'ஞனஃகான் முன்னர்' -தொ. எ. 26

'லளஃகான் முன்னர்' -தொ. எ. 24

என்புழித் தொடர்பினுள் - (செய்யுளில்) 'அ' சாரியையும் கான் சாரியையும் வந்தன.

ஓர் எழுத்திற்கு ஒரு சாரியையும், ஓரெழுத்திற்கு இணைந்து இரு சாரியையும், இணை ஈரெழுத்திற்கு ஒரு சாரியையும் வருதல் பற்றிக் 'கலந்து' என்றும்.

## தொடர்மொழியின் புணர்நிலை வகை

105 தகுதி அவாய்நிலை அண்மைநிலை மூன்றும்
புணரப் புணர்வது புணர்ப்பெனப் புகல்வர்.

தகுதி - சோற்றை உண்டான் என்புழிச் சோறு என்னும் பதம் உருபு வருமொழிகளோடு புணர்தற்கு முன்பே தானே தனித்து ஓர் ஆதாரம் இன்றியே நிற்பினும், இறிஞி, மிறிஞி போலப் பொருள்அற்ற சொல்அன்றாய், பொருளும் வினைமுதல்-கருவி முதலிய பொருள் அன்றாய், இன்னும் பல குணங்களோடு கூடி நிற்றல்.

[வி-ரை: தகுதி - சோறு என்பது உண்ணப்படுவது என்னும் பொருளதாய்த் தன்பொருள் முடிதற்கேற்ற வினைக்குச் செயப்படுபொருளாய் வருவது முதலிய தகுதியோடு இருக்கும் என்பது.]

அவாய்நிலை - சோறு என்னும் அத்தனிப்பதம் தனக்கு உரிய ஐ-உருபையே விரும்புதலும் அன்றி, ஒரு வினைச் சொல்லினையும் விரும்புதல் முதலாகிய அவாவோடு கூடி நிற்றல்.

[வி-ரை; ஒருசொல் தன்பொருள் நிரம்புதற்கு வேறொரு சொல்லையோ, சொற்களையோ அவாவி நிற்பது அவாய்நிலை ]

அண்மை நிலையாவது—

சோறு கடல் முழங்கிற்று உண்டான்—

என இடையில் பிறசொற்கள் வந்து பொருந்தற்கு இடம் கொடாமல் தம்முள் அணுகிச் சோற்றை உண்டான் என நிற்றல்.

இவ்வண்மைநிலை இலக்கணம் உணராதார் இடையில் பொருத்தில், அதனைச் சான்றோர் 'ஒன்றனையும் குற்றம் கூறேம்' என்னும் நியமத்தால், யாப்புவிதி நோக்கி வந்தது என்றும், மொழிமாற்று முதலிய பொருள்கோள் இலக்கணம் நோக்கி வந்தது என்றும், இடைப்பிறவரல் நோக்கி வந்தது என்றும், இன்னும் யாதானும் ஒரு பெயரை இட்டுச் சோற்றை உண்டான் - கடல் முழங்கிற்று-எனப் பிரித்து வேறு தொடராக்குவர். இதனைச் சிலர் மறுப்பர். அஃது எங்ஙனமெனின், நாற்குலத் தலைவரும் நாற்குல மகளிரும் தனித்தனியே இருவர் இருவராய்க் கிடப்பின் புல்லுதல் கூடும். இம்முறையன்றி நான்கு தலைவரும் ஒருநிரையே பின்பு நான்கு குலமகளிரும் ஒருநிரையேயாக எண்மரும் அம்முறையே கிடப்பின், புல்லுதல் கூடாது இவ்வுவமை முதலாகப் பல உவமைகளைக் கூட்டிச் சொல்தொடர்பு உண்டு என்றால் மாத்திரமே அன்றிப் பொருள் தொடர்பு சிறிதாயினும் கூடாது என்று உபமேயம் கூறி மறுப்பர். இவ்வண்மைநிலை விதியானது தகுதி அவாய்நிலையைக் காட்டிலும் மிகவும் விரியும் என்க. தொல்காப்பியர் இம் மூன்றனையும் உள்ளடக்கி, 'நிறுத்த சொல்லும் குறித்துவருகிளவியும்' (தொ. எ. 107) என்றார்.

[வி-ரை: பிரயோக விவேகம் 19ஆம் காரிகையை நோக்குவோம்.

"ஆக்கிய சொற்கள் தகுதி அவாய்நிலை அண்மை நிலை
நோக்கிய மூன்றும் பெறச்சேர் வதுதொகை நுண்புலவோர்
வாக்கிய மும்அது தூரான் வயச்சொல் மருஉத் தொகைச்சொல்
நீக்கிய கட்டுரை சார்ந்தசொல் அண்மை நிலைபெறுமே"

-பி வி. 19

"தனிநிலைச்சொற்கள் தகுதி முதலாகிய மூன்றும் தோன்ற அல்வழியாக, வேற்றுமையாக அவ்வப்பொருள்மேல் பிளவுபட்டு இசையாது தம்முள் கூடுவது தொகை நிலையாம், பிளவுபட்டு விரிந்தது தொகாநிலை. வாக்கியங்களும் தகுதி முதலிய மூன்றும் தோன்ற வரும். தூரான்வயம் முதலாகிய நான்கும் அண்மை நிலையோடல்லது வாரா என்றவாறு — — இக்கருத்தேபற்றித் தொல்காப்பியரும் 'நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்' (தொ. எ. 107) என்றார்.

தூரான்வயச்சொல் - ஆற்றொழுக்கும் அடிமறிமாற்றும் அல்லாத 'சுரையாழ அம்மி மிதப்ப' - 'நல்ல படாஅ பறை' - முதலிய எழுவகை பொருள்கோள் இலக்கணம் பெற்ற செய்யுட்கள். மரூஉத்தொகையாவது - முன்மாலை, பின்மாலை, அரைக்காசு என்பன. கட்டிய சொல்லாவது - முயற்கோடு, கூர்மரோமகம்பலம், கரதலரோமபாசம், துன்னூசிக்குடர் என்பன. சார்ந்த சொல்லாவது - இடைப்பிறவரல் சூத்திரத்து உதாரணங்களாம். இடைப்பிறவரலுள் சிறுபான்மை பொருந்துவனவும், முழுதும் பொருந்தாதனவும் உள — — . இவையெல்லாம் அண்மைநிலை அல்லது பெறா என்க" -பி. வி. 19, உரை.

"தொடர்மொழியாவது அவாய்நிலையானும், தகுதியானும், அண்மை நிலையானும் இயைந்து பொருள் விளக்கும் தனிமொழி ஈட்டம்" -தொ. சொ. 1 சேனா.

"தொடர்மொழி பயனிலை வகையானும் தொகைநிலை வகையானும், எண்ணுநிலை வகையானும் தொடரும். இனி, வடநூலார் கூறியவாறே அவாய்நிலையானும் தகுதியானும் அண்மைநிலையானும் தொடரும் என்பதாம்" -தொ. சொ. 1நச்.]

19

## புணர்ச்சியின் நால்வகை

106. பொருத்தப் புணர்ச்சி பொருத்தமில் புணர்ச்சி
அவ்விரு வகையும் ஒருங்கியல் புணர்ச்சி
எனமூன்று என்பர் புணர்ச்சி இயல்பே;
வழுவுடைப் புணர்ச்சியை மருவழி நான்கே.

[வி-ரை; புணர்ச்சியாவது - பொருத்தப் புணர்ச்சி, பொருத்தமில் புணர்ச்சி, பொருத்தமும் பொருத்தமின்மையும் ஒருங்குஇயலும் புணர்ச்சி,வழுவுடைப் புணர்ச்சி என நான்காகும். இவை பின்வரும் நூற்பாக்களில் விரித்துரைக்கப்படும்.] 20

## பொருத்தப் புணர்ச்சி

107. பொருத்தப் புணர்ச்சியை விரிக்கின் பெருகும்;
அன்றியும் யாவரும் அறைந்தனர் என்க.

[வி-ரை: பொருத்தப் புணர்ச்சியை உயிர் 12, மெய் 11, குற்றிய லுகரம் 1 ஆக 24 ஈறுகளையும் நிலைமொழியாகக் கொண்டு, உயிர் 12 உயிர்மெய்91 இவற்றை வருமொழி முதலாகக் கொண்டு, அல்வழிப் புணர்ச்சி, வேற்றுமைப் புணர்ச்சி என்று விரித்துக் கூறல் வேண்டும் ஆதலின் பெருகும் என்றார். அன்றியும் பொருத்தப்புணர்ச்சி தொல்காப்பியம், வீரசோழியம், நன்னூல். நேமிநாதம், இலக்கணவிளக்கம் ஆகிய நூல்களில் விரித்துக் கூறப்பட்டமையின் தெளியப்படும் என்றார்.] 21

## பொருத்தமில் புணர்ச்சி

108 ஆற்றொழுக்கு அடிமறி மாற்றுஇரண்டு அல்லா
எழுவகைப் பொருள்கோள்[1], மரூஉமொழி[2] பொய்யுரை[3]
சிலஇடைப் பிறவரல்[4],பண்பு[5],அதிகாரம்
ஆதியாம் பதங்கள்[6] அவையும் அனறி
விகுதியுருபு உம்மை முதலினுள சிலவும்[7]
பொருத்தம்இல புணர்ச்சி எனபபுகன றனரே.

1. ஆற்றொழுக்கும் அடிமறிமாற்றும் பொருத்தப் புணர்ச்சியுள் அடங்கும். ஏனையவற்றுக்கு உதாரணம்,

'சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய

யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப'

முதலிய எழுவகைப் பொருள்கோளும் பலரும் விரித்தனர் காண்க.

[வி-ரை: தொல்காப்பியனார் - நிரல்நிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று எனப் பொருள்கோள் நான்கே என்றார். நன்னூலார் ஆற்றுநீர், மொழிமாற்று, நிரல்நிறை, விற்பூட்டு' தாப்பிசை, அளைமறிபாம்பு, கொண்டுகூட்டு, அடிமறி மாற்று என்ற எட்டு என்றார். நேமிநாத உரையும், யாப்பருங்கலக் காரிகை விருத்தி உரைகளும் மொழிமாற்றினை அடிமொழிமாற்று, சுண்ண மொழி மாற்று என இரண்டாகப் பகுத்துப் பொருள்கோள் ஒன்பது என்னும். இவரும் பொருள்கோள் ஒன்பது என்பதை உடன்பட்டுப் பேசுகிறார்.]

2. நுனிக்கொம்பர், கடைக்கண். அரைக்காசு, முன்றில் என முன்பின்னாக நிற்றல் முதலியன மரூஉமொழி.

3. 'ஒப்பிலா மலடி பெற்ற ஒருமகன் முயற்கொம்பு ஏறித்
தப்பில்ஆ காயப் பூவைப் பறித்தமை சாற்றினரே'
-சி. சி. பா. 17

முதலியன எல்லாம் பொய்யுரை.

4. வல்லம் எறிந்த மல்லல் யானைப் பெருவழுதி என்றலே முறை. இதன் இடையில் நல்லிளங்கோசர் தந்தை என வரல் இடைப்பிறவரல் என்க. இச்செய்யுள் போலப் பெரும்பாலும் உள என்க.

5 'இனிய உளவாக இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று' -கு. 100

என்புழி இனிய கனி, இன்னாத காய் எனப் பின்னும் பிரித்துப் பொருத்தலே பண்பு.

6. 'அதிகாரம் ஆதி' என்றது,

'அதிகாரத்தால் அவாய்நிலைதன்னால்' -89

என்னும் சூத்திரத்திற்கூறிய உதாரணம் முழுதும் கொள்ளுதற்கு என்க.

இதுவரை பதத்தோடு பதம் புணர்ந்த பொருத்தமில் புணர்ச்சி.

7. இனி, பதத்தோடு விகுதி முதலிய பொருந்தும் பொருத்தமில் புணர்ச்சி வருமாறு:

கொடிச்சேவலான், செய்த வேள்வியன், கொண்டபகைவன், உடை மாவுரியான் - இவைபோல்வன எல்லாம் சேவற் கொடியான், வேள்வி செய்தவன், பகை கொண்டவன், மரவுரி யுடையான் என்று விகுதி பொருந்தலே முறை என்க.

'செல்வத்துள் எல்லாம் தலை' –கு. 411

'நடுவூருள் நச்சுமரம்' –கு. 1008

இவை போல்வன எல்லாம், செல்வம் எல்லாவற்றுள் - ஊர் நடுவுள் என்று உருபு பொருந்தலே முறை என்க.

'புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே' – தொ. எ. 35

'சாத்தன் வருதற்கு உரியனும் ஆவன்'
இவைபோல்வன எல்லாம் புணரியல் நிலையிடையும் குறுகல் உரித்து, சாத்தன் வருதற்கும் உரியனுவன் என்று உம்மை பொருந்தலே முறை என்க.

'முதல்' என்றதனுல், ஒன்றினை உணர்ந்தான் - இரண்டினை இழந்தான் - இவை போல்வன எல்லாம் அன்சாரியை பெறுதலே முறை என்க.

[வி-ரை: "தூரான்வயச் சொல்லாவது - ஆற்றொழுக்கும் அடிமறிமாற்றும் அல்லாத 'சுரையாழ அம்மி மிதப்ப' 'நல்ல படாஅ பறை' -(கு. 1115) முதலிய எழுவகைப் பொருள்கோள் இலக்கணம் பெற்ற செய்யுட்கள்.

மருஉத் தொகையாவது - முன்மாலை, பின்மாலை, அரைக் காசு என்பன.

கட்டிய சொல்லாவது - முயற்கோடு, கூர்மரோம கம்பலம், காதல ரோமபாசம், துன்னூசிக்குடர் என்பன.

சார்ந்த சொல்லாவது -இடைப்பிறவரல் சூத்திரத்து உதாரணங்களாம்.

இனி, தூராந்வயத்துள் பதத்தோடு பதம் பிரித்துக் கூட்டலன்றி, விகுதியைப் பிரித்தும், உம்மையைப் பிரித்தும், விபத்தியைப் பிரித்தும், பண்பைப் பிரித்தும் கூட்டுவர்.

எ-டு:

'பொறிநுதல் வெயர்த்தல்' -தொ, பொ. 261

'அறம் சொல்லும் நெஞ்சத்தான்' -கு. 185

'அருங்கேடன்' -கு. 210

'அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்(து)
இன்புற்றார் எய்தும் சிறப்பு' -கு. 75

செய்த வேள்வியர்,

'பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளின்
நிவந்தோங்கு உயர்கொடிச் சேவ லோயே'
-பரிபாடல் 3: 17,8

இவற்றுள், வெயர்ப்பொறித்த நுதலாதல் - நெஞ்சோடு அறம் சொல்வான் - கேடு அரியன் - அன்புற்றார் - வேள்வி செய்தவர் - கொடியோய் என விகுதி பிரித்தல் வரும்.

'புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே' -தொ. எ. 35
இதனுள் நிலையிடையும் குறுகல் உரித்து எனவும்,

'இனிய உளவாக இன்னாத கூறல்
கனி இருப்பக் காய்கவர்ந் தற்று' -கு. 100

இதனுள் இனிய கனி, இன்னாத காய் எனவும்,

மீகண் - கீழ்நீர் - 'செல்வத்துள் எல்லாம் தலை' -கு. 411

இவற்றுள் கண்மீ - நீர்க்கீழ் - எல்லாவற்றுள்ளும் தலை எனவும்,

'நடுவூருள் நச்சுமரம்' -கு. 1008

இதனுள் ஊர் நடுவுள் எனவும் முறையே உம்மையும் பண்பும் உருபும் பிரித்தல் வரும். அநுஷங்கம் என்னும் அதிகாரத்தால் பிரித்தலும் கொள்க', -பி. வி. 19 உரை

இதனுட் பெரும்பான்மையும் இவ்வாசிரியர் கொண்டுள்ளார்.

எண்ணுப்பெயர் அஞ்சாரியை பெறுதல்,

'எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்' —தொ. எ. 198
என்பதனால் கொள்க.] 22

## இருவகையும் ஒருங்கியல் புணர்ச்சி

109. இவ்விரு வகையும் ஒருங்கியல் புணர்ச்சி
சிலஇடைப் பிறவரல் எனத் தெளிந்தனரே.

எ-டு:

வாளான் மருவாரை மாய வெட்டினன்.

அறத்தை அழகுபெறச் செய்தான்.

'நீலமயில் ஏறிவரும் ஈசன்அருள் ஞானமதலே'-

இவைபோல்வன எல்லாம் ஒருகால் பொருந்தும்; ஒரு கால் பொருந்தா என்க. பொருத்தப்புணர்ச்சி ஒன்றிருக்கவே ஏனை இரண்டும் கொண்டது என் எனின், புணர்ச்சிச்சிறப்பினும் அடி தொடை ஓசை முதலிய செய்யுளுறுப்புச் சிறத்தலின் கொண்டது என்று தெளிக. சிறுபான்மை சொல் சுருங்குதல் பொருட்டு என்றும், சொல் விரிதல் பொருட்டு என்றும் தெளிக.

இம் மூவகைப்புணர்ச்சியும் சிறப்பும், அச்சிறப்பின்மையும், பொதுவும் ஆகிய வழுவற்ற புணர்ச்சியேயாம் என்க; 'சோறுகடல் முழங்கிற்று உண்டான்' என்பதுபோலச் சிறவாத வழுப்புணர்ச்சி யன்று; புணர்ச்சி நான்காயிற்று என்க.

[வி-ரை: "இடைப்பிறவரலுள் சிறுபான்மை பொருந்து வனவும் முழுதும் பொருந்தாதனவும் உள.

எ-டு:

அறத்தை அழகுபெறச் செய்தான்

வாளான் மருவாரை மாய வெட்டினன்.

'பாடினான் தேவகீதம் பண்ணினுக்கு அரசன்' -சீவக. 2061

'குளனார் கழனிசூழ் கண்ணன் குறுங்குடி' -திவ். பிர. 2986

அடுஞ் செந்நெற்சோறு.

'உப்பின்று புற்கை உண்க'

'அளமரு குயிலினம் அழுங்கிப் பூம்பொழில்

உளமெலி மகளிரின் ஒடுங்கும் என்பவே' -சீவக. 49

-இவை சிறுபான்மை பொருந்துவன

'காமனை எரித்த கணபதி தந்தை

வாம தேவன் அடியிணை பணிவாம்'

என்றால் காமனை எரித்தல் கணபதிக்கு இன்மையின் இது பொருந்தாது.

'காமனை எரித்த வாம தேவன்

கணபதி தந்தை மலரடி பணிவாம்'

இது பொருந்தும் —...— இவை எல்லாம் அண்மைநிலை அல்லது பெருமை காண்க." -பி. வி. 19 உரை.

ஒருகால் பொருந்தும் என்றது - இடை நின்ற சொற்களோடு தொடராது, முடிக்குஞ் சொல்லோடு பொருள் இயையுமிடத்துப் பொருந்தும் என்பது.] 23

## வழுவுடைப் புணர்ச்சி

110. வழுவுடைப் புணர்ச்சியைப் பலர்விரித் தலின் இலம்.

எழுத்தினுள் விலக்கியனவும், சொல்லினுள் திணைவழு முதலியனவும் என்க.

[வி-ரை: இவற்றைத் தொல்காப்பியம் முதலிய நூல்கள் விரித்துக் கூறியுள்ளன.] 24

## எழுத்து விகாரவகை

**111.** புணர்ச்சி விகாரம் புணர்ச்சியில் விகாரம்
எனஇரண்டு ஆகும் எழுத்து விகாரம்.

புணர்ச்சி விகாரம் தொடர்மொழிக்கண்ணும், புணர்ச்சியில் விகாரம் தனிமொழிக்கண்ணும் வரும் என்க.
இது பொது; வருவன சிறப்பு. 25

## புணர்ச்சி விகாரவகை

**112.** எழுத்திலக் கணத்தின் எழுந்த விகாரம்,
யாப்பிலக் கணத்தின் எழுந்த விகாரம்
எனஇரு கூறும் புணர்ச்சி விகாரம்.

இவ்விருவகை விகாரமும், ஈரிலக்கணத்திலும் எல்லாரும் விரித்தலின், யாம் விரித்திலம் என்க.

[வி-ரை: ஈரிலக்கணம் எழுத்தும், யாப்பும்] 26

## புணர்ச்சியில் விகாரம்

**113** தோன்றல் திரிதல் கெடுதல்நிலை மாறுதல்
எனநான்கு ஆகும் புணர்ச்சியில் விகாரம்.

நிலைமாறுதலாவது - எழுத்துக்கள் ஒன்றன் நிலைக்களத்து ஒன்றுசென்று தம்முள் வேறின்றி நிலைமாறுதல்.

எ-டு:

செல் - சென்றீ; நில் - நின்றீ; யாத - யாவது; - இவை தோன்றல்.

'உயர் திணை மேன' -தொ. சொ. 57

'அஃறிணை மேன'

'உரிச்சொல்மேன' -தொ. சொ. 298

'கண்ணகன் பரப்பு' அகநா. 176

'வாளான் வெட்டினான்'

இவை லகரம் ளகரமாய்த் திரிந்தது.

மலையில் வீழ்அருவி, மழை பெய்யில் வாழலாம் - இவை ளகரம் லகரமாய்த் திரிந்தது.

'சுழியோடு எறிபுனல் பொன்னி நாடன்'

- இது குற்றெழுத்து நெட்டெழுத்தாய்த் திரிந்தது.

மாகி - மாசி - இது ககரம் சகரமாய்த் திரிந்தது.

இவை திரிதல். [மாகமாதம் மாகி என்றாகிப் பின் மாசியாயிற்று]

யாவர் - யார்; யானை - ஆனை; யாடு -ஆடு;-இவை கெடுதல்

தசை - சதை, வைசாகி - வைகாசி, நாளிகேரம் - நாரிகேளம்

'காமவிதி கண்முகம் மருங்குல்வாய் துகடினி'-

காவிமதி, துடிகனி - இவை நிலைமாறுதல்.

[விசாகமாதம் வைசாகி என்றாகிப் பின் வைகாசியாயிற்று]

புணர்ச்சி விகாரத்திற்கும் புணர்ச்சியில் விகாரத்திற்கும் வேறுபாடு என் எனின், முன்னது வருமொழி நாற்கணம் நோக்கியாவது, வேற்றுமை அல்வழி நோக்கியாவது அடி தொடை ஓசை மூன்றும் நோக்கியாவது, இன்னும் யாதானும் ஒரு காரணத்தால் விகாரப்படும் என்க, பின்னது ஒரு காரணமும் இன்றியே விகாரப்படும் என்க.

[வி-ரை: மேல, அகல், வாளால் என்பன மேன, அகன், வாளான் எனத் திரிந்தன. ஆல் உருபு வேறு, ஆன் உருபு வேறு என்பாரும் உளர். மலையின், பெய்யின் என்பன மலையில் பெய்யில் எனத் திரிந்தன. இல் என்பதும் ஐந்தன் உருபு என்பாரும் உளர். சுழியொடு என்பது சுழியோடு எனத் திரிந்தது. ஒடு என்பதும் மூன்றன் உருபு என்பாரும் உளர்.

யானை, யாடு என்பன யகர ஒற்றுக் கெட ஆனை, ஆடு என்றாயின. ஆனை, ஆடு என்பனவும் இயற்கைச்சொல் என்பாரும் உளர்,

'காமவிதி' என்ற பாடலடி எழுத்து நிரல்நிறை.

"யானைக்கோடு, பலாக்காய் என்றும், மரப்பாவை, நாடுரி

என்றும், மரவேர் மரநீட்சி என்றும் முறையே ஆகமமும், ஆதேசமும் லோபமும் வரும்.

'உரிச்சொல்மேன' 'அஃறிணைமேன' 'கடல் கண்டன்ன கண்ணகன் பரப்பு', மாகி-மாசி என வன்ன விகாரம் வரும். வைசாசி வைகாகி-தசை சதை என வன்ன விபரியயம் வரும்.

'காமவிதி கண்முகம் மென்மருங்குல் செய்யவாய்
தோமில் துகடினி சொல் அமுதம்'

என்னும் செய்யுளில், காவிமதி துடிகனி என வருவனவும் அது.

யாவர் - யார் என வன்னநாசம் வரும். யாது - யாவது என வன்ன ஆகமம் வரும்.

முன்னில் என்பது முன்றில் எனவும், 'அட்டில் ஓலை தொட்டனை நில்' என்பது நின்மே எனவும் வருதலும் அது.—

இவை தனிமொழியாக, தொடர்மொழியாக, இன்ன எழுத்தின் பின் இன்ன எழுத்து வந்தால் இன்ன வண்ணமாம் என்னும் விதியின்றி வருதலின் வேறே வைத்தார்"

பி. வி. 26 உரை.] 27

## சொல் விகாரம்

114. இந்நான்கு இயல்பும் இயம்புவர் மொழிக்கும்.

என்பது ஒரு காரணமும் இன்றியே தோன்றல் முதலிய நான்கும் பெறும் சொற்கள் என்றவாறு.

எ-டு:

சாத்தன் பசித்து உண்டான் - தோன்றல்.[பசித்து]

குருவி - குரீஇ - திரிதல்.

பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல்-பெயர், வினை, இடை, உரி - கெடுதல்.

நுனிக்கொம்பர், கடைக்கண், அடிநா, இடைநா, கடைநா, அரைக்காசு, முன்மாலை, பின்மாலை, வந்தான் உழுது, செய்தான் மாடம், இருந்தான் குன்றம் - இவை நிலைமாறுதல்.
என நான்கும் முறையே காண்க.

(கொம்பர் நுனி-நுனிக்கொம்பர். ஏனையவும் அங்ஙனமே கொள்க)

இனிச் சொற்கள் இங்ஙனம் தமிழ்மொழி விதியால் நிலை மாறுதலுமன்றி வடமொழி விதியால் நிலைமாறுதலும் உள.

எ-டு:

'செய்த வேள்வியர் (வேள்வி செய்தவர்)
'எய்திய செல்வத்தர்' (செல்வம் எய்தியவர்) -நாலடி. 350
'கழிந்த உண்டியர்' [உண்டி கழிந்தவர்] -முருகு. 132
'வேண்டா உயிரார்' [உயிர் வேண்டார்] -கு. 777
'அருங்கேடன்' [கேடரியன்] -கு. 210
'கொண்ட கூழ்த்தாகி' [கூழ் கொண்டதாகி] -கு. 745
'கூப்பிய கையினர்' [கை கூப்பினர்] -முருகு. 187
வெறுத்த ஆசையர் [ஆசையை வெறுத்தவர்]

பொறுத்த சடையினர் [சடையைப் பொறுத்தவர்]

கெட்ட வறுமையர் [வறுமை கெட்டவர்]

விட்ட அவவினர் [அவாவை விட்டவர்]

'வேர்த்து வெகுளார்' [வெகுண்டு வேரார்] நாலடி. 64

'கொழுநற் றொழுது எழுவாள்' [எழுந்து தொழுவாள்] கு. 55

வாய்பிளந்து உறங்கினன் [உறங்கி வாய்பிளந்தான்]

குறட்டைவிட்டு உறங்கினன் [உறங்கிக்குறட்டை விட்டான்]

எனவரும்.

இனித் தமிழ்மொழி விதியால் நிலைமாறுவதற்கும் வடமொழி விதியால் நிலைமாறுவதற்கும் வேறுபாடு என்னெனின், நிலைமொழியும் வருமொழியும் திரியாது தம்முள் நிலைமாறுதல், (தமிழ் மொழி விதி) திரிந்து தம்முள் நிலைமாறுதல் (வடமொழி விதி) என்க.

எ-டு:

'வைக்கும் தன்நாளை எடுத்து' -கு. 776

[தன்நாளை எடுத்து வைக்கும்]

'பருகுவன் - பைதல்நோய் எல்லாம் கெட' -கு. 1266

[பைதல்.........பருகுவன்]

என்றும், வாய்பிளந்து உறங்கினன் - குறட்டைவிட்டு உறங்கினன் என்றும் முறையே காண்க.

இனிச் சொற்கள் யாதானும் ஒரு காரணத்தால் தோன்றல் முதலிய நான்கும் பெறுதலைப் பலரும் விரித்தலின் விரித்திலம் என்க.

பெயர் என்பது பேர் என்றும்,

நீயிர் என்பது நீவிர், நீர் என்றும்,

எவன் என்பது என்னை, என் என்றும்,

பொழுது என்பது போழ்து போது என்றும்,
ஞெண்டர் என்பது ஞெண்டு, ஞண்டர், ஞண்டு, நண்டு,
நெண்டு என்றும்,
தெங்கின்காய் தேங்காய் என்றும்

இன்னும் இவைபோல ஒரு காரணமும் இன்றியே வரும் விகார மெல்லாம் இவ்விரு சூத்திரத்துள் கூறிய எண் வி தி யு ள் அடக்கிக் கொள்க.

[வி-ரை: பருகுவன் பைதல்நோய் எல்லாம் கெட என்பதை வடமொழி விதியால் பருகிப் பைதல்நோய் எல்லாம் கெடுவேன் என்று மாற்றிப் பொருள் கொள்ளல் வேண்டும் என்பதே சிறப்பு. நாளை வைத்து வழுக்கினுள் எடுக்கும் என்பதே ஏற்றது.

யாதானுமொரு காரணம் - அவாய்நிலை, சொல்லெச்சம், இசையெச்சம், குறிப்பெச்சம் முதலியவற்றுள் ஒன்று. தொல் காப்பியர் கூறிய விதிப்படி நீஇர் என்பதே சொல். இகரத்தை அளபெடையாக மயங்கி நீர் என்பதனைச் சொல்லாக்கினர். எவன் என்பது ஈண்டு அஃறிணைப் பொதுக்குறிப்பு முற்று; உயர்திணை ஆண்பாற் பெயரன்று.]

''வேர்த்து வெகுளார் விழுமியோர்' -நாலடி. 64

'கொழுநற் றொழுது எழுவாள்' -கு. 55

'தொழுது எழுவார் வினைவளம் நீறெழ' -கோவை. 118

என்புழி வெகுண்டு வேரார் - எழுந்து தொழுவாள் - எழுந்து தொழுவார் என முன் பின்னாகப் பிறந்தது. வடநூலாரும் வாய் பிளந்து உறங்கினான், குறட்டைவிட்டு உறங்கினான், கொடுத்திரந் தான் எனவும் காட்டுவர்.

'வழுக்கினுள் வைக்கும்தன் நாளை எடுத்து' -கு. 776

'பருகுவன் பைதல்நோய் எல்லாம் கெட' -கு. 1266

இவையும் முன் பின் பிறந்ததாக அமைக்க.'' -பி. வி. 39 உரை.

28

## விகாரமும் பொருளும்

115. விகாரத் தால்பொருள் வேறு படுதலும்
விகாரத் தால்பொருள் வேறு படாமையும்
உளஎன மொழிப உணர்ந்திசி னோரே.

எ-டு:

கா - காவி - காவிரி எனவும்,

ஆரம் - அரம், அன்பன் - அற்பன் எனவும்,

பாலாறு - பாலா - பால் - பா

மாலை பெற்றான் - மால் பெற்றான்,

தாரை குறித்தான் - தார் குறித்தான்

எனவும் தோன்றல் திரிதல் கெடுதலாகிய மூவிகாரமும் முறையே வரப் பொருள் வேறுபட்டது காண்க.

புளியங்காய், காமத்துப்பால், உரியநெய் எனவும்.

'திருத்தார்நன் றென்றேன் தியேன்' பொன்குடம் - பொற்குடம், ஏழுகடல் - எழுகடல் எனவும்,

பாலை விரும்பினான் - பால் விரும்பினான், மீனை வெறுத்தான் - மீன் வெறுத்தான். ஆதன் தந்தை - ஆந்தை, பூதன் தந்தை - பூந்தை, கொற்றன் தந்தை - கொற்றந்தை, சாத்தன் தந்தை - சாத்தந்தை, கொற்றனுக்கு மகனாகிய கொற்றன் - கொற்றங் கொற்றன், அகங்கை - அங்கை எனவும் தோன்றல் திரிதல் கெடுதல் ஆகிய மூவிகாரமும் வரப் பொருள் வேறு படாதது காண்க.

[வி-ரை: ஆரம் - மாலை; அரம் - தேய்க்கும் கருவி மால்-மயக்கம்; தாரை - ஒரு தோற் கருவி; தார் - ஆடவர் மார்பில் அணியும் மாலை.

புளிக்காய், காமப்பால், உரிநெய் என்பன முறையே அம், அத்து, அகரச்சாரியை பெற்றுப் பொருளை விளக்கின.

ஆந்தை — கொற்றங் கொற்றன் - இவற்றுக்கு 'இயற் பெயர் முன்னர்' (தொ. எ 347) 'ஆதனும் பூதனும்' (தொ. எ. 348) என்ற தொல்காப்பிய விதிகளேயும் 'வல்லொற்று வரினே' (ந. 371) என்ற நன்னூல் விதியையும் கொள்க. அகங்கை -அங்கை. இதற்கு 'அகம் என் கிளவிக்கு' (தொ. எ. 315) என்ற தொல்காப்பிய விதி கொள்க.

அக்கரச் சுதகம் அக்கர வருத்தனம் ஆகிய பாலாறு - கா என்பனவும், ஆந்தை பூந்தை முதலியனவும் பிரயோகவிவேகம் 26ஆம் காரிகை உரையுள் விளக்கப்பட்டுள்ளன.] 29

## ஒருசாரார் கருத்து

116. காரணம் அதனையே இடுகுறி யாகவும்
இடுகுறி அதனையே காரண மாகவும்
பலசொல் லினையே ஒருசொல் லாகவும்
ஒருசொல் லினையே பலசொல் லாகவும்
கருதுவர் ஒரோவழிக் கற்றறிந் தோரே.

எ-டு:

கரிகரம், பணிபணம், வேலன் வேல்-
இவற்றுள் யானை, பாம்பு, முருகன் என இடுகுறியாகவே பொருள் கொள்வர். இஃதன்றியும்.

பிறைசூடி, சக்கரபாணி, கணபதி, சூரனைவென்றான், சிவகாமி, மலர்மாது, உலக மாதா, தெய்வயானை.

இக்காரணப்பெயர்களை ஒரு மகனுக்கும் ஒரு மகளுக்கும் ஓர் எருத்திற்கும் ஒரு பசுவிற்கும் பொருத்தி இடுகுறிப்பெயர் என்றே கொள்வர்.

'மொழிப்பொருட் காரணம்' (தொ. சொ. 394) என்ற சூத்திரத்தில் இடுகுறிகளை எல்லாம் காரணமாகக் கொண்டது காண்க.

'வாள்போலும் வேற்கண்'

'கோடாத செங்கோல்' -சீவக. 7

'வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்' -கு. 563

'அடியளந்தான் தாஅய தெல்லாம்' -கு. 610

-இவற்றுள் கண், கோல், கோலன், அரி என ஒரு சொல்லாகவே கொள்வர். இஃதன்றியும்,

கும்பகாரன், இசைகாரன்,† பழிகாரன்-
இவற்றையும் ஒரு சொல்லாகவே கொள்வர்.

பொருப்பன் - இதனுள் பொருப்பு என்னும் உரிமைப் பொருளை உடையான் முருகன் என்றும், பொருப்பிற்கு இறைவனாகிய குறிஞ்சியான் என்றும் பல சொல்லாகவே கொள்வர்.

இந்நான்கிற்கும் சொற்கிடந்தபடியே பொருள் கூறில் இலக்கணவழுவாதல் நோக்கி, இங்ஙனம் மாறுபடச் சூத்திரம் செய்தனம் என்க. இலக்கணவழுவாதலை விரிக்கின் பெருகும்.

[வி-ரை: கரிகரம் பணிபணம், வேலன்வேல் என்பனவற்றில் கரி, பணி, வேலன் என்பன காரணப்பெயர். கரத்தை உடையது, பணத்தை உடையது, வேலை உடையவன் என இவை பொருள்படும். இவற்றைக் காரணப்பெயராகவே கொண்டு பொருள் விரிக்கின் கரத்தை உடையதன் கரம், பணத்தை உடையதன் பணம், வேலை உடையவனது வேல் எனப் பொருள்பட்டுக் கூறியது கூறலாமாதலின் இக்காரணப் பெயர்களை யானை, பாம்பு, முருகன் என இடுகுறியாகவே கொள்க என்றார்.

தெய்வப் பெயர்களை ஏனைய உயர்திணைக்கும் அஃறிணைக்கும் இட்டு வழங்குங்கால், அவை தத்தம் காரணப் பொருள்களை விளக்காமல் அவ்வப் பொருள்களைச் சுட்டும் இடுகுறியாகவே வருதல் காண்க.

† (பா-ம்) அலங்காரன்.

'மொழிப் பொருட்காரணம் விழிப்பத் தோன்று' என்ற நூற்பாவான் ஒவ்வொரு சொற்கும் வெளிப்படையாகப் புலப்பட்டோ புலப்படாமலோ காரணம் உண்மை விளக்கப் பட்டதனால், சொற்கள் யாவும் காரணம் பற்றியே வந்தன என்னும் இலக்கண நூல் கருத்து உணரப்படும்.

வாளைப்போலும் வேல் போன்ற கண், வளையாத செங்கோல், அஞ்சத்தக்கண செய்யும் வெங்கோலன் என்று சொல்லுக்குச் சொல் பொருள் கொண்டால், வேற்கண் - செங்கோல் -வெங் கோலன் என்ற சொற்கள் தம் அடைமொழிகள் கூறிய - வற்றையே தாமும் கூறலின் கூறியது கூறலாம் வழுவாதலின், இவற்றை - கண் - கோல் - கோலன் என்ற ஒரு சொல்லாகவே கொள்க. அடியளந்தான் என்புழி, 'தாயது' எனப் பின்னர் வருதலின், அஃது அரியென ஒரு பெயர் மாத்திரையாய் நின்றது.

குடத்தைச் செய்பவன் - இசையில் வல்லவன் - பழியைச் செய்பவன் - என்று பொருள்படும் இரு சொற்கள் ஒருவனையே சுட்டலின், கும்பகாரன் முதலிய மூன்றும் ஒரு சொல்லாகவே கொள்ளப்படும்.

பொருப்பன் - பொருப்பிற்குக் கடவுள் ஆகியவன் என்ற பொருளில் வரும்போதும், பொருப்பினை ஆள்பவன் என்ற பொருளில் வரும்போதும் வெவ்வேறு சொற்களாகி வெவ்வேறு பொருள்படும் என்பது.

மாறுபடுதல் - இடுகுறியைக் காரணப்பெயராக மாற்றிக் கூறல் போன்ற செய்தி.

"பணிபணம் - கரிகரலீலை - வஞ்சகரீரம் - கரிகளபம் - என்பன பூர்வபதமும் உத்தரபதமும் சமானார்த்தகம் என்பார்க்கு 'வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்', 'அடியளந்தான் தாயதெல்லாம்', 'கோடாத செங்கோல்' என்பன போலக் கேவலபத மாத்திரையாய் நின்றன" பி. வி. 26 உரை.] 30

## பகுபத வகைகள்

117. பகுபதத்து இலக்கணம் பகருங் காலை
பகாப்பதம் தொடர்மொழி இரண்டினுள் படாமல்
ஒருமொழி ஈற்றினும் தொடர்மொழி ஈற்றினும்
பின்மொழி கெட்ட முன்மொழி ஈற்றினும்
முன்மொழி கெட்ட பின்மொழி ஈற்றினும்
அளவிலை யாகி வரும்விகு திகளில்
பொருந்தும் விகுதிகள் பொருந்தல் அன்றியும்[1],
வேற்றுமை உவம உருபுகள் இடைநிலை
சாரியை நான்கும் தனிதரும் பொருந்தியும்[2],
வேற்றுமைப் பொருள்களை ஏற்று நின்றும்[3],
ஒவ்வொரு வேற்றுமை வெவ்வேறு ஆகியும்[4],
இதனை உடையது இதுஎன நின்றும்[5],
இதனது உடைமை இதுஎன நின்றும்[6],
இடப்பொருள் உணர்த்தும் விஞச்சுட்டு எண்பெற
இடைச்சொல் ஆகியே எழுந்து நின்றும்[7],
தன்மை மாத்திரம் தானய் நின்றும்[8],
பெயர்ச்சொல் முதலா நான்கினும் பிறந்தும்[9],
பெயர்தான் அறுவகை யாகப் பிரிந்தும்[10],
பகுபதம் ஆயினும் பலகுணப் படலால்
பகாப்பதம் என்னப் பெயர்படல் அன்றியும்[11],
வினைக்குறிப்பு முற்று வினைக்குறிப் புப்பெயர்
இருவகை யெச்சம் எனப்பெயர் பெற்றும்[12],
பகாப்பதப் பொருள்படப் பகுபதம் ஆகியும்[13],
பகாப்பதச் சொல்படப் பகுபதம் ஆகியும்[14],
பகுத்தலை ஏற்றும் பகாமையை ஏற்றும்,
இவ்விரு குணத்தையும் ஒருங்கே ஏற்றும்[15],
பலசொல் ஒருபொரு ளாகப் பட்டும்[16],
பலபொருள் ஒருசொல் ஆகப் பட்டும்[17],
இன்னும் பலவாய் இயலும் என்ப.

பகுபதத்து இலக்கணம் பகருங் காலை
பகாப்பதம் தொடர்மொழி இரண்டினுள் படாமல்

குதிரை - பகாப்பதம்;
கருங்குதிரைக்கால் - தொடர்மொழி;

இவ்விரண்டும் அல்லன எல்லாம் பகுபதமே என்று கொள்ளுதற் பொருட்டு 'இரண்டினுள் படாமல்' என்றும்.

1. ஒருமொழி ஈற்றினும் தொடர்மொழி ஈற்றினும்
பின்மொழி கெட்ட முன்மொழி ஈற்றினும்
முன்மொழி கெட்ட பின்மொழி ஈற்றினும்
அளவிலை யாகி வரும்விகு திகளில்
பொருந்தும் விகுதிகள் பொருந்தல் இயையும்

எ டு:

வேலன் - என ஒருமொழி ஈற்றின் விகுதி பொருந்தியது.
சேவற்கொடியோன்;
'தொடியணி தோளன்' -முருகு. 211
'செந்நிறக் குடுமி வெண் சேவற் பதாகையன் -

எனத் தொடர்மொழி ஈற்றின் விகுதி பொருந்தியது.

தெலுங்கன் சொல்லுதல் தொழிலை உடைய பாடை தெலுங்கன் சொல்லு எனற்பாலது தெலுங்கு எனப் பின்மொழி கெட்ட முன்மொழி ஈற்றின் விகுதி பொருந்தியது. வடுகு என்பதும் அது.

பஞ்ச இலக்கணத்தான், எழுத்திலக்கணத்தான், நாற்கவிஞன், ஆசுகவிஞன் எனற்பாலன, இலக்கணத்தன், கவிஞன் என முன்மொழி கெட்ட பின்மொழி ஈற்றின் விகுதி பொருந்தியது.

2. வேற்றுமை உவம உருபுகள் இடைநிலை
சாரியை நான்கும் தனித்தும் பொருந்தியும்

அருளை......அருட்கண், [ஐ முதலிய உருபுகள்]
அருள் போல [உவம உருபு]
அருளாநின்று, அருள்கின்று [இடைநிலை]
கோன், காமத்து [ன், அத்து - சாரியை]

என வேற்றுமை உருபும், இடைநிலையும், சாரியையும் தனித்துப் பொருந்தின.

அருளினை அருளின்கண், வானம் போல, உண்ணா நின்றனன், கோன்மை, காமத்தின் - எனக் கலந்தும் பொருந்தின.

[வி-ரை:

தனித்தும் என்ற உம்மையால் கலந்தும் எனவும் கொள்க.
அருளினை, அருளின்கண் - இன் - சாரியை; ஐ, கண் - உருபு
வானம் போல - அம் - சாரியை; போல - உவம உருபு.
உண்ணா நின்றனன் - அன் - சாரியை; ஆநின்று - இடைநிலை.
கோன்மை - ன் சாரியை; மை - விகுதி.
காமத்தின் - அத்து - சாரியை; இன் - சாரியை.]

3. வேற்றுமைப் பொருள்களை ஏற்று நின்றும்.

[வி-ரை: வேற்றுமைப் பொருள்களை ஏற்று நிற்றலாவது- உருபு ஏற்கும் பெயர், அவ்வுருபும் அவ்வுருபினை முடிக்கும் சொல்லும் கெட, தான் விகுதியொன்று பெற்றுப் பகுபதமாகி, தன் தொடர்ப்பொருள் முழுதையும் குறிப்பினால் அறிவித்தல்.

பொன்னை உடையான் என்ற தொடரில் ஐ உருபும் உடையான் என்ற முடிக்கும் சொல்லும்கெட, அன் விகுதி ஒன்று பொன் என்ற சொல்லோடு கூடிப் பொன்னன் என்ற பகுபதமாகிப் பொன்னை உடையவன் என்ற தொடர்ப் பொருளைக் குறிப்பது போல்வன இதற்கு எடுத்துக்காட்டு.]

4. ஒவ்வொரு வேற்றுமை வெவ்வேறு ஆகியும்

[வி-ரை: ஒவ்வொரு வேற்றுமை வெவ்வேறாகியும் இயலுவதாவது, முதற்சொல் ஏற்கும் வேற்றுமை உருபு வேறு படுவது போல முடிக்கும் சொல்லும் வேறாக அமையவும், அவ் வுருபும்முடிக்குஞ்சொல்லும் ஆகியவற்றின் பொருளை உள்ளடக்கி, அம்முதற்சொல்லோடு விகுதியொன்று சேர்ந்து பகுபதமாகி அத்தொடர்ப் பொருளைக் குறிப்பதாம்.

கணக்கான் முயன்று உண்பவன் - கணக்கன்,

ஆரூர்க்கு இறைவன் - ஆரூரன்,

சிவனது சமயம் - சைவம்,

தம்முடைய உறவினன் - தமன்

உருபு வேறுபடுந்தோறும் முடிக்குஞ் சொல்லும் வேறுதல் காண்க.]

குழையினை அணிந்தவன் - குழையன்,

தமிழைச் சொல்லுவான் - தமிழன்,

பொன்னை உடையான் - பொன்னன்.

மருந்தினைக் கூட்டுவான் - மருத்துவன்,

கூத்தினைப் பயின்றவன் - கூத்தன்,

மூன்று என்னும் எண்ணைப் பெற்றவர் - மூவர்

எனவும்,

தொல்காப்பியனால் செய்யப்பட்ட நூல் - தொல்காப்பியம்,
(அகத்தியம், அவிநயம் முதலானதும் அது)
கணக்கான் முயன்று உண்பவன் - கணக்கன்.
ஆற்றலால் வென்றவன் - ஆற்றலான்,
மானத்தால் கெட்டவன் - மானி'
காமத்தால் மயங்கினவன் - காமி,
பிணியான் வருந்துகின்றன்வன் - பிணியன்,

எனவும்,

ஆரூர்க்கு இறைவன் - ஆரூரன்,

சிவனுக்கு அடியவன் - சைவன்,

பகவற்குப் பாடியாடினான் - பாகவதன்,

அரசற்கு மகள் - அரசி,

எனவும்.

வடக்கின்நின்றும் வந்தவன் - வடமன்,

வாணிகத்தின் ஆயினான் - வாணிகன்

எனவும்,

சிவனது சமயம் - சைவம்,

மரத்தினது கோர்பு - மரத்தது,

கோட்டது நுனி - கோட்டது,

எழுத்தினது இலக்கணம் - எழுத்தது,

சூத்திரத்தினது பொருள் - சூத்திரத்தது,

குழலினது ஓசை - குழலது,

[தமன், தமள், தமர், நமன், நமள், நமர், நுமன், நுமள், நுமர், எமன், எமள், எமர் என்ற பன்னிரு கிளைப்பெயரும் அது] எனவும்,

மதுரைக்கண் இருந்தவன் - மதுரையான்,

விசாகநாளில் பிறந்தவன் - விசாகன்,

அரச குலத்தில் பிறந்தவன் - அரசன்,

அம்பலத்தில் ஆடினவன் - அம்பலவன்,

எனவும், வேற்றுமைப் பொருள்களை ஏற்று நின்று வெவ்வேறாயின

5. இதனை உடையது இதுஎன நின்றும்

6. இதனது உடைமை இதுஎன நின்றும்

இதனை உடையது இது, இதனது உடமை இது - இவ்விரண்டனையும் திணைபால் இடங்கள்தோறும் ஒட்டி, இவற்றிற்கு உதாரணம் முன்னும் பின்னும் காட்டினவற்றுள் காண்க.

[ வி-ரை: குழையை உடையது குழையது.
சாத்தனது உடைமை சாத்தனது.

- பிறவும் அன்ன.]

7. இடப்பொருள் உணர்த்தும் வினா-சுட்டு எண்-பெற
இடைச்சொல் லாகவே எழுந்து நின்றும்

யாண்டு, யாங்கு, எங்கு, எங்கண், எவண், யாவண், எங்ஙனம், யாங்ஙனம் எனவும்,

ஆன, ஈன, அங்கு, இங்கு, உங்கு, ஆங்கு, ஈங்கு, ஊங்கு, அவண், இவண், உவண், அம்பர், இம்பர், உம்பர், அங்ஙனம் இங்ஙனம், உங்ஙனம், எனவும்,

ஒருவயின், இருவயின் மூவயின், எண்வயின் எனவும், இடப்பொருள் உணர்த்தும் வினா - சுட்டு எண் பெற இடைச் சொல்லாகவே எழுந்து நின்றன.

[வி - ரை : இவை பிரயோக விவேகம் 33-ஆம் காரிகை உரையில் விளக்கப்பட்டுள்ளன. ஒருவயின், இருவயின், பலவயின் - இவை எண்ணொடு நின்ற ஏழாம் வேற்றுமை. இடப்பொருள் உணர்த்தும் இடைச்சொல் என்னும் அவ்வியயதத்திதன். அவ்வயின் இவ்வயின் உவ்வயின் எவ்வயின், அங்கண் இங்கண், அவ்வாய் ஆயிடை - 'இவை சுட்டு முதல்வயினும்' (தொ. எ. 334) என்னும் சூத்திரத்துக் காட்டிய ஏழாம் வேற்றுமை இடப் பொருள் உணர்த்தும் அவ்வியயதத்திதன். நன்னூலில் அங்ஙனம் இங்ஙனம் உங்ஙனம் எனக் காட்டியனவும் அன்ன. பி.வி.33உரை]

8. தன்மை மாத்திரம் தானாய் நின்றும்

வெண்மை வெளுப்பு வெள்ளை, கருமை, கறுப்பு, ஆண்மை, பெண்மை, கோன்மை, ஆடுதல் ஆடல் ஆட்டம் - எனத் தன்மை மாத்திரம் தானாய் நின்றன.

[வி - ரை : "ஆண்மை, பெண்மை, தாளாண்மை, குடிமை, செங்கோன்மை, வள்ளன்மை, காதன்மை, இவறன்மை, ஒருமை, இருமை, எழுமை, பகைமை, கேண்மை, புகழ்மை, சமழ்மை இவை எல்லாம் ஆண் பெண் முதலிய நாமத்தின்கண் வந்த பாவ தத்திதனும்" - பி. வி. 34.]

9. பெயர்ச்சொல் முதலா நான்கினும் பிறந்தும்

குழையன், உண்டான், மற்றது மற்றையான். குழவி மழவன் மகவு - எனப் பெயர்ச்சொல் முதலா நான்கினும் பிறந்தன.

[வி - ரை : குழை - பெயர் ; உண் - வினை ; மற்று, மற்றை - இடை ; குழவி, மழ, மகவு - உரி.]

10. பெயர்தான் அறுவகை யாகப் பிரிந்தும்

பெயர் அறுவகையாகப் பிரிதல் (பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில்) நன்னூலார் விரித்தனர்; அதனால் விரித்திலம் என்க.

[வி - ரை : பொன்னன், மதுரையான், ஆதிரையான் கண்ணன், நல்லன், தச்சன் முதலாக முறையே காண்க.]

11. பகுபதம் ஆயினும் பலகுணப் படலால்
பகாப்பதம் என்னப் பெயர்படல் இயலும்

படலால் பெற்று என்க. ஐந்து பெயர் பெற்றது பலர் நூல்களானும் காண்க. பகுபதம் என்னும் பெயர் கூடில் ஆறென்றே கொள்க.

[வி -ரை : 'த ந நு எ என்னும் அவை முதலாகிய, கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா' (தொ. சொ. 410 சே.) என்னும் நூற்பாவில் கூறப்பட்ட தமன், தமள், தமர், தமது தம்மவை, நமன் — —நம்மவை, நுமன் — — நும்மவை, எமன் — — எம்மவை - என்பன. இவை தனக்குச் சொந்தமானவன், தமக்குச் சொந்தக்காரன் என்றாற்போல இருவகைக்கும் பொது ஆதலின்

இவற்றைப் பிரித்துப் பகுக்காது பகாப்பதமாகவே கொள்க என்பது. (பி. வி. 32 உரை) காண்க. இவை பகுபதமாகக் கொள்ளின் 'பெயர்தான் அறுவகையாகப் பிரிதலும்' என்பதனுள் அடங்கும்.]

12. வினைக்குறிப்பு முற்று வினைகுறிப் புப்பெயர்
இருவகை எச்சம் எனப்பெயர் பெற்றும்

[வி-ரை :

பகுபதம் குறிப்புவினைமுற்று, குறிப்புவினையாலணையும் பெயர், பெயரெச்சம், வினையெச்சம் என்ற பகுப்புக்களையும் பெறும்.

அவன் நல்லன் – குறிப்பு வினைமுற்று.

நல்ல வந்தன - குறிப்பு வினையாலணையும் பெயர்.

வந்த சாத்தன் – பெயரெச்சம்.

வந்து போனான் – வினையெச்சம்.

நல்லன், நல்ல, வந்த, வந்து என்பன பகுபதமாதல் உணரப்படும்.]

13. பகாப்பதப் பொருள்படப் பகுபதம் ஆகியும்

'குறியெதிர்ப்பை நீரது உடைத்து' –கு. 221

'மாதர் மனைமாட்சி யாள்' -நாலடி. 382

'வண்ண வண்டின் குரல் பண்ணைபோன்றனவே' பரி. 14-4

'நுனிக் கொம்பர்' -கு.476

'நத்தம் போல் கேடும்' -கு.235

'சோதி வாயவும் கண்ணவும் சிவந்தன'

'வானம் துளங்கில் என்' –தேவா.

'இருவயின் பெயரொடும்' –ந.89

'பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்'
-தொ. சொ. 156.

என்புழி நின்ற பகுபதங்களை நீர், மாது, பண், கொம்பு, நத்து, வாய், கண், வான், இரண்டு, சொல், பொருள் எனப் பகாப்பத மாகவே பொருள் கொள்வர் இதனைத் தமிழ்நூலோர் பகுதிப் பொருள் விகுதி எனப் பெயரிட்டு வழங்குவர்.

[வி-ரை: "மாதர் மனைமாட்சியாள்" எனவும், கனங்குழை மாதர் கொல்' எனவும், 'குறிபெதிர்ப்பை நீரது உடைத்து, எனவும், 'வண்ண வண்டின குரல் பண்ணை போன்றனவே' எனவும், 'நத்தம்போல் கேடு' எனவும், 'சோதிவாயவும் கண்ணவும் சிவந்தன' எனவும், நீலகம், மௌத்திகம், படகம் எனவும் இருவகை மொழியினும் சாமானிய தத்திதனில் வரும். 'கொளத்திரிபிலவே' (தொ. எ 307) என்பது போல வரற்பாலது 'திரிபிடன் இலவே' (தொ. எ. 351) என்பதும், 'இருபெயரோடும்' என்பது 'இருவயின் பெயரொடும்' (ந. 89) என்பதும் அவ்வியய தத்திதனில் வரும்" ] (பி.வி. 44. உரை.)

**14.** பகாப்பதச் சொல்படப் பகுபதம் ஆகியும்

'இல்லதுஎன் இல்லவள் மாண்பு ஆனல்' —கு. 53

அப்படைக்கு ஆயிரம் பாய்மா வந்தன,

'களிமடி மானி' —ந 39

அவனினும் இவன் குணம்:

கவி வந்தான்;

இறை காக்கும்;

கோ உண்மை கூறுவாள்;

ஆயிரம் தச்சுச் செய்த தேர்;

பத்துக் கொல்லுச் செய்த இருப்புலக்கை;

மூவேந்து சொன்ன மொழி; (அரசு அமைச்சும் அது)

இருவர்க்கும் நடு இவன்;

பேதை தொழுதாள்; (பெதும்பை முதல் ஆறும் அது)

- இவற்றுள் நின்ற பகாப்பதங்களை எல்லாம் மாண்பினுள், பாய்மாஉடையார், களியன், மடியன், குணவான், கவிஞன், இறைவன், கோன், தச்சர், கொல்லர், வேந்தர், அரசர், அமைச்சர், நடுவன், பேதையாள், [பெதும்பையாள் முதல் ஆறும் அது[ எனப் பகுபதமாகவே பொருள். கொள்வர். இதனைத் தமிழ் நூலார் ஆகுபெயருள் அடக்கி வழங்குவர்,

[வி-ரை : "வேந்தனும் வேந்து கெடும்" 'அரசெனப்படுவது நினதே பெரும' இவற்றுள் வேந்து அரசு என்பன வேந்தனது தன்மை, அரசனது தன்மை என பாவத்தன்மையை உணர்த்தும் உகர ஈற்றுப் பாவதத்திதனும். புங்ஸ்துவம், ஸ்திரீத்துவம் என வடமொழியினும் வரும். 'பிறனியலாள் பெண்மை நயவாதவன்' 'நாணொடு நல்லாண்மை பண்டுடையேன்' 'பொருண்மை சுட்டல்' என்பனவும் அது" -பி. வி. 34 உரை.]

15. பகுத்தலை ஏற்றும் பகாமையை ஏற்றும்
இவ்விரு குணத்தையும் ஒருங்கே ஏற்றும்

பகுத்தலை ஏற்றல் முதல் மூன்றும் முன்னர்க் காட்டினவற்றுள் காண்க. அவை,

குழையன் ஊரன் எனவும்,

ஆன, ஈன எனவும்,

அங்ஙனம், இங்ஙனம் எனவும் போல்வன கொள்க.

[வி-ரை: குழை+அன், ஊர்+அன் எனப் பகுத்தல்.

ஆன், ஈன் என்பன அகரம் பெற்ற வழியும் ஆன் + அ, ஈன் + அ - என்று பிரித்துக் கொள்ளப்படா. ஆன் - அவ்விடம்; ஈன் - இவ்விடம். 'மன்னும் சின்னும் ஆனும் ஈனும்'

– தொல். எ. 333

அங்ஙனம், இங்ஙனம் என்பன - அ + ஙனம், இ + ஙனம் என்ற சொற்களின் சேர்க்கையால் ஆகியன. அவை பகுபதம் போலச் சேர்ந்தும் பகாப்பதம் போலவே கொள்ளப்படுகின்றன.]

16. பலசொல் ஒருபொரு ளாகப் பட்டும்

கள்ளன், திருடன், சோரன் - எனப் பலசொல் ஒரு பொருளாகப்பட்டு வந்தன.

17. பலபொருள் ஒருசொல் லாகப் பட்டும்

அரசன் என்பது அரச குலத்தில் பிறந்தவன், அரசனுக்குப் பிறந்த வேறொரு சாதியான், அரசனது தொழிலை ஏற்ற வேறொரு சாதியான், அரச குலத்தின் பிறந்து வேறொரு சாதியாய் வழுவினவன் என்றும்.

மாண்டான் என்பது பஞ்சத்தில் படையில் மாண்டான் என்றும், குணத்தில் பொறையில் கல்வியில் ஒழுக்கத்தில் மாண்டான் என்றும் பல பொருள்படுதலின் பலபொருள் ஒரு சொல்லாகப்பட்டு வந்தமை காண்க.

[வி-ரை: பகுபத எடுத்துக்காட்டுக்களுள் பல பிரயோக விவேகம் தத்திதப்படலத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளன. 44-ஆம் காரிகையுரையுள் பகுதிப்பொருள் விகுதிகளுக்கு இவர் கூறும் எடுத்துக்காட்டுக்கள் பல இடம் பெற்றுள்ளன.

பெதும்பை முதலிய ஆறும் என்றது - பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்பன.]

'இன்னும் பலவாய் இயலும் என்ப'

இன்னும் பல என்றதனால், வயிறன், பல்லன், பொய்யன், தோளன், அறிவன் - இவைபோல்வன எல்லாம் சொல்கிடந்தபடி பொருள்படாமல் எல்லார் வயிற்றைக் காட்டிலும் பெருவயிறன், எல்லார் பல்லைக் காட்டிலும் பருத்து நீண்டு உயர்ந்த பல்லன், யாவரும் பொய்யும் மெய்யும் கலந்து சொல்வர் இவன் மிகவும் பொய்யன், எல்லார் தோளினும் பலமுள்ள தோளன், உலகர் அறிவு போலன்றி மயக்கம் தீர்ந்த அறிவன் என்று பொருள் படுவனவும்.

'கண்டனையது' (கோவை. 84) 'விழுங்கியற்று' (கு. 931) 'கண்டற்றுல்' (கு. 249) எனவும், மயிலன்னாள் - புலிபோல்வான் எனவும், சைவன் - பார்வதி - கார்த்திகேயன் - காங்கேயன் - வைநதேயன் எனவும் முதற்கண் உவமஉருபு, விகுதி வருவனவும் கொள்க.

[வி-ரை: உவம உருபு - அனைய, அற்று, அன்ன, போல் என்பன. சிவனை வழிபடுவான் சைவன்; கார்த்திகையன் மகன், கங்கையின் மகன், விந்தையின் மகன் என்பன முறையே கார்த்திகேயன், காங்கேயன், வைநதேயன் என வரும். பர்வத ராசன் மகள் பார்வதி என்பது. இவையும் பிரயோக விவேக தத்தித படலத்துள் காணப்படும். - பி. வி. 32 உரை.]

இனி, 'அன் ஆன்' (140) என்னும் சூத்திரத்தால் நன்னூலார் விகுதிகளை அளவு செய்திருக்கவே, அளவிலையாகி வரும் விகுதி என்றது என் எனின், தெலுங்கு - வடுகு - அருளு-வாரு சொல்லு எனவும், அகத்தியம் - தொல்காப்பியம் - அவி நயம் - மகன் - மகள் - மகார் - பிறன் - பிறள் - பிறர் - அவ் இவ் - உவ் - எவ் - கோன் எனவும்.

ஆண்மை - பெண்மை - உடுக்கை - படுக்கை - காப்பு - புணர்ப்பு - புணர்ச்சி - மகிழ்ச்சி - குழவி - மகவு எனவும், வடமன் - தென்மன் - எழுதல் - ஆடுதல் - சாக்காடு - வேக்காடு உணப்பாடு - தினப்பாடு - ஆக்கம் - ஆட்டம் பாய்த்துள் - செய்யுள் - வாரானை எனவும், உயிர் - மெய் - உயிர்மெய் - சொல் ஆகிய நான்கு விதிகளும் அளவின்றி மிகவும் பரந்து வருதல் நோக்கி, சிறுபான்மை பயன்படும் பொது விகுதிகளை எல்லாம் ஒழித்துப் பெரும்பான்மை பயன்படும் வினைமுற்று ஒன்றற்கே வேண்டும் சிறப்பு விகுதிகளை மாத்திரமே அளவு செய்தார் என்று கொள்வதல்லது, எல்லாவிகுதிகளையும் அளவு செய்தார் என்று கொள்ளற்க.

[வி-ரை: உயிர் விகுதி - உ; மெய்விகுதி - ம், ர், ள், வ், ன்; உயிர்மெய் விகுதி - மை, கை, பு, சி, வி, உ; இடைச்சொல் ஆகும் விகுதி - மன், தல், ஆடு, பாடு, அம், உள், ஆனை; இவர் கூறும் மெய்விகுதிகளில் கருத்து வேறுபாடு உண்டு.]

அன்றியும், அவர் பெயரியலில் கொண்ட விகுதிகளும், வினையெச்சத்திற்குக் கொண்ட பன்னிரண்டு விகுதிகளும், தொல்காப்பியர் அவ்வெச்சத்திற்குக்கொண்ட பின் - முன் - கால் - கடை - வழி - இடத்து முதலிய விகுதிகளும், அவ்விருவரும் எடுத்து ஓதாத

அவா உண்டேல் - அற்றால் - பாடி - ஆடி - ஆய் - போய் முதலிய விகுதிகளும், மூன்றனுள் அடங்காத

'மகன் எனல் மக்கட் பதடி எனல்' –கு. 196
முதலிய பலவகை வியங்கோள் விகுதிகளும், இன்னும், பாட்டு, நக்கு, தேற்று, வீச்சு, ஒத்து முதலியவற்றுள் இடைநிலைத் தன்மைப் பட்டு ஒற்றுக்களாய் வரும் விகுதிகளும், அளவிறந்து வருதல் நோக்கி என்க.

[வி-ரை: ஏல், ஆல், இ, ய், முதலிய வினையெச்ச விகுதி; அல் – வியங்கோள் விகுதி;

பாடு என்பது பாட்டு எனப் பெயராயிற்று.
நகு என்பது - நக்கு என இறந்த கால வினையெச்சமாயிற்று.
தேறு என்பது தேற்று எனத் தன்வினையும் பிறவினையும் [ஆயிற்று.
வீசு என்பது வீச்சு எனப் பிறவினையாயிற்று.
ஓது என்பது ஒத்து எனப் பெயராயிற்று.

இவற்றில் இடையில் வந்த ஒற்றுக்கள் விகுதியின் செயலைச் செய்வன.]

அவர் எடுத்தது ஓதியது சிறப்பு விகுதியே என்றது என்றால் பெற்றீர் எனின்,

அன் விகுதியை ஈரிடத்தும் கூறுதலானும்,

'இன்ன பிறவும் பொதுச்சாரியையே' –ந. 244

என்றாற்போலப் பொது விகுதிகளே என்னாது 'வினையின் விகுதி' (ந. 140) என்றமையானும்,

இம்முறையே வினையியலுள் முற்று ஒன்றற்கு மாத்திரமே எடுத்துக் கூறுதலானும்,

ஆண்டும் அன்விகுதியை ஈரிடத்தும் கூறுதலானும்,

இம்முற்று விகுதிகளில் சில பிறவற்றினும் செல்லினும் செல்லுக என்னும் கருத்தால் எதிரது தழீஇய எச்ச உம்மை யோடு 'பெயரினும் சிலவே' (ந. 140) என்றமையானும்,

பொதுவிதியாயின் 'பெயரினும் சிலவே' என்னார் ஆதலானும்,

பகுதி இடைநிலைகளுள் முற்று ஒன்றற்கே சிறப்பித்துக் கூறி ஏனைப் பகுதி இடைநிலைகளை ஒழித்தமையானும்,

இவ்விகுதிச் சூத்திரத்திற்கு முன்பின் நின்ற சூத்திரக் கருத்துக்களானும்,

பெயரியலுள்ளும் வினையியலுள்ளும் வேண்டும் விகுதிகளை அவற்றிற்கு வேறாக எடுத்து ஓதலானும், யாம் காட்டிய நால்வகை விகுதிகளை ஒழித்தமையானும் இன்னும் பலவற்றானும் என்க.

பிறவாவன ஈரெச்சங்களும், பெயர்ப் பகுபதங்களும், மற்றது மற்றையான் முதலிய இடைப் பகுபதங்களும், மழவன் முதலிய உரிப் பகுபதங்களும் என்க.

இக்கருத்து அறியாதார் அச்சூத்திரம் பொது என்றும், வினைக்கும் பெயர்க்குமே பொது என்றும், அன்விகுதி கூறியது கூறல் என்னும் குற்றம் என்றும், ஒன்று அல்விகுதி மற்றொன்றில் அன்விகுதி என்றும் சூத்திரம் பிழைபட்டதாகக் கருதித் திருத்தித் திருத்தினம் என்றும், இன்னும் பல கருதி மயங்குவர் என்க.

[வி-ரை: பெயரில் கொண்ட விகுதிகள்:

| | |
|---|---|
| 'கிளை எண் கு ழூ உ முதல்' | -ந. 276 |
| 'கிளை முதலாகக் கிளந்த' | -ந. 277 |
| 'கிளந்த கிளை முதல்' | -ந. 278 |
| 'வினைச்சுட் டுடனும்' | -ந. 279 |
| 'முன்ன ரவ்வொடு வரு' | -ந. 280 |

என்பன.

வினையெச்சத்திற்குக் கொண்ட பன்னிரு விகுதிகள்,

'செய்து செய்பு செய்யாச் செய்யூ' -ந. 343

என்ற நூற்பாவில் காண்க.

'பின் முன் கால் கடை' -தொ. சொல். 229

அன் விகுதியை ஈரிடத்தும் கூறல்,

'அன்ஆன் அள்ஆள் அர்ஆர் பய்மார்

அஆ குடுதுறு என்ஏன் அல்அன்' -ந. 140

என்பது,

வினையியலுள் முற்று ஒன்றற்கே எடுத்துக் கூறியது:

'அன் ஆன் இறுமொழி' -ந. 325

'அள் ஆள் இறுமொழி' -ந. 326

'அர் ஆர் பவ்வூர் அகரம்' -ந. 327

'குறுடுக் குற்றிய லுகர' -ந. 328

'அஆ ஈற்ற பலவின்' -ந. 329

'குடுதுறு என்னும்' -ந. 331

அம்ஆம் எம்ஏம' -ந. 332

'ஐஆய் இகர ஈற்ற' -ந. 335

'இர்ஈர் இரண்டும்' -ந. 337

'கயவொடு ரவ்வொற்று' -ந. 338

என்பன.

வினையியலுள் அன் விகுதியை ஈரிடத்தும் கூறியது:

'அன்ஆன் இறுமொழி' -ந. 325

'என்ஏன் அல்அன் ஆகும் ஈற்ற' -ந. 331

என்பன.

இவை பெயரினும் சேறல் 'கிளை எண் குழூஉ' நூ. 276 முதலிய நூற்பாக்களில் காண்க.

பகுதி இடைநிலைகள் முற்று ஒன்றற்கே சிறப்பித்துக் கூறியது:

'நடவா மடிசீ' –நூ. 137

'செய் என் வினைவழி' –நூ. 138

'தறட ஒற்று இன்னே' –நூ. 142

'ஆநின்று கின்று கிறு' –நூ. 143

'ப-வ-மூவிடத்து' –நூ. 144

'றவ்வொடு உகர உம்மை' –நூ. 145

என்பன.

பெயரியலுள் வேண்டும் விகுதிகளையும் வினையியலுள் வேண்டும் விகுதிகளையும் வேறாக எடுத்து ஓதியது:

'கள் என் ஈற்றின் ஏற்பவும்' –நூ. 278

'கள்இறு மொழியும்' –நூ. 280

முதலியனவும்

'செய்த செய்கின்ற செய்யும்' –நூ. 340

'செய்யுஞர் உம் உந்து ஆகலும்' –நூ. 341

முதலியனவும் ஆம்.

நால்வகை விகுதிகள் - உயிர், மெய், உயிர்மெய், சொல் என நால்வகைப்படும் விகுதிகள்]

இனி,

பொருந்தும் விகுதிகள் பொருந்தல்

என்றது என் எனின்,

குழையன் - இகரம் பெறுது;

செட்டி - அன் பெறுது;

காதறை - இரண்டும் பெறுது;

வில்லன்[ வில்லி - இரண்டும் பெறும்;

இத்தன்மை நோக்கி என்க.

இனி, பதத்தோடு ஐவகை இடைச்சொற்களும் பொருந்தல் தொடர்மொழி அன்றோ? பகுபதம் என்றது என் எனின்,

குழையன் எனவும்,

சாத்தனது ஆடை - ஆடை சாத்தனது எனவும்,

பவளம் போல் வாய் - வாய் பவளம் போலும் எனவும்,

உண்ணுநின்று எனவும், கோன் எனவும் வருவனவற்றிற்குப் பலர் உரைகளானும், முற்றக் கற்ற பெரியோரைக் கேட்டலானும், தொடர்மொழி அன்று என்பது தெளிக.

நன்நூலார் பதத்தோடு இடைச்சொல் பொருந்தலைப் பகுபதம் முடிப்புழித் தனிமொழி என்றும்,

அவ்வழிப் பதினொன்கனுள் தொடர்மொழி என்றும் அங்ஙனம் அல்வழிச்சந்தி என்றும்,

உருபியலில் வேற்றுமைச்சந்தி (ந. 242) என்றும்,

'அஇஉ-முதல் தனிவரும்' (ந. 66) என்றும்,

'குறிப்பு என் எண் பகுதியில் தனித்தியல் இன்றி' (ந. 420) என்றும் இன்னும் பல இடங்களிலும் பலவழிப்படக் கூறினர். தொல்காப்பியரும் அது. வட நூலாரும் அது' ஆகையால் 'முற்றக்கற்ற பெரியோரைக் கேட்'க என்றும். யாம் சில அறிந்தனவற்றை விரிக்கின் மிகவும் பெருகும் என்க.

[வி-ரை: நன்னூலார் தனிமொழி என்றது, 'பகுதி விகுதி இடைநிலை சாரியை' (133.) 'இலக்கியம் கண்டதற்கு' (141) முதலிய நூற்பாக்களில் காண்க.

அல்வழிச்சந்தி என்றது, 'வேற்றுமை ஐ-முதல்' (152). என்னும் நூற்பாவில் 'அல்வழி — —இடைஉரி தழுவுதொடர் அடுக்கு என ஈரேழே' (ந. 152) என்று குறித்ததனை உட்கொண்டு. உருபியலில் வேற்றுமைச்சந்தி என்றது,

'ஒற்றுஉயிர் முதல்ஈற்று உருபுகள் புணர்ச்சியின்
ஒக்கும்மன்; அப்பெயர் வேற்றுமை புணர்ப்பே' (242)

என்பதனை உட்கொண்டு.

இடைச்சொற்கள் பெயரையும் வினையையும் அடுத்து அன்றித் தனித்து நடவா என்பது 'தனித்து இயல்இன்றி' (420) என்னும் இடைச்சொல் இலக்கணத்தால் பெறப்படும்.

தொல்காப்பியனார் அவ்வழியின் பாகுபாட்டை விளக்கினார் அல்லர். நன்னூலார் பெயரையும் வினையையும் அடுத்து வரும் இடைச்சொற்கள் இடைச்சொல் தொடராகும் என்றார். வடநூலார் அவ்வியயீபாவ சமாசன் என இடைச்சொல் தொகையாகும் என்றனர்.]

'ஐந்தும்' என்னாது 'நான்கும் தனித்தும் பொருந்தியும்' என்றது என்எனின், விகுதி பொருந்திப் பகுபதமாதலே பெரும்பான்மை நோக்கி என்க.

'வேற்றுமைப் பொருள்களை ஏற்று நின்றும்' என்னாது 'ஒவ்வொரு வேற்றுமை வெவ்வேறாகியும்' என்றது என்எனின் ஒவ்வோருருபின்கண் பல பொருள் வருதல் நோக்கி என்க.

பகாப்பதம் என்னும் பெயரைப் பிரித்தது என்எனின், [பகாப்பதம் தொடர்மொழி இரண்டினுட்படாமல்] பகுபதம் என்னும பெயர் பெரும்பான்மை; பகாப்பதம் என்னும் பெயர் சிறுபான்மை; ஏனை நான்கும் பொது என்று கொள்ளுதற் பொருட்டு என்க.

[வி-ரை: ஏனை நான்கும் என்றது ஒரு மொழி, தொடர் மொழி, பின்மொழி கெட்ட முன்மொழி, முன்மொழி கெட்ட பின் மொழி என்பன.]

## நால்வகைச் சந்தி

118. வேற்றுமை வழியோடு அல்வழி அன்றியும்
அவ்விரு வழியும் அடங்கும் பொதுவழி
அம்மூன் றுளளே அடங்கா வழியும்
எனநான்கு என்றே இயம்புவர் சந்தி.

பொதுவழி கொண்டது என்னெனின் - பொதுத்திணை, பொதுப்பால், பொதுப்பெயர், பொதுவினை, பொதுக்காலம், பொது எச்சம், பொது முற்று, பொது இடம் முதலியவற்றைத் தேர்ந்து கொள்க.

[வி-ரை: பொதுத்திணை - உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொதுவாய்ச் சொல்லமைப்பில் உள்ளது. சாத்தன் பொதுத் திணை. அது வந்தான் என்ற வினை கொண்டு முடியின் உயர்திணை ஆகும்; வந்தது என்ற வினை கொண்டு முடியின் அஃறிணை யாகும்.

பொதுப்பால் - ஆண், பெண், இரண்டனையும் சுட்டும் தெய்வம் முதலிய சொற்கள் பொதுப்பாலாம்.

பொதுப் பெயர் - ஒரு சாதிக்குப் பொதுவாக அமைந்த மரம் முதலிய பெயர்கள், தென்னை முதலியன சிறப்புப் பெயர்களாம்.

பொது வினை - இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொது வாகிய வேறு - இல்லை - உண்டு - யார் - வேண்டும் - தகும - படும் முதலியன.

பொதுக்காலம் - வேறு இல்லை உண்டு முதலிய பொதுவினைகள் முக்காலங்களுக்கும் பொதுவாய்க் காலத் தைக் குறிப்பாகக் காட்டலின் இவை குறிப் பிடும் காலம் பொதுக் காலம்.

ஏனைய இவ்வாசிரியரால் விளக்கப்பட்டுள்ளன.]

அடங்காவழி கொண்டது என் எனின்,

அலி, பேடு, உலகர், தெய்வம் முதலியவற்றிற்குச் சொற் பொருள் திணைபால் முதலிய தொடுக்கின் சிறப்புமன்று, பொதுவு மன்று: ஒன்றிலும் அடங்காவழி போல என்க.

[வி - ரை : அலி முதலிய நான்கும் சொல்லால் அஃறிணை. அதுபற்றி அலி, பேடு, உலகம், தெய்வம் – வந்தது முதலான அஃறிணை வினை கொண்டு முடிக்கப்படலாம். பொருளால் உயர் திணை ஆதலின் அலி வந்தான், பேடு வந்தான் என ஆண் பாலாகவும் வரும். உலகம் தெய்வம் என்பன ஈறு திரிந்து வாய்பாடு வேறுபட்டு உலகர் பசித்தார், தேவர் வந்தார் எனவும் வரலாம். நேரிய முடிபின்மையின் இவை 'அடங்காவழி' எனப் பட்டன.]

வேற்றுமை அல்வழிக்கு உதாரணம் வெளிப்படை, ஏனைய வற்றிற்கு உதாரணம் பின்வருமாறு:

அஞ்செவி, அங்கை, கருப்புவேலி, உரைநூல், நூலுரை' மதிமுகம், முகமதி, புலி கொன்றது நாய் கடித்தது போல்வன எல்லாம் பொதுவழிச் சந்தி.

வி - ரை :

| சொற்கள் | அல்வழி | வேற்றுமை |
|---|---|---|
| அஞ்செவி | அகமாகிய செவி | செவியது அகம். |
| அங்கை | அகமாகிய கை | கையது அகம். |
| கருப்புவேலி | கரும்பாகிய வேலி | கரும்பிற்கு வேலி. |
| உரைநூல் | உரையாகிய நூல் | உரையை உடைய |
| | உரைக்கும் நூல் | நூல். |
| நூல் உரை | நூலாகிய உரை | நூலினது உரை. |
| மதிமுகம் | மதிபோன்ற முகம் | மதியைப்போன்ற |
| | மதிக்கும் முகம் | முகம். |
| புலி கொன்றது | எழுவாய்த் தொடர் | புலியைக்கொன்றது, |
| | | புலியால் கொல்லப் |
| | | பட்டது. |

| | | |
|---|---|---|
| நாய் கடித்தது | எழுவாய்த் தொடர் | நாயைக் கடித்தது, நாயால் கடிக்கப் பட்டது. |
| முகமதி | முகமாகிய மதி | முகத்தை ஒக்கும் மதி. |

என இருவழிக் கண்ணும் வருதலின் பொதுவழிச் சந்தி ஆயின.]

பொருபடை, கருங்குதிரை, படை படை, பஃபத்து, வயிறு மொடுமொடென்றது, முன்றில்முயற்கோடு, சாத்தன் சோற்றைப் பகற்கண் பசித்து விருந்தோடு உண்டான் - இவை போல்வன வெல்லாம் அடங்காவழிச் சந்தி.

[வி-ரை: பொருபடை, கருங்குதிரை என்பன முறையே வினைத்தொகை பண்புத்தொகை என்பர் தமிழ் நூலார்; பொரு படை பொருவதாகிய படை என்பர் வடநூலார். கருங்குதிரை என்பது கரிதாகிய குதிரை என விரிதலேயன்றிக் கரியதுகுதிரை எனவும் விரியும் என்பர். படைபடை அடுக்குத்தொடர் என்பர். நிலைமொழி வருமொழிச்சந்திக்குத் தனிப்பட்ட பொருள் இயைபு இன்று. பஃபத்து - பத்தாகிய பத்து - பத்தான் உறழ்ந்த பத்து என்று பொருள் தாராது. தனித்தனியே பத்து, பத்து என்று பொருள்படுதலின், 'தம்மியல் கிளப்பின் தம்முன் தாம் வரும் எண்ணின் தொகுதியாம்' (தொ எ. 482) நிலைமொழி வருமொழி இரண்டும் பொருள் இயைபின்றிச் சேர்ந்தன. மொடு மொடென்றது - குறிப்பு; சொற்களுக்குத் தனித்த பொருளே இன்று.

இல் முன் என்பன நிலைமாறி முன் இல் என்றாகிப் பொருள் நோக்கமின்றியும் சந்தியால் விகாரம் பெற்றன.

முயற்கோடு - நிலைமொழி வருமொழிப் பொருட் பொருத்தம் இன்று; முயலுக்குக் கோடு என்பது பொய்ப்பொருள் ஆகலான்.

சாத்தன் — — உண்டான் - தனித்தனி நிலைமொழி வருமொழி களுக்குப் பொருட்பொருத்தம் இன்று;

இவை யாவும் தழாத் தொடராய் அல்வழிக்கண் அடங்கும் என்ப.]

இனி, பொதுத்திணை முதலைந்தும் வெளிப்படை. ஏனைய மூன்றும் வருமாறு.

ஓடிய சாத்தன், ஓடிய வந்தான் - பொது எச்சம். (செய்த என்னும் பெயரெச்சமும், செய்யிய என்னும் வினையெச்சமும் ஓடிய என்ற ஒரே வடிவு கொண்டன.)

செய்யும் என்பது பொதுமுற்று.

இவன் சொன்ன சொல் என்பது தன்மைக்கும் முன்னிலைக்கும் படர்க்கைக்கும் பொது இடம். (தன்னைப் பிறன்போல் கூறும் வழியும், முன்நின்றானை வெறுப்பு முதலியவற்றால் பிறன் போலக் கொள்ளும் வழியும் இவன் என்ற படர்க்கைச் சொல் தன்மை முன்னிலைக்கண்ணும் வந்தவாறு.]

தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மையும், முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலையும் பொது இடம் என்றலும் ஒன்று. [தன்மைப்பன்மை முன்னிலை படர்க்கை இரண்டனையும் உளப் படுக்கும். (ந. 332) முன்னிலைப்பன்மை படர்க்கையை உளப் படுக்கும். (ந. 334) என அறிக.]

அடங்காவழிச் சந்தியை விரிக்கின் பெருகும் என்க. 32

## வேற்றுமை வழிச்சந்தி

119. வேற்றுமை வழிஈ ரெட்டாய் விரியும்,
முவெட்டு என்று மொழியவும் பெறுமே;
ஏனமு விரியும் இயம்பில் பெருகும்.

எ-டு:

சாத்தன் வந்தான், சாத்தன் ஆனவன் வந்தான்;

குயில் வாராய்; குயிலே வாராய்.

ஒழிந்த பன்னிரண்டும் (ஆறுதொகை, ஆறுவிரி) வெளிப்படை,

சாத்தனை எனப் பதத்தோடு உருபு புணர்தலைச் சிலர் வேற்றுமைச்சந்தி என்று கொள்ளாமையின் மூவெட்டு என்றிலம். அவர்க்கு அவை எங்ஙனம் அடங்கும் எனின், பகுபதத்தில் அடங்கும் என்க. அக்கருத்து வடநூலினும் அறிக.

[வி-ரை: சாத்தன் வந்தான் - முதல் வேற்றுமை தன் உருபு வெளிப்படாமல் வந்தது.

சாத்தன் ஆனவன் வந்தான் - முதல் வேற்றுமை - ஆனவன் என்ற தன் உருபு வெளிப்பட்டே வந்தது.

குயில் வாராய்-விளிவேற்றுமை தன் உருபு வெளிப்படாமல் வந்தது.

குயிலே வாராய் - விளிவேற்றுமை தன் உருபு வெளிப்பட்டே வந்தது.

ஆனவன் முதலியன முதல்வேற்றுமை உருபு என்பதும், ஈற்றில் ஓரெழுத்து மிகுதல் முதலியன விளிவேற்றுமை உருபு என்பதும் அறிக.

உருபுகளை நிலைமொழியின் ஒரு கூறாகவே கொண்டு, அந்நிலைமொழி வருமொழியோடு கூடும் பொருள்தொடர்பு பற்றியே அல்வழி வேற்றுமை என்ற பொருள்களைக் கோடலே இலக்கண ஆசிரியர்களிடத்துப் பெரும்பான்மையும் அமைந்துள்ளது.] 33

## அடுக்கின் வகைகள்

120. பெயர்முற்று எச்சமொடு உருபுஐந்து அடுக்கே;
இரட்டைக் கிளவியோடு இருமூன்று; அவைதாம்,
ஒன்றுபல அடுக்கல்[1], வேறுபல அடுக்கல்[2],
விதியாய் அடுக்கல்[3], மறையாய் அடுக்கல்[4],
விதிமறை கூடி விரவி அடுக்கல[5],
பலசொல கூடிஓா பொருளாய் அடுக்கல்[6],
பலபொருட் கேஒரு சொல்லாய் அடுக்கல்[7],
இருவகை தமக்கும் பொதுவாய் அடுக்கல[8],
இயல்பாய் அடுக்கல்[9], விகாரமாய் அடுக்கல்[10],
ஆதியாப் பலவும் அறைகுவர் புலவர்.

எ-டு:

1. ஒன்று பல அடுக்கல்

'அரியானை, அந்தணர்தம் சிந்தையானை' -தேவா.

இது ஒன்று பல அடுக்கல் - (இரு பெயரும் ஒரு பொருளையே குறிப்பன.)

2. வேறு பல அடுக்கல்

வாளான் மருவாரை வழிக்கண் வெட்டினன்.

இது வேறு பல அடுக்கல். (உருபுகள் பலவும்)

3. விதியாய் அடுக்கல்

'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று' -கு. 110

இது விதியாய் அடுக்கல். (விதி எச்சங்கள்)

4. மறையாய் அடுக்கல்

'புரைதீரா மன்னு இளமை'

'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்' -கு. 448

'ஏவவும் செய்கலான் தான்தேறான்' -கு. 848

இவை மறையாய் (ஒன்றுபல) அடுக்கல்.

5. விதிமறை கூடி விரவி அடுக்கல்

சாத்தனைக் கண்டு கொற்றனைக் காணாது வந்தான்.

சோறுஉண்டு கைகழுவாது வந்தான்.

இவை (ஒன்று விதியாகவும் ஒன்று மறையாகவும்) விரவி அடுக்கல்.

6. பலசொல் கூடி ஒரு பொருளாய் அடுக்கல்

படை படை, வயிறு மொடுமொடென்றது - இவை பல சொல்கூடி ஒரு பொருளாயடுக்கல். (மொடுமொடென்றது என்பது இரட்டைக் கிளவியுள் அடங்கும்.)

7. பல பொருட்கு ஒரு சொல்லாய் அடுக்கல்

ஒவ்வொருவருக்கே இவ்விரு பணம் கொடு.

இப் பலசரக்கை வெவ்வேறுக்கு.

'மாற்றரு நீர் உறைவன நற்பறவைகள்

நாற்காலி மன்னியிடும் பஃபத்து'

-இவை பலபொருட்கு ஒரு சொல்லாய் அடுக்கல்.

[வி-ரை:

ஒவ்வொருவர் - தனித்தனி ஒருவர் ஒருவர்.

இவ்விரண்டு - தனித்தனி இரண்டு இரண்டு.

பஃபத்து - தனித்தனி பத்துப் பத்து.

வெவ்வேறுக்கு - தனித்தனி வேறுகுமாறு பிரி.

ஒவ்வொருவர் முதலிய சொற்கள் பல பொருள்களை விளக்கிய வாறு.]

8. இருவகை தனக்கும் பொதுவாய் அடுக்கல்

வேறுவேறு என்பன ஒருகால் அவனும் வேறு, இவனும் வேறு எனப் பல பொருளாயும், ஒருகால் அவன் வேறுவேறு என விரைவு பற்றி ஒரு பொருளாயும் நிற்கும், (இது இருவகை தனக்கும் பொதுவாய் அடுக்கல்.)

ஏனைய எல்லாம் வெளி.

[வி ரை :

எஞ்சிய இயல்பாய் [1]அடுக்கலும், விகாரமாய் அடுக்கலுமாம்.

இயல்பாய் அடுக்கல் - பாம்பு பாம்பு முதலியன.

விகாரமாயடுக்கல் - பஃபத்து முதலியன.]

இரட்டைக் கிளவியைப் பிரித்தது என்எனின், இஃது இலை யிரட்டை - பூ இரட்டை - காய் இரட்டை - விரல் இரட்டை போல ஒற்றுமைப்பட்டு நிற்றலானும், அவ்வைந்தும் (பெயர், முற்று, ஈரெச்சம், உருபு). மக்கள் இரட்டை - விலங்கிரட்டை - முட்டை இரட்டை - கை இரட்டை - கால் இரட்டை போல வேற்றுமைப்பட்டு நிற்றலானும் என்க.

'ஆதி' என்றதனுல்,

பசித்து வந்த சாத்தன் சோற்றிற்குப் படபடத்தான் என ஒரு தொடர்க்கண்ணே அவ்வாறும் அடுக்குதலும் (வினையெச்சம் பெயரெச்சம், பெயர், உருபு, இரட்டைக் கிளவி, முற்று). அவற்றுள் சில குறைந்து அடுக்குதலும் முதலிய எல்லாம் கொள்க.

[வி-ரை: விதியாய் அடுக்கலும், மறையாய் அடுக்கலும், விதிமறை கூடி விரவி அடுக்கலும். முற்று - எச்சம் இவற்றில் ஒன்றன்கண்ணேயே கொள்க.

"நிறக்கும் என்னும் சேடத்தால் சதிர்ப்பிரந்தியயத்துக்கு மறையும் அடுக்கும் கொள்க.

'இடிப்பாரை இல்லாத ஏமாரா மன்னன்' -கு. 448

'புரைதீரா மன்னு இளமை'

'மூவா முதலா உலகம்' -சீவக. 1

எனவரும்.

'மாழைமென் நோக்கி, இடையாய்க் கழிந்தது வந்துவந்தே'
-கோவை. 61

'அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்' -நாலடி. 213

என்பன ஒன்றுபல அடுக்கல்.

'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும்'
-கு. 1101

என்புழி வேறுபல அடுக்கல். இன்னும் அச் சேடத்தால்'

'சென்றது சென்றது வாழ்நாள்' -நாலடி. 4

வந்தது வந்தது கூற்று' -நாலடி. 4

என முற்றுச் சொல்லும்,

'அவரவர் எச்சத்தால் காணப்படும்' -கு. 114

'எப்பொருள் யாய்யார்வாய்க் கேட்பினும்' -கு. 423

படை யடை - தீத்தீ - எனப் பெயர்களும் அடுக்கி, மக்கள் இரட்டை - விலங்கு இரட்டை போல வரும்.

இன்னும் அதனானே,

'துடிதுடித்துத் துள்ளி வரும்'

'கலகல கூஉந்துணை யல்லது' -நாலடி, 140

'வற்றிய ஓலை கலகலக்கும்' -நாலடி. 256

'சலசல மும்மதம் சொரிய' -சீவக- 82

'பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்' -நாலடி. 251

'புன்னம் புலரி'

'குறுகுறு நடந்து சிறுகை நீட்டி' -புறநா. 168

'வயிறு மொடுமொடுத்தது'

'சிற்றஞ் சிறுகாலே' -திவ். பிர. 502

'செக்கச் சிவந்த'

'கன்னங் கரிய'

என்பனவற்றை, இலையிரட்டையும் பூவிரட்டையும் போல் வந்தன 'இரட்டைக் கிளவி இரட்டிற் பிரிந்து இசையா' (தொ.சொ. 48) என்னும் சூத்திரவிதி பெற்றன என்பர். இவற்றை வடநூலார் 'தேதீவ்யமானம்' என உதாரணம் காட்டி, யங் லுக்கு என்பர். புநப்புந, ரக்ஷரக்ஷ, சிவசிவ, ராமராம, திநேதிநே என வடமொழிக்கண்ணும் மக்கள் இரட்டை போல வரும்" -பி.வி.39 உரை.] 34

## அடுக்கு அல்லாதன

121. அடுக்குஅல் லவையும் அடுக்குஅவை போல்வரும்
அவ்வடுக்கு அணியினுள் அளவில என்ப.

எ-டு:

'பொய்யாமை பொய்யாமை ஆற்றின்' -கு.296

'இறந்தார் இறந்தார் அனையர்' -கு.310

எனவரும்.

[வி-ரை:இதனைச் சொல்பின்வருநிலையணியுள் காணலாம்.] 35

## மூவகைத் துணிவு

122. பொருளைப் பொருளெனல், பொருள்அல் லதனையே
பொருளெனல், இதுபொருள் அன்றுஎன்று அறிந்தும்
இதுவே பொருள்எனல் எனமூன்று துணிவே.

எ-டு:

நிலம் நீர் நெருப்பு முதலிய பொருள்களை அது அதுவாகவே துணிதல் பொருளைப் பொருளெனத் துணிதலாம்.

பித்தளையைப் பொன் என்றும், பழுதையைப் பாம்பு என்றும், சிப்பியை வெள்ளி என்றும், குற்றியை மகன் என்றும் துணிதல் பொருள் அல்லதனைப் பொருள் என்று துணிதலாம்.

பிறன் ஒருவனை மாதாபிதாவாகத் துணிந்து திதி கொடுத்தலும், மண்மரம்சிலைசெம்பு முதலானவற்றைத் தெய்வம் என்று துணிந்து பூசை செய்தலும், வீட்டை அறிவிக்கும் மகனைக் கடவுள் என்று துணிந்து அவன் கருத்தின்வழியே நிற்றலும் போன்றன இது பொருள் அன்று என்று அறிந்தும் இதுவே பொருள் எனத் துணிதலாம்.

சொற்களும் பொருளாதலான் அவற்றிற்கும் அத்துணிவு கொள்க.

பெயர் வினை இடை உரிகளை அது அதுவாகவே துணிதல் பொருளைப் பொருள் எனல்.

சொக்கலிங்கம் என்பதைச் †சிவந்த கலிங்கம் என்னும் பொருள்படச் சகர ஏகார நெட்டெழுத்து மொழி முதலாகத் துணிதலும், 'அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்' என்பதை மூலஞானம் எனத்துணிதலும், 'அத்துவிதம்' என்பதனை இரண்டில்லை எனத்துணிதலும் போல்வன பொருள் அல்லவற்றைப் பொருள் எனல்.

[வி-ரை: சொக்கலிங்கம் என்பது அழகிய லிங்கம் என்னும் காரணப் பெயராய், மதுரைச் சொக்கநாதப் பெருமானுக்கு இடுகுறிகாரணப் பெயராயிற்று. இதனைச் சிவந்த ஆடை என்னும் பொருள்படச் சேக்கலிங்கம் என்று துணிந்து கோடல் பொருள் அல்லவற்றைப் பொருள் என்பதற்கு முதல் எடுத்துக் காட்டு.

அடிஞானம் என்பது சிவபெருமானுடைய சீர்பாதஞானம் எனவும், ஆன்மாவினுடைய அநாதிஞானம் எனவும் பொருளுடையது. இதனை மூலஞானம் எனத் துணிவதும் இதற்கு எடுத்துக்காட்டு.

- இ. கொ. 129 உரை.

அத்துவிதம் என்பது சொற்பொருளளவில் இரண்டு அல்லாதது என்பது: ஆனால் ஒன்றன்று, தனித்துப் பிரித்துக் காண்டல் இயலாத இரண்டன் சேர்க்கையே அத்துவிதம் என்பது. இதனை இரண்டில்லை ஒன்று என்று துணிவதும் இதற்கு எடுத்துக்காட்டு.]

†(பா-ம்) முழுதும்.

'மாணடி சேர்ந்தார், (கு. 3) என்னும் வினையைப் பெயராகவே துணிதலும், 'வேலொடு நின்ருன்' (கு. 552) என்னும் உருபு இடைச்சொல்லைக் கொண்டு என்னும் வினையாகவே துணிதலும், உழுது† வாரான் என்புழி வாரான் என்னும் வினையின்மையை வினையுண்மையாகவே துணிதலும், 'அறவினை யாதெனின் கொல்லாமை' (கு. 321) என்புழிக் கொல்லாமை என்னும் மறையைச் செய்தல் என விதியாகவே துணிதலும் போல்வன இது பொருளன்று என்று அறிந்தும் இதுவே பொருள் எனலாம்.

எல்லாப் பொருள்களும் அவற்றை அறிவிக்கும் எல்லாச் சொற்களும் இம்மூன்றனுள் அடங்கும் என்க. இவற்றுள் முன்னதும் பின்னதும் வழுவன்று; நடுவது வழுவே என்பது,

'பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணாப் பிறப்பு' -கு. 351
'நில்லா தவற்றை நிலையின என்றுணரும் -கு. 33
புல்லறி வாண்மை கடை'

என்பனவற்ருல் அறிக. கூடாஒழுக்கம் என்னும் அதிகாரம் முழுதும் அது.

[வி-ரை: சொல்லோடு பொருளுக்கு உள்ள ஒற்றுமை பற்றிச் சொற்களையும் பொருள் என்ருர்,

சேர்ந்தார் என்ற முற்றுவினை படுத்தல் ஓசையால் பெயராயிற்று- வேலொடு நின்ருன் - கொண்டு என்ற வினைச்சொல் மூன்ரும் வேற்றுமைச் சொல்லுருபாய் ஒடு என்ற உருபின் பொருளை விளக்குகிறது. வாரான் என்பது வருதலைச் செய்யான் என்னும் பொருளதாய், ஆண்டுச் செய்யாமையாகிய வினை நிகழ்ச்சியைச் சுட்டுகிறது, மறைவினை விதிவினையோடொக்கும் என்பது இலக்கண நூலார் கருத்து. 'எதில்மறையும் விதிவினை யோடு ஒக்கும் என ஆணை கூறிற்று' - தொ. சொ. 108 நச். எனவே, கொல்லாமை எனப்படும், கொலைத்தொழிலைச் செய்யாதிருத்தலும், ஒரு தொழிலாகக் கொள்ளப்பட்டது.

† (பா-ம்) முழுதும்.

பொருளைப் பொருளெனல் வழுநிலை. பொருளன்று என்று அறிந்தும் ஒரு காரணம் பற்றி இதுவே பொருளெனல் வழா நிலையுள் அடங்கும். பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணர்தலே வழு, அங்ஙனம் பிறழக் கோடற்குக் காரணம் அநாதியாகத் தொடர்ந்து வரும் புல்லறிவாண்மை என்பது குறள் வாயிலாக விளக்கப்பட்டுள்ளது.]

## மேலதற்குப் புறனடை

123. அன்புஅருள் ஆசையோடு அறிவுஅறி யாமைஇவ்
ஐந்தால் துணிதல்அம் மூன்றனுள் அடங்கும்.

என்பது வெளி.

[வி-ரை: அன்பு, அருள், ஆசை, அறிவு, அறியாமை என்பன வற்றால் துணியப்படும் திறனும் முற்கூறிய பொருளைப் பொருளெனல் முதலிய முக்கூற்றின்கண் அடங்கும்] 37

## தொடர் இரண்டு

124. ஒருதொடர் பலதொடர் எனத்தொடர் இரண்டே.

எ-டு: சாத்தன் அரிசி நெல் பயறு முதலானவை கொண்டு வந்தான்; கொற்றன் பூ இலை காய் பழம் முதலானவைகொண்டு வந்தான்: தேவன் மிளகு புளி கடுகு முதலானவை கொண்டு வந்தான்; பூதன் சீலை தாலி பூண் அணி முதலானவை கொண்டு வந்தான்; அரசன் அக்காலத்து அமைச்சொடு வந்தான்; தலைவன் தலைவிக்குத் தாலி கட்டினன் - இப் பலதொடர்களும் வரைவு என்னும் ஒரு பொருட் கண்ணே வருதலின் ஒரு தொடரே யாம். அங்ஙனம் ஆதல் வந்தான் என்னும் ஐந்து முற்றையும் செய என் எச்சமாக்கி நோக்குக. இக்கருத்து 'வினைமுற்றே வினையெச்சமாகலும்' (ந. 351) என்னும் சூத்திரத்துள் 'கானவர் இரிய' (சீவக. 454)என்னும் செய்யுளில் காண்க. [மயிலைநாதர் உரை]

சாத்தனை வரைவிற்கு வடக்கு அனுப்பினான்; கொற்றனை இழவுக்குக் கிழக்குப் போக்கினான்; தேவனை நெற்கொள்ளத் தெற்கே ஏவினான்; பூதனைத் தேன் விற்க மேற்கே செலுத்தினான் - இவையெல்லாம ஒருவன் வினையே ஆயினும் ஒன்றற்கொன்று மறையாய்ப் பொருத்தம் இன்மையால் பல தொடரேயாம் என்க. இக்கருத்துப் 'பேசரிய வராகம்' என்னும் செய்யுளுள் காண்க.

இவற்றை வடநூலார் ஏக வாக்கியம், பின்ன வாக்கியம் என்பர்; அதனால் மொழி பெயர்த்தனம் என்க.

[வி-ரை:

'கானவர் இரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்தலோடும்

ஆனிரை பெயர்ந்த ஆயர் ஆர்த்தனர் அணிந்த திண்தோள்

தானொன்று முடங்கிற்றொன்று நிமிர்ந்தது சரம்பெய் மாரி

போல் நின்ற என்ப மற்றப் பொருவரு சிலையி னாற்கே'

-சீவக. 454

இவ்வாறு வரும் முற்றுக்களை முற்றாகவே பொருளுரைக்கில் ஏக வாக்கியம் ஆகாது பின்ன வாக்கியமாகிப் பொருள் சித்தியாது என்க. பி.வி. 39 உரை

சிலையினாற்குத் திண்தோள் தான் ஒன்று முடங்க, ஒன்று நிமிர, சரம் பெய்மாரி போல் நிற்பக் கணை தொடுத்தலோடும் நிரை பெயர ஆயர் ஆர்த்தனர் என வினையெச்சமாக்கிப் பொருள் கொள்க.

'பேசரிய அராகம்தம் கன்மத்துக் கீடாப்

பெற்றதனில் ஆசைதனைப் பெருவிக்கும் நியதி

தேசமிகும் அரசர்தரும் ஆணை செய்தி

செய்தவரைத் துய்ப்பிக்கும் செய்கை போல

நேசமுறு தம்கன்மம் நிச்சயித்து நிறுத்தும்

நிகழ்காலம் கழிகாலம் எதிர்காலம் என்றே

ஓசைதர வருங்காலம் எல்லைபலம் புதுமை

உறுவிக்கும் இறைசத்தி உடனாய் நின்றே'

-சிவ 2,3,22

இங்கு, அராக தத்துவம் ஆசைதனைப் பெருக்குவிக்கும்; நியதி தத்துவம் நிச்சயித்து நிறுத்தும்; இறைசக்தி எல்லை, பலம் புதுமை உறுவிக்கும் - என்ற தனித்தனித் தொடர்கள் மூன்று இச் சிவப்பிரகாசப் பாடலில் கூறப்பட்டமை பல தொடருக்கு எடுத்துக்காட்டாம்] 38

## எழுத்துச் சொற்பொருட் டிரிபு

125. எழுத்துச் சொல்திரிபு இரண்டே அன்றிப்
பொருள்திரிபு எங்கும் பொருந்தும் என்ப.

எ-டு: பொன் குடம் - பொற்குடம்; மாசி - மாசி; நீயேன் - நியேன்; ஆறுமுகம் - அறுமுகம் எனவும்,

உடுத்து-உடீஇ; வெல்க-வென்றீக; எல்லாப்பொருளும்-எப்பொருளும்; கழுவாத கால் - கழாஅக்கால்; பரிய அரை-பராரை; மராவத்து - மராத்து; தெரிவான் - தெரிகிற்பான்; காண்பான் - காண்கிற்பான் எனவும் வரும்.

இவை போல்வனஎல்லாம் எழுத்துத்திரிபும் சொல் திரிபும் என்க.

இனி, பொருள் திரிபு வருமாறு:

'பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மை' -கு.907
இது ஒழுகுவான் என்னும் முற்றினது பொருள் தன்நிலை திரிந்து பெயரெச்சத்தின்கண்ணே சென்றது.

'நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து' -கு.1128

இது அஞ்சுவன் என்னும் ஒருமை முற்றினது பொருள் அவ்வாறு திரிந்து பன்மை முற்றின்கண்ணே சென்றது.

'தானும் தேரும் பாகனும் வந்து என் நலன் உண்டான்'

-இது பன்மை முற்றினது பொருள் ஒருமை முற்றின்கண்ணே சென்றது.

'ஞாயிறு பட்டு வந்தான்' - செய என் எச்சத்தினது பொருள் செய்து என் எச்சத்தின்கண்ணே சென்றது காண்க.

இருதிரிபு முற்கூறினும் ஆதலின் அன்றி' என்றும்.

'எங்கும்' என்றது எல்லாச் சொல்லினும் என்க.

இனி, சொல்திரிபே அன்றிப் பொருள் திரிபு இல்லை என்பாரும், பொருள் திரிபே அன்றிச் சொல்திரிபு இல்லை என்பாரும், இவ்விரண்டும் உண்டு என்று கொண்டிருக்கவும் மயங்கிச் 'சொல்திரியினும் பொருள் திரியா வினைக்குறை' (ந. 346) என மாறிக்கூறுவாரும்.

எழுத்துத்துதிரிபாவது சார்பெழுத்தே என்பாரும், சொல் திரிபாவது கிளி என்பது கிள்ளை, மயில் என்பது மஞ்ஞை என்பது போல்வன என்பாரும், பொருள் திரிபாவது மாவினது வெண்பூப் பசுங்காய் ஆயிற்று - களாவினது பசுங்காய் கருங் கனி ஆயிற்று - மயிரினது கருமை வெண்மை யாயிற்று - பாலினது இனிமை புளிப்பாயிற்று என்பாரும் உளர். அவர் மத மறுப்புக்களை விரிக்கின் பெருகும். 39

## தொடர்மொழி இயல்பு

126 பலபொருட்கு ஒருவடிவு ஆகும் பதங்களை
ஓசையொடு கூறுவர் உயர்ந்தோர்; அவைதாம்,
தனிமொழி தொடர்மொழி எனும்இரண் டினும் வரும்;
தனிமொழி வினைமொழி தனையே சாரும்;
சொல்வேறு படாஅது பொருள்வேறு படுதலும்,
பொருள்வேறு படாஅது சொல்வேறு படுதலும்,
பொருள்சொல் ஒருங்கே போய்வேறு படுதலும்
எனமூன்று என்பர் தொடர்மொழி இயல்பே

எ-டு:

நட, வா முதலிய முதல்நிலைத் தனிவினைகளை முற்றாக்க வேண்டில் எடுத்துச் சொல்லுக; முதல்நிலைத் தொழிற்பெயர் ஆக்கவேண்டில் படுத்துச் சொல்லுக.

கட்டு என்பதை முற்றுகர முற்றாக்க வேண்டில் எடுக்க; குற்றுகரத்தொழிற்பெயர் ஆக்கவேண்டில் படுக்க.

'நெறிநின்றார் நீடுவாழ்வார்' -கு. 6

என்பதனை முறையே பெயராக்க வேண்டில் எடுக்க; முற்றாக்க வேண்டில் படுக்க.

செய்யும் என்பதை எச்சமாக்கவேண்டில் எடுக்க; முற்றாக்க வேண்டில் படுக்க.

அம்பலத்தாடி என்பதனைப் பெயராக்கவேண்டில் எடுக்க. எச்சமாக்கவேண்டில் படுக்க.

இவைபோல்வனவெல்லாம் பலபொருட்கு ஒரு வடிவு ஆகிய தனிமொழி.

'குழல்வளர் முல்லையில் கோவலர் தம்மொடு
மழலைத் தும்பி வாய்வைத்து ஊத' -சிலப்.4 -15,16.

இது சொல்வேறுபடாது பொருள் வேறுபட்டது.

அஃதழகிது, அதனை; அவற்றை; நிறுவென்றான், கூவென்றான், ஏயென்றான்; சொல்லென்றான், வில்லென்றான்- இது பொருள் வேறுபடாது சொல்வேறுபட்டது.

செம்பொன்பதின்பலம் - இது சொல்லும் பொருளும் வேறு பட்டது. இவற்றிற்குப் பொருள் விளங்க எடுத்தும் படுத்தும் சொல்லுக. இவை போல்வன எல்லாம் பலபொருட்கு ஒரு வடிவாகிய தொடர்மொழி.

[வி-ரை: பெயர்ச் சொற்கள் விகுதியிலும் வினைச்சொற்கள் பகுதியிலும் பொருள் சிறத்தலின் வினையை எடுத்தல் ஓசை யானும் பெயரைப் படுத்தல் ஓசையானும் கூறுக என்பது பொதுவிதி.

'எவன்' என்பது படுத்தல் ஓசையால் பெயராகும் என்பார் நச்சினார்க்கினியரும். -தொ. எ. 122 நச்.

வினையாலணையும் பெயரையும் பெயரெச்சத்தையும் எடுத்தும் அவ்வினைமுற்றையும் வினையெச்சத்தையும் படுத்தும் ஒலித்தல் வேண்டும் என்பர் இவ்வாசிரியர்.

இவ்வெடுத்தல் படுத்தல் ஓசைபற்றி இலக்கண ஆசிரியர் களிடையே பலவேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

'உண்டான், தின்றான் என்னும் தொடக்கத்துப் படுத்துச் சொல்லப்படும் தொழிற் பெயர்'. -தொ. சொ. 70 சே.

'வந்தனன் எனத் தெரிநிலைவினை தொழின்மை மேற்படத் தொழிலுடைப்பொருள் கீழ்ப்பட முற்றாய் நின்று உணர்த்திய வாறுபோல, உடையான் எனக் குறிப்புவினையும் உடைமை மேற்பட உடையான் கீழ்ப்பட முற்றாய் நின்று உணர்த்துதலும் கொள்க. வந்தான், உடையான் எனப் பெயராயவழித் தொழி லுடைப் பொருளும் உடையானும் மேற்பட்டுத் தோன்றுமாறு அறிக'. -தொ. சொ. 215 சே.

எவன் என்ற குறிப்பு வினைமுற்று படுத்தல் ஓசையால் பெயராகும்'. -தொ. எ. 122 நச். சொ. 221. நச்.

'உண்பாய் உரைப்பாய் தின்பாய் என்ற முன்னிலைவினைகளை எடுத்தல் ஓசையால் கூறும்வழி அவை ஏவற் பொருண்மை உணர்த்தும்'. -தொ. சொ. 225 நச்.

'நட, வா முதலிய எடுத்தல் ஓசையால் முன்னிலை ஏவல் ஒருமை முற்றாய் நிற்கும்; படுத்தல் ஓசையால் அச்செய்கை மேல் பெயர்த்தன்மைப்பட முன்னிலையாயும் நிற்கும். நடத்துவித்தான் என வருங்கால், இடைநிலையாகிய எழுத்துக்களும் பெற்று முன்னர் எடுத்தல் ஓசையாய், இடைநின்ற ஈருகிய இகரம் படுத்தல் ஓசைப்பட்டு இடைநிலையாய் நிற்கும்'. -சொ. 226. நச்.

'செய்யும் என்ற சொல் எடுத்தல் ஓசையால் கூறப்படின் முற்றும்; படுத்தல் ஓசையால் கூறப்படின் பெயரெச்சமாம்.' -தொ. சொ. 237 நச்.

'திணையும் பாலும் காலமும் இடனும் தோற்றும் தொழிற்சொல் படுத்தல் ஓசைப்பட்டு நின்றால் தொழிற்பெயராய் நின்று பயனிலை கொண்டும் உருபு ஏற்றும் காலத்தைத் தோற்றுவிக்கும்'
-தொ. சொ. 71. நச்.

'உண்டான், தின்றான் என்னும் தொடக்கத்துப் படுத்துச் சொல்லப்படும் தொழிற்பெயராகிய கிருத்தை எடுத்தும், வினை முற்றாகிய திங்ந்தத்தைப் படுத்தும் கூறுக.' -பி.வி. 40 உரை

இவற்றால் எடுத்தல் படுத்தல் பற்றிய செய்தியில் இவ்வாசிரியர் மற்றவரோடு ஒருபுடை ஒத்தும் ஒருபுடை ஒவ்வாதும் கருத்துக் கொண்டுள்ளமை தேற்றம்.

குழல்வளர்முல்லை - வேய்ங்குழலிலிருந்து வெளிப்படும் முல்லைப்பண், கூந்தலில் சூடப்பட்டுள்ள முல்லை மலர் என இரு பொருள் பட்டமை காண்க.

"குழல்வளர் — வாய்வைத்து ஊத -சிலப். 4-15,16

எனச் சொல் வேறுபடாது பொருள் வேறுபட்ட சரூபம்வந்தவாறு காண்க.

அஃது இஃது உஃது என்னும் சுட்டு முதலாகிய ஆய்தக் குற்றுகரமும், அது இது உது என்னும் முற்றுகரமும் பொருட் புணர்ச்சிக்கண் உயிரோடு புணருங்கால் அஃதழகியது இஃதழகியது உஃதழகியது என நிற்கும்.

அஃது, இஃது, உஃது என்னும் குற்றுகரமும், அது இது உது என்னும் முற்றுகரமும் உருபு புணருங்கால், அன்சாரியை பெற்றும் ஆய்தம் கெட்டும் உருபு ஏறியும் அதனை இதனை உதனை என நிற்கும், இவை பொருள் வேறுபடாது சொல் வேறுபட்ட சரூபம், ஈண்டும் எடுத்தல் படுத்தல் கொள்க.

செம்பொன்பதின்பலம், குன்றேறுமா, குறும்பரம்பு, நாடியாது, எட்டியாது, எட்டு, கொட்டு, தாமரை - இவை சொல்லும் பொருளும் வேறுபட்ட சரூபம், ஈண்டும் எடுத்தல் படுத்தல் கொள்க."
-பி.வி. 40 உரை

அவற்றை -அவ்+வற்று+ஐ என்பது, அவை +வற்று+ஐ என்பது அவற்றை என முடியும்.

நிறு, கூ ஏ என்பன ஒருபொருள; சொல், விள் என்பன ஒருபொருள.]

## ஓசை நான்கு

127 எடுத்தல் படுத்தல் இரண்டே ஓசை;
நலிதல் விலங்கலொடு நான்குஎன் பார்சிலர்;
மூன்றுஎனத் துணிந்தே மொழிகுவர் பலரே.

என்பது வெளி,

[வி-ரை : ஐ-விலங்கல் ஒலி உடையது. பிரயோகவிவேக நூலார் எடுத்தல் படுத்தல் நலிதல் என்ற மூன்றனையே கொண்டார். "நலிதலை ஈறும் ஈற்றயலுமாக உடைய செய்யுளுறுப்பைச் சுரிதகம் என்பர். உருவகம் தீவகம் என்பது போலச் சுவரிதகம் என்பது சுரிதகம் என நின்றது. தமிழ் நூலுரைகாரர் சுரிந்து இறுதலின் சுரிதகம் என்பது அறியாமை". பி. வி. 40 உரை.]

41

## ஒரு சாரார் கூற்று

128 ஒருபொருட் கேபல வாய்பாடு வருதலும்,
பலபொருட் கேஒரு வாய்பாடு வருதலும்,
உளஎனமொழிப உணர்ந்திசி னோரே.

எ-டு:

செய்து செய்பு செய்யா, செய்யூ;

ஆநின்று, கின்று, கிறு

-இவை போல்வன எல்லாம் ஒரு பொருட்கே பல வாய்பாடு வந்தன.

செய்யும் என்பது இருதிணைக்கும், ஆண்பாற்கும், பெண் பாற்கும், ஒருமைக்கும், பன்மைக்கு, முற்றிற்கும், எச்சத்திற்கும்,

நிகழ்காலத்திற்கும், எதிர்காலத்திற்கும் பொருந்திநிற்கும், செய்யா என்னும் வாய்பாடு (67) உண்டு என்னும் வாய்பாடு (85) முதலியனவும் அது. அவை வினையியலுள் காட்டினும். இவை போல்வன எல்லாம் பல பொருட்கு ஒரு வாய்பாடு வந்தன.

ஒரு பொருட்கு ஒரு வாய்பாடு தாமே விளங்கலின் கொண்டிலம் என்க. 42

## சொற்பொருள் உரைக்க ஏதுக்கள்

129 பொருள்அதி காரம் முன்னம் உத்தி
வெளிப்படை குறிப்பே மெய்பாடு அன்மொழி
ஒட்டுஆகு பெயரே உவமை இறைச்சி
உபசாரம் ஆசை உள்மயக்கு ஆதி
ஏதுவாக இயம்புவர் சொற்பொருள்.

இப்பதினைந்தும் காரணமாக இடன் அறிந்து சொற்குப் பொருள் உரைப்பர் என்றவாறு.

'ஆதி' என்றதனால் ஞாபகம், உடம்பொடு புணர்த்தல், இலேசு, குறை, வேண்டா கூறல், சொல்லாற்றல், பொருள் ஆற்றல், தாற்பரியம், செய்யுள் விகாரம், இருவகை வழக்கு, திசை வழக்கு, மரூஉமொழி, பொது, சிறப்பு, தன்மதம், பிறர்மதம், வினை, சார்பு, இனம், இடம்-இவ்விருபத்தொன்றும் ஒழிந்தனவும் காரணமாகக்கொண்டுபொருள் உரைப்பர் என்க. பெரும்பான்மை வருவனவற்றை எடுத்தோதிச் சிறுபான்மை வருவனவற்றை 'ஆதி' என்பதனால் தழுவினம் என்க.

பொருள் காரணமாகச் சொற்பொருள் உணர்த்தலாவது முன்பே தனக்கு வேண்டிய பொருளைக் கருதி கொண்டு பின்பு அப்பொருளுக்கு ஏற்க சொற்பிரித்துச் சந்தி கூட்டுதல்,

'தவரடி புனைந்த தலைமையோன்' -சி. பொ. பாயிரம். 11
இத்தொடருக்கு தவருடைய அடியைப் புனைந்த அன்பிற் பெரியோன் என்று தவத்தோராலே தன்னுடைய அடியைப் புனையப்பட்ட அறிவிற்பெரியோன் என்றும் கூறுக.

'விந்துவின் மாயையாகி' -சி. சி.1 சூ. 19

இத்தொடருக்குச் சுத்தமாயையிலே நின்றும் அசுத்தமாயை பிறந்து என்றும், சுத்தமாயையைப் போல அசுத்தமாயையும் அநாதியே தனியே ஒருமுதலேயாம் என்றும் கூறுக. பின்னதற்குச் சொற்சோதனை 'பரிதியின் ஒரு தான் ஆகி' என்க.

'அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்'

இத்தொடருக்குச் சிவனுடைய சீர்பாத ஞானமானது ஆன்மாவினுடைய ஞானத்தின் கண்ணே கலக்கும் என்றும், ஆன்மாவினுடைய அநாதி ஞானமானது ஆன்மாவினின்றும் வெளிப்படும் என்றும் கூறுக.

'உடல்உயிர் கண்அருக்கன் அறிவொளிபோல்'

அத்தொடருக்கு முன்புள்ள 'பொற்பணி போல்' முதலிய முப்பொருளை மறுத்தற் பொருளைக் கருதி உட்கொண்டு, உடல் உயிர் போல் ஒற்றுமை-கண் அருக்கன்போல் வேற்றுமை - அறிவின் அறிவுபோல் பொதுமை என்றும்,

பின்பு உள்ள 'பிரிவு அரும் அத்துவிதம்' ஆகிய ஒரு பொருளை உடன்படற் பொருளைக் கருதி உட்கொண்டு, உடலும் உயிரும் தோன்றின இடத்துத் தோன்றும் அறிவைப் பிரிக்கப் படாதது போலவும்-கண்ணும் அருக்கனும் கூடின இடத்துத் தோன்றும் ஒளியைப் பிரிக்கப்படாதது போலவும் என்றும் கூறுக செம்பொன்பதின்பலம் முதலாயினவும் அது.

அதிகாரம் காரணமாகச் சொற்பொருள் உரைத்தலாவது:

'கூடில் இன்பம் பிரியின் துன்பம்'

என்னும் தொடர் அகச் செய்யுட்கண்வரின்-தலைவியை தலைவன் புணரில் அளவில் இன்பம்; ஓதல் பகை தூது துணை பொருள் முதலியவற்றால் உடன்படாது நீங்கில் அளவில் துன்பம் என்றும்,

புறச் செய்யுட்கண்வரின் - கற்றோருடன் கலைபயின் அளவுபட்ட இன்பம்; நித்தியம் நைமித்திகம் காமியம் முதலிய விரதங்களால் உடன்பட்டுப் பயிறல் ஒழியின் அளவுபட்ட துன்பம் என்றும் கூறுக.

முன்னம் காரணமாகச் சொற்பொருள் உணர்த்தலை நன்னூலார்,

'முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே' -நன்.408

எனத் தொகுத்தார்.

தொல்காப்பியர்,

'இவ்விடத்து இம்மொழி' -தொ. பொ. 519

என்னும் சூத்திரத்தால் விரித்தனர். அவற்றுள் காண்க.

உத்தி காரணமாகச் சொற்பொருள் உணர்த்தலைத் தொல் காப்பியர் அறுபத்துநான்கு கூறாக விரித்தனர். அவற்றுள் காண்க. ஏனையவற்றை விரிக்கின் பெருகும் என்க.

மெய்ப்பாட்டியலுள் மெய்ப்பாடு காண்க.

ஒட்டுத் தண்டியலங்காரத்துள் காண்க.

'இறைச்சி தானே பொருட்புறத் ததுவே'

இது தொல்காப்பியம். (பொருள் 229).

'உணர்ந்ததை மறத்தல் உள்மயக்கு என்ப'

இஃது உரைச் சூத்திரம்.

இப்பொருள்கோள்கள் ஆற்றுநீர் முதலிய ஒன்பதுவகைப் பொருள்கோளினும், இச்சூத்திரத்திற்குப் பின்புள்ள எழுவகைப் பொருள்கோளினும் அடங்கா என்க.

இச்சூத்திரவிதி தொல்காப்பியப் பொருளதிகாரத்தினும், கலித்தொகையினும், பரிபாடலினும், தண்டியலங்காரத்தினும் பெரும்பான்மை வரும். ஏனை இலக்கண இலக்கியங்களில் சிறுபான்மை வரும் என்க.

[வி-ரை:

உத்தி - 'நூற்பொருள் வழக்கொடு' -ந. 15

என்ற நன்னூலான் அறிக. பட்டாங்கு உரைத்தலே உத்தி எனவும் நுதலிப்புகுதல் முதலியன உத்திவகை எனவும்

பேராசிரியர் குறிப்பிடுவார். தொல்காப்பியனார் தம் நூலின் இறுதி நூற்பாவில் உத்திவகை முப்பத்திரண்டும் உத்தி இனம் முப்பத்திரண்டும் குறிப்பிட்டுள்ளார்.

வெளிப்படை குறிப்பு என்பன - 'ஒன்றொழி பொதுச்சொல்' என்பதனால் பெறப்படும். -ந. 269

மெய்ப்பாடு - 'உய்த்துணர் வின்றித் தலைவரு பொருளின்' என்ற நூற்பா முதலியவற்றால் கொள்ளப்படும்.- தொ.பொ. 516

அன்மொழி - 'பண்புதொகை வரூஉம் கிளவி யானும்' என்பதனால் கொள்ளப்படும். -தொ. சொ. 418

ஒட்டு - 'கருதிய பொருள்தொகுத்து' -தண்டி 51 என்பதனால் கொள்ளப்படும்.

ஆகுபெயர் - 'முதலிற் கூறும்' -தொ.சொ. 114

'அவைதாம், தத்தம் பொருள்வயின்' 'அளவும் நிறையும்'

'கிளந்த அல்ல' -தொ.சொ. 115, 116, 117

பொருள்முதல் ஆறோடு' -ந. 290

என்பனவற்றால் கொள்ளப்படும்.

உவமை - 'வினைபயன் மெய் உரு' -தொ.பொ. 276

முதலிய நூற்பாக்களால் கொள்ளப்படும்.

இறைச்சி 'உடனுறை உவமம்' -தொ. பொ. 420

'இறைச்சிதானே, 'அன்புறு தகுந' இறைச்சியிற் பிறக்கும்'
-தொ. பொ. 229, 30, 31

என்ற நூற்பாக்களால் கொள்ளப்படும்.

உபசாரம் - ஒன்றனை மற்றொன்றாகக் கூறும் மரபு.

ஆசை - விருப்பினால் மிகுத்தும் குறைத்தும் திரியக்கோடல்.

ஞாபகம் - கூறாததனை அறிவுறுத்தல்.

உடம்பொடுபுணர்த்தல் - நூற்பாவிலேயே ஒரு செய்தியை யாப்பில் அமைத்துப் பின்னோர் பின்பற்ற வாய்ப்பளித்தல்.

இலேசு - மிகைச்சொல்.

குறை - கூறுது விடுக்கப்பட்ட சொல்.

வேண்டா கூறல் - பின்வேண்டியது விளக்கத் தேவையற்ற ஒன்றை 'குறையை இன்றும் கூறின் பெருகும்' (41) என்பது போலக் கூறுதல். 'ஏனை உயிரே' 'ஏனைப்புள்ளி'

-தொ. சொ. 124, 129

என்ற விளிமரபுச் சூத்திரங்களும் அது.

தாற்பரியம் - நேரிய பொருளன்றிப் போந்த பொருள்.

செய்யுள்விகாரம் - வலித்தல் முதலிய ஆறும், மூவகைக்குறையும் ஆகிய ஒன்பது.

இருவகை வழக்கு - உலக வழக்கு, செய்யுள் வழக்கு.

'இலக்கணமுடையது' -ந. 267.

என்ற நூற்பாவில் கூறும் இயல்பு வழக்கும் தகுதி வழக்குமாம்.

திசை வழக்கு - 'திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்'

-தொ.சொ. 449.

என்பது போல்வன.

மரூஉ மொழி - 'மருவின் தொகுதி' 'மீனை மரீஇய' 'முன்னென்கிளவி' 'வழங்கியல் மருங்கின்'

-தொ.எ. 111, 250, 355, 483.

முதலிய நூற்பாக்களால் சுட்டப்பட்டவை.

பொதுவிதி, சிறப்புவிதி, தன்மதம் - வெளிப்படை. பிறர்மதம், 'பண்ணைத் தோன்றிய' -தொ.பொ. 239

முதலிய நூற்பாக்கள் போல்வன.

வினை - மாப் பூத்தது; சார்பு - கவசமணிந்து மாக்கொணு என்பது; இனம் - மாவும் மருதும் ஓங்கின; இடம் - மாமறுத்த மலர்மார்பு; இவை பலபொருள் ஒருசொல் சிறப்பாக ஒரு பொருளை உணர்த்துவதற்கு உரிய நிலைக்களன்கள்.

'வினைசார்பு இனம் இடம்' -ந. 395

என்ற நூற்பாவைக் காண்க.

நித்தியம் - நாடோறும் செய்வது.

நைமித்திகம் - நாடோறும் செய்வதன்கண் நிகழும் குறைவு தீரச் சிறப்பகச் செய்வது.

காமியம் - ஒரு பயன் கருதி செய்வது.

முன்னம் - அகச்செய்யுள் உறுப்புப் பன்னிரண்டனுள் ஒன்ருகிய குறிப்பு.

இச்சூத்திரத்துக்குப் பின்புள்ள எழுவகைப் பொருள்கோள் 'உயர்திணை இயற்பெயர்' (130) என்னும் நூற்பாவினுள் கூறப் பட்ட ஏழும்.] 43

## பிரிவு ஏழு

130. உயர்திணை இயற்பெயர் அஃறிணை இயர்பெயர்
உயர்திணைப் பொருளில் சாதி ஒருமை
அஃறிணைப் பொருளில் சாதி ஒருமை
உயர்திணைப் பொருளில் சாதிப் பன்மை
அஃறிணைப் பொருளில் சாதிப் பன்மை
ஒரு சொல் நின்றே தனித்தனி உதவுதல
எனப்பிரிவு ஏழ் என்று இயம்புவர் புலவர்.

எ-டு:

இறை என்னும் உயர்திணை இயற்பெயர் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய்நின்று, வருமொழி வந்தபின்பு இறைவன் வந்தான், இறைவர் வந்தார் என நிற்கும்.

கோ, வேந்து, அரசு, அமைச்சு, கவி. பெண்டு, வேசை, உமை தையல், பேதை - [பெதும்பை முதலாயினவும் அது] இவை கோன் கோக்கள், வேந்தன் வேந்தர், அரசன் அரசர், அமைச்சன் அமைச்சர், கவிஞன் கவிஞர், பெண்டாட்டி

பெண்டுகள், வேசையாள் வேசையார், உமையாள் உமையார், தையலாள் தையலார், பேதையாள் பேதையார்,[பெதும்பையாள் பெதும்பையார் முதலாயினவும் அது] என இங்ஙனம் விரியும் என்க.

அஃறிணை இயற்பெயர் - வெளி.

'சிவிகை பொறுத்தான்' -கு.37

வறியவன் இரந்தான்

'தானும் அதனை வழங்கான் பயன்வ்வான்' -நாலடி. 276

இவை வருமொழி நோக்காமலே தனக்குரியஒருமைப்பாலைவிட்டுப் பன்மைப்பாலையே விளக்குதலால் உயர்திணைச் சாதி ஒருமை ஆயிற்று. இவ்விதியை மறந்து சிவிகை பொறுத்தார் எனக் குறளைத் திருத்தினரும் உளர். அவர்,

'இல்வாழ்வான் என்பான்' -கு. 41

'அவ்வித்து அழுக்காறு உடையானை' -கு. 167

'உடையான் அரசருள் ஏறு' -கு. 381

'செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை' -கு. 1151

என முப்பாலினும் (அறம், பொருள், காமம்) மிகவும் பரந்து பெரும்பான்மை வருதலை நோக்கிலர் போலும். இவற்றைத் திருத்த மறந்தனர் போலும் என்க.

'நூல்எனப் படுவது நுவலுங் காலை' தொ. பொ. 478

'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்' -கு. 428

'உலகத்தார் உண்டென்பது இல்லென்பான்' -கு. 850

'நேர்வது நாடு' -கு. 733

'விளைவது நாடு' -கு. 732

இவை வருமொழி நோக்காமலே தனக்குரிய ஒருமைப்பாலை விட்டுப் பன்மைப்பாலையே விளக்குதலின், அஃறிணைச் சாதி ஒருமை ஆயிற்று.

'எண்என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு' -கு. 392

இதனுள் உயர்திணைச் சாதிப்பன்மையும், அஃறிணைச் சாதிப் பன்மையும் காண்க.

'கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்' -கு. 567

'பொருள்கருவி காலம் வினைஇடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்' -கு. 675

இவற்றுள் அரம் என்பதும் ஒடு என்பதும் ஒரு சொல் நின்றே தனித்தனி உதவுதல் காண்க. முதல்நிலைத் தீவகம் இடைநிலைத் தீவகம் கடைநிலைத் தீவகம் முதலாயினவும் அது.

இவ்வேழும் நின்றநிலை தப்பிப் பிரிந்தது காண்க. இவற்றுள் உயர்திணை இயற்பெயர் இல்லை என்பாரும், அஃறிணை இயற்பெயரும் சாதி ஒருமையும் ஓர் இலக்கணமே என்பாரும், உயர் திணைச் சாதி ஒருமையும் அஃறிணைச் சாதி ஒருமையும் ஓரிலக்கணமே என்பாரும், சாதிப்பன்மை இல்லை என்பாரும், ஒரு சொல் நின்று தனித்தனி உதவுதலைப் பொருள்கோளினும், பிரிப்பு எச்சத்தினும் அடங்குவாரும் உளர். அவர் இலக்கண நுட்பம் கூர்ந்திலர் போலும். அவர்களை மறுக்கில் பெருகும் என்க.

இப்பிரிவு ஏழும் ஒன்பது பொருள்கோளில் அடங்கா.

[வி-ரை: பிரயோகவிவேக நூலார் 50-ஆம் காரிகை உரையில், சாதி ஒருமையைச் சாதிஏகவசனம் என்பர்.

''அஃதாவது, ஒருசொல் ஒருமையீறு தோன்ற நின்றும் தோன்றாது நின்றும் பின் ஒருமைப் பன்மை வினையீறாக மேல் வந்து முடிக்கும் சொற்களும் இன்றித் தானே பன்மைப் பொருள் உணர்த்துவது.

'ஈறு தோன்றிய சாதி ஒருமையும்

ஈறு தோன்றாத சாதி ஒருமையும்

என இரு திறப்படும் இருதிணை மருங்கினும்'.

இஃது உரைச் சூத்திரம்.

'சிவிகை, பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை' (கு. 37) என உயர்திணைக்கண் வரும், இதனை, தொல்காப்பியத்துள் 'மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்' – (சொல். 449) என்பதனால் அடக்குவர் நச்சினார்க்கினியர் என்க... — ...

இனி அஃறிணைக்கண்ணும் 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை (கு 428) எனத் திருவள்ளுவரினும், 'நூலெனப் படுவது நுவலுங் காலை' எனத் தொல்காப்பியத்தினும் (பொ. 478) ஈறு தோன்றிய சாதி ஒருமை வரும்.

தென்புலத்தார் தெய்வம்' – (கு. 43) 'குணம் என்னும் குன்றேறி நின்றார்' (-கு. 29) என்புழிக் குணம்-தெய்வம் என ஈறு தோன்றாச் சாதி ஒருமை வரும். அவற்றின் உரையானும் காண்க.

'கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும் – நாவாயும் ஓடா நிலத்து' -(கு. 496). 'வேலாண் முகத்த களிறு' -(கு. 500) என்புழிப் பன்மை வினைச்சொல்லோடும் பன்மை வினைக்குறிப்புப் பெயரோடும் முடிந்தனவாயினும் அவற்றின்கண் சாதி ஒருமை என்னுமை காண்க. (அவை அஃறிணை இயற்பெயராம்.)

'எண்என்ப ......... உயிர்க்கு' -(கு. 392). 'கற்க — — ... தக' (கு. 391). இவற்றையும் வடநூலார் சாதிப் பன்மை என்பர்.

'கடுமொழியும் ....... அரம்' - (கு. 567) என்புழி, அரம் என்னும் ஒருமைப் பெயரை வாக்கிய பேதமாகத்தனித்தனி கூட்டி முடிப்பதனைத் தேர் வடம் இழுப்பார்போலப் 'பிரத்யேக பந்தாந் நுவயம்' என்பர்'' என்று குறிப்பிட்ட செய்திகளை இவ்வாசிரியர் உட்கொண்டுள்ளமை காண்க.] 44

## நூற்புறனடை

131. இலக்கணம் இலக்கியம் உரைஎனப் பெயர்பட்டு
இருக்கும் என்று எண்ணுக செய்யுளின் இயல்பே.

இலக்கணமும் உரையும் செய்யுளாமோ எனின்,

'சூத்திரம் குறித்த யாப்பிற் றாகும்'

'பல்வகைத் தாதுவின்' - ந. 268

'நூற்பா அகவல்'

எனப் பலரும் ஓதுதலானும்,

'சூத்திரமும் செய்யுளாகலின்'

என நச்சினார்க்கினியர் எழுதுதலானும்,

[இப்பாயிரமும் செய்யுளாகலின் இங்ஙனம் மாட்டுறுப்பு நிகழக் கூறினார். தொ. சி. பா. நச்.]

'விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும்' (பரி. உரை)

'பொருப்பு வில்லிபா விருப்பம் இவரே'

என வாசகங்களைச் செய்யுள் உறுப்புத்தோன்ற எழுதுதலானும்,

உண்டான் தின்றான் ஓடினான் பாடினான்'

என உதாரணங்களை அவ்வுறுப்புத்தோன்ற எழுதுதலானும், இலக்கணச் செய்யுள் - இலக்கியச்செய்யுள் - உரைச்செய்யுள் -

உரைச்சூத்திரம் எனப் பலரும் ஆளுதலானும், வடநூலாரும் இவ்வாறு கொள்ளுதலானும், இன்னும் பலவாற்றானும் என்க. செய்யுள் என்னும் சொற்குப் பொருள் ஓர்ந்தும் உணர்க.

[வி-ரை:

நூற்பாவும் உரையும் செய்யுளாதல், 'பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே' (தொ. பொ. 391) 'எழுநிலத் தெழுந்த' (தொ. பொ. 476) 'அளவதாம், நூலினை' (தொ. பொ. 477) என்ற தொல்காப்பிய நூற்பாக்களானும் உணரப்படும்.

விக்குள், பாய்த்துள் என்பனபோலச் செய்யப்படுவது செய்யுள் என உள் என்னும் தொழிற்பெயர் விகுதி பெற்று நின்றது.

இவர் விளக்கும் முறையும் பதசாரம் எழுதும் முறையும் இவர் மாணுக்கரான சங்கரநமசிவாயப் புலவருக்கு நன்னூல் உரை எழுதப் பெரிதும் பயன்பட்டுள்ளமை காண்க.

தமிழ்மொழி வல்லவராய், வடமொழி இயல் உணர விரும்புவார்க்கு இந்நூல் நன்கு பயன்படுமாறும் அறிக.] 45

❋❋❋

ஒழிபியல் முற்றும்.

❋❋

இலக்கணக்கொத்துரை முற்றும்.

❋❋❋

# இலக்கணக்கொத்து

## நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை

# எடுத்துக்காட்டுத் திருக்குறள் அகரவரிசை

# எடுத்துக்காட்டுப் பிறசெய்யுளடி அகரவரிசை

# எடுத்துக்காட்டு நூற்பாக்கள் அகர வரிசை

————

# எடுத்துக்காட்டுத் தொடர் அகர வரிசை

# எடுத்துக்காட்டுச் சொல் அகரவரிசை

| எடுத்துக்காட்டு | பக்க எண் |
|---|---|

# இலக்கணச் செய்தி அகரவரிசை

| செய்தி | பக்க எண் |
| --- | --- |

| செய்தி | பக்க எண் |
|---|---|
| இயற்றுதல் கருத்தா | 147 |
| இரட்டைக் கிளவி | 327 |
| இரண்டை உணர்த்தும் நூல்கள் | 70 |
| இருவகை எச்சத்தினுக்கும் பொதுவினை | 192 |
| இருவகை எச்சமாகும் பகுபதம் | 309 |
| இருவகை எச்சமும் முற்றாதல் | 226 |
| இருவகை ஓரிடம் | 162,163 |
| இருவகைச் செயப்படுபொருள் கருத்தா | 142 |
| இருவகை நூல் பிறிதின் கிழமை | 161 |
| இருவகை முற்றும் ஈரெச்சமாதல் | 226 |
| இருவகை வழக்கு | 344 |
| இருவரின் முடியும் ஒருவினை | 164 |
| இருவர் மாறுகோல் ஒருதலை துணிவு | 94 |
| இருவினை முதலால் ஒருவினை | 164 |
| இலக்கணம் | 90,349 |
| இலக்கியம் | ,, |
| இலேசு | 344 |
| இவற்றின் வேறுதல் (ஏவுதல் இயற்றுதல்) | 147 |
| இழிந்தோன் ஏற்றல் | 155 |
| இறைச்சி | 343 |
| இறையனார் அகப்பொருள் முதலியன | 102 |
| இனம் | 344 |
| இன்மை பிறிது மறை பற்றிய உபசர்க்கங்கள் | 273 |
| இன்மையின் ஐவகை | 274 |
| ஈது ஒரு நூல் அன்றே | 84 |
| ஈருருபு இணைந்து இருவகைப்படும் செயப்படுபொருள் | 149 |
| ஈவோன் ஏற்றல் | 155 |
| உடம்பொடு புணர்த்தல் | 344 |
| உணர்வின்றி ஏற்றல் | 156 |

| செய்தி | பக்க எண் |
|---|---|

செய்தி பக்க எண்

| செய்தி | பக்க எண் |
|---|---|

செய்தி பக்க எண்

செய்தி பக்க எண்

| செய்தி | பக்க எண் |
|---|---|
| தன்மை மாத்திரம்தானாய் நிற்றல் | 307 |
| பகாப்பதச் சொற்படல் | 310 |
| பகாப்பதப் பொருள் படல் | 309 |
| பகாமையை ஏற்றல் | 311 |
| பகுத்தலை ஏற்றல் | ,, |
| பகுத்தல் பகாமை இரண்டும் ஏற்றல் | ,, |
| பகுபதம் பகாப்பதமாகக் கோடல் | 308 |
| பல சொல் ஒரு பொருளாகப் படுதல் | 312 |
| பல பொருள் ஒரு சொல்லாகப் படுதல் | ,, |
| பெயர்ச்சொல் முதலா நான்கினும் பிறத்தல் | 308 |
| பெயர்தான் அறுவகையாகப் பிரிதல் | 308 |
| பொருந்தும் விகுதிகள் பொருந்துதல் | 303 |
| வினைக்குறிப்புப் பெயர் எனப் பெயர் பெறல் | 309 |
| வினைக்குறிப்பு முற்று எனப் பெயர் பெறல் | ,, |
| வேற்றுமை உவம உருபுகள் இடைநிலை சாரியை நான்கும் தனித்தும் பொருந்துதல் | 304 |
| வேற்றுமைப் பொருள்களை ஏற்றுநிற்றல் | ,, |
| —என்பனவாம் | |
| பகுபதம் முதலியவற்றுள் எட்டுஉருபு தோன்றுதல் | 132 |
| படுத்தல் ஓசை | 339 |
| படுதொகையொடும் தொகை ஏழு என்பது | 215 |
| பண்பு அடியான வினை | 199 |
| பண்பு நீக்கம் | 159 |
| பண்புத்தொகையுள் இயற்பெயரும் சிறப்புப்பெயரும் மாறுதல் | 269 |
| பண்புத்தொகையுள் இருபண்பு அடுத்தல் | ,, |
| பண்புத்தொகையுள் இருபண்பொடு பொருள் அடுத்தல் | ,, |
| பண்புத்தொகையுள் இருபதம் தமிழ் மொழி ஆதல் | 270 |
| பண்புத்தொகையுள் இருபதம் வடமொழியாதல் | ,, |
| பண்புத்தொகையுள் இருமொழி ஆகுபெயராதல் | ,, |

செய்தி பக்க எண்

## இப்பதிப்பில் எடுத்தாளப்பட்ட நூல் முதலியவற்றின் சுருக்கெழுத்து விளக்கம்

அகநா. — அகநானூறு
ஆசார. — ஆசாரக்கோவை
இ. கொ. — இலக்கணக்கொத்து
இ. வி. — இலக்கண விளக்கம்
எ. பா. — எடுத்துக்காட்டுப் பாடல்
கலி. — கலித்தொகை
கு. — குறள்
குறுந். — குறுந்தொகை
கோவை. — திருக்கோவையார்
சி. சி. — சிவஞானசித்தியார்
சி. சி. சு. — சிவஞான சித்தியார் சுபக்கம்
சி. சி. பா. — சிவஞான சித்தியார் பரபக்கப்பாடல்
சி. போ. பா. — சிவஞான போதப் பாயிரம்
சி. போ. வெ. — சிவஞான போத உரைவெண்பா
சிலப். — சிலப்பதிகாரம்
சிவ. — சிவப்பிரகாசம்
சீவக. — சீவகசிந்தாமணி
சு. தே. — சுந்தரர் தேவாரம்
சே. சேனா. — சேனாவரையர் உரை
தண்டி. — தண்டியலங்காரம்
திருவருட். — திருவருட்பயன்
திருவா. — திருவாசகம்
திருவாய். — திருவாய்மொழி
திவ். பிர. — திவ்வியப் பிரபந்தம்
தேவா. — தேவாரம்
தொ. எ. — தொல்காப்பிய எழுத்ததிகாரம்
தொ. சி. பா. — தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம்
தொ. சொ. — தொல்காப்பியச் சொல்லதிகாரம்
தொ. பொ. — தொல்காப்பியப் பொருளதிகாரம்
ந. நச். — நச்சினார்க்கினியர் உரை
ந. — நன்னூல்
நன். சிற. பாயி. — நன்னூல் சிறப்புப்பாயிரம்
நன். விரு. — நன்னூல் விருத்தி

| | |
|---|---|
| நன். வினை. | — நன்னூல் வினையியல் |
| நாலடி. | — நாலடியார் |
| நே. எ. | — நேமிநாதம் எழுத்துப்படலம் |
| நே. சொ. | — நேமிநாதம் சொற்படலம் |
| பதிற்று. | — பதிற்றுப்பத்து |
| பரி. உரை. | — பரிமேலழகர் உரை |
| பி. வி. | — பிரயோக விவேகம் |
| புறநா. | — புறநானூறு |
| மலைபடு | — மலைபடுகடாம் |
| முத்தி. | — முத்தி இலம்பகம் |
| முருகு. | — திருமுருகாற்றுப்படை |
| மு. வீ. | — முத்துவீரியம் |
| முனிவர். | — சிவஞானமுனிவர் |
| யா. கா. | — யாப்பருங்கலக்காரிகை |
| யா. கா. ஒ. | — யாப்பருங்கலக்காரிகை ஒழிபியல் |
| வி. வணக்கம் | — விநாயக வணக்கம் |
| வீர. | — வீரசோழியம் |

